


எங்கள் வரும்படியில் குடும்பத்தை நிர்வகிப்பது சுலபமான காரியமில்லை. அன்றைக்கு என் கணவர் கடைக்குப்போய் சாமான் வாங்கிக்கொண்டு வருகிறேன் என்றார். அவர் திரும்பி வந்ததும் எனக்குத் 'திக்'கென்றது. ஒரு பத்து பவுண்டு டால்டா வனஸ்பதி டின்னை வாங்கிக் கொண்டு வந்திருந்தார்.

நான் என்னவென்றால் தேவையான தாவரக்கொழுப்பைச் சில்லறையாக வாங்கி செலவைக் குறைக்கப் பாடுபடுகிறேன். அவர் என்னவென்றால் திடுதிப்பென்று ஒரேயடியாக டால்டா வனஸ்பதியை வாங்கிக் கொண்டு வந்து நிற்கிறார். இவரும் ஒரு வியாபாரியாம்!

ஆனால், வழக்கம்போல் கடைசியில் அவர் செய்ததுதான் சரியாகப் போயிற்று. தாவரக் கொழுப்பைப் பற்றி அவர் இதையெல்லாம் எடுத்து சொன்னார் ... எங்களுடைய மூன்று குழந்தைகளின் ஆரோக்கியத்திற்குப் பிறகுதான் மற்றவை. எவ்வளவு விலை உயர்ந்ததானாலும் சில்லறையாக விற்கிற தாவரக் கொழுப்பில் கலப்படங்களைச் சேர்த்து விடலாம் என்பதை என் கணவர் எடுத்துச்சொன்னார். தவிர, அழுக்கடைந்த கைகளும், ஈக்களும் பலவகையான அசுத்தங்களை அதில் சேர்த்து விடலாம். "இதைத்தவிர்க்க ஒரே ஒரு வழிதான் இருக்கிறது" என்று என் கணவர் சொன்னார். "தாவரக்கொழுப்பை சீல்செய்த டின்னில் வாங்கவேண்டும்." டால்டா வனஸ்பதியை தேர்ந்தெடுத்ததற்கும் அவர் பதில் தயாராக இருந்தது. டால்டா வனஸ்பதியைத் தயாரிக்க உபயோகிக்கப்படும் ஒவ்வொரு பொருளும் மிகச்சிறந்ததா என்று பரிசோதிக்கப்பட்டே எடுத்துக் கொள்ளப்படுகிறது. அதனால்தான் அதன்தரம் ஒரேபோல சிறந்ததாயிருக்கிறது. டால்டா வனஸ்பதியில் இப்பொழுது விடமின் 'ஏ', 'டி' சேர்த்திருக்கிறது. 10 பவுண்டு, 5 பவுண்டு, 2 பவுண்டு, 1 பவுண்டு அளவு கொண்ட, காற்றுப்புகாத, சீல் செய்த டின்களில் கிடைக்கிறது. எல்லாவித சமையல்களுக்கும் உகந்த டால்டா வனஸ்பதி எப்பொழுதும் உங்களிடம் புத்தம்புதியதாகவும் சுத்தமாகவும் வந்து சேருகிறது. அன்றிலிருந்து என் வீட்டில் டால்டா வனஸ்பதிதான் உபயோகிக்கிறேன்—நீங்களும் அதையே உபயோகியுங்கள்.

உங்கள் தினசரி சாப்பாட்டில் கொழுப்பு அவசியமா? இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைசரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா வனஸ்பதி

சிறந்த சமையல் — குறைந்த செலவு

HVM. 211-50 TM

## கல்கி
# பொருளடக்கம்

மலர் 13 }
இதழ் 41 }

1954 மே 9

ஜய ௵
சித்திரை 27

## நிருபர்களுக்கு விடுமுறை!

சென்னை மந்திரிசபை

பத்திரிகை நிருபர்

சென்னை மந்திரிகளின் சொற்பொழிவுகளும் அறிக்கைகளும் இப்போதெல்லாம் தினப் பத்திரிகைகளில் அதிகம் வருவதில்லை.

## இதோ வந்து விட்டேன்!

① .......

② ......

③ ....

முகம்மதலி

④ ....

"நில்லுங்கள்! நில்லுங்கள்! நானும் வந்து விடுகிறேன்!"

ஆசிய நாடுகள்

இலங்கையில் நடந்த ஆசியாப் பிரதமர்கள் மகாநாட்டில் பாகிஸ்தான் பிரதம மந்திரி முதலில் தனித்து நிற்கப் பார்த்தார்; பிறகு மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டார்.




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 41

# அந்தக் காலம் மலையேறி விட்டது!

அகில உலகமும் ஆவலுடன் எதிர்பார்த்த ஆசியாப் பிரதமர்கள் மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக, இந்தியா, பாகிஸ்தான், பர்மா, இந்தோனேஷ்ய நாடுகளின் பிரதம மந்திரிகள் கொழும்பில் வந்திறங்கிய போது, அவர்களுக்கு விமான நிலையத்தில் விசித்திரமான வரவேற்பு கிடைத்தது.

அவர்களை வரவேற்பதற்காக அங்கு கூடியிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்களுடன் பெரு மழையும் சேர்ந்து கொண்டது.

எல்லோரும் மழையில் சொட்டச் சொட்ட நனைந்த காட்சியைக் கண்ட இலங்கை மந்திரிகளில் ஒருவர் மிகவும் சந்தோஷப் பட்டாராம்.

"நாம் செய்த பாவங்களை எல்லாம் இந்த மழை அடித்துக் கொண்டு போய் விடும் என்பது நிச்சயம்" என்று மகிழ்ச்சி அடைந்தாராம்.

பிறகு பிரதமர்கள் மகாநாடு ஆரம்பிக்கும் தறுவாயில், புகைப் படம் எடுப்பவர் உபயோகிக்கும் 'பல்ப்' வெடித்து எல்லோரையும் அதிர்ச்சி அடையும்படி செய்து விட்டது.

இதைக் கண்ட இலங்கைப் பிரதமர் சர் ஜான் கொத்தலாவலை சிரித்துக் கொண்டே, "இது நல்ல சகுனம்தான், மகாநாடு அதிர் வேட்டுடன் ஆரம்பமாகிறது" என்று கூறி, மற்றவர்களையும் சிரிக்க வைத்தாராம்.

இலங்கை மந்திரிகளின் வாக்கு வீண் போக வில்லை. அங்கு நடந்த தென் கிழக்கு ஆசியாப் பிரதமர்களின் மகாநாடு மிகவும் வெற்றிகரமாக முடிந்தது.

• • • •

ஆசியா நாடுகளைப் பொருட்படுத்தாமலேயே அவற்றின் விதியை ஐரோப்பிய நாடுகள் கூடி நிர்ணயித்த காலம் மலையேறி விட்டது.

அதற்கு மாறாக, ஆசியா நாடுகள் என்ன முடிவு செய்யப் போகின்றன; உலகத்தின் விதி அந்த முடிவையே பொறுத்திருக்கிறது என்று உலக நாடுகள் கருதும் காலம் இப்போது ஏற்பட்டிருக்கிறது.

பெரும்பாலான ஆசியா நாடுகளும் இன்று பூரண சுதந்திரம் பெற்று விட்டன.

இன்னும் அன்னியர் ஆதிக்கத்தில் சிக்குண்டு தவிக்கும் எஞ்சிய நாடுகளும் சுதந்திரம் பெறுவதற்கு உதவி புரிய வேண்டும் என்று ஆசியா நாடுகள் உறுதி கொண்டுள்ளன.

இந்த நோக்கத்துடன் ஆசியாநாடுகள் மகாநாடு கூடுவது இது முதல் தடவை அல்ல.

தங்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வந்த டச்சுக்காரர்களை எதிர்த்து இந்தோனேஷ்யர்கள் சுதந்திரப் போர் நடத்திய போது, இந்தியாவின் பிரதம மந்திரி ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு நாலு ஆண்டுகளுக்கு முன் புதுடில்லியில் பத்தொன்பது ஆசியா நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய மகாநாட்டைக் கூட்டினார்.

அதன் பலனாக, வெகு காலமாகச் சுதந்திரத்தை இழந்திருந்த இந்தோனேஷ்ய மக்கள் சுதந்திரம் பெற்றனர்.

ஆசியா நாடுகளின் விதி அன்னியர்களின் கையில் இல்லை என்பது உறுதியாயிற்று.

அது போலவே, இப்போது இந்தோ சீனாவும் சுதந்திரம் பெறுவதற்கு இலங்கையில் நடந்த ஆசியாப் பிரதமர்கள் மகாநாடு வழிகோலி யிருக்கிறது.

இந்தோ சீனாப் பிரச்னையைப் பற்றி விவாதிப்பதற்காக ஜினிவாவில் வல்லரசுகளின் மகாநாடு கூடியிருக்கிறது அல்லவா?

அந்த மகாநாட்டில், இந்தோ சீனாவுக்குப் பூரண சுதந்திரம் வழங்குவதே தனது உறுதியான கொள்கை என்று பிரான்ஸ் பிரகடனம் செய்ய வேண்டும் என இலங்கையிலே சர் கொத்தலாவலையின் தலைமையில் கூடிய ஆசியாப் பிரதமர்கள் கருத்து வேற்றுமையின்றி ஏகமனதாக முடிவு செய்திருக்கிறார்கள்.

சிறிதும் தாமதிக்காமல் இந்தோ சீனப் போரை நிறுத்துவதே அப் பிரச்னை தீருவதற்கு முதல்படியென்றும் ஆசியாப் பிரதமர்கள் தங்களுடைய ஏகோபித்த கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

மேற்படி மகாநாட்டை, ஜினிவாவில் கூடியுள்ள வல்லரசுகள் அலட்சியமாகக் கருதவில்லை. அதற்கு மாறாக அம் மகாநாடு தங்களுடன் ஒத்துழைக்க வேண்டும் என்பதில் கவலையும் ஆர்வமும் கொண்டிருக்கின்றன.

இந்த உண்மை, ஆசியாப் பிரதமர்கள் மகாநாட்டுக்கு ஜினிவாவிலிருந்து பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ அந்தோனி ஈடன் அனுப்பியிருந்த கடிதத்திலிருந்து வெளியாயிற்று.

ஜினிவாவில் இந்தோ சீன விஷயமாக வல்லரசுகள் செய்யும் சமரச முடிவை அமுலுக்குக் கொண்டு வர ஆசியாப் பிரதமர்கள் ஒத்துழைக்க வேண்டும் என்று ஸ்ரீ ஈடன் தமது கடிதத்தின் மூலம் கேட்டுக் கொண்டார்.

ஜினீவா நடவடிக்கைகளை அவர்களுக்கு அப்போதைக்கப்போது தெரிவித்து வருவதாயும் அக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

இதிலிருந்து, ஆசியா நாடுகளின் தயவின்றித் தாங்கள் செய்யும் முடிவு எதுவும் உருப்பட முடியாது என்பதை வல்லரசுகள் உணர்ந்திருக்கின்றன என்று ஏற்படுகிறது அல்லவா !

** ** **

தற்போது உலக அமைதிக்கே முட்டுக் கட்டையாக இருக்கும் இந்தோ சீனப் பிரச்னையைத் தவிர, மற்றும் சில முக்கிய விஷயங்களை ஒட்டியும் ஆசியாப் பிரதமர்கள் தங்கள் தீர்மானத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

1. அணு குண்டு, ஹைட்ரஜன் குண்டு போன்ற நாசகரமான ஆயுதங்களைத் தடுத்து ஒழிக்கும் விஷயமாக ஐக்கிய நாடுகள் சபையின் ஆயுதக் குறைப்புக் கமிஷன் ஒரு சமரசமான முடிவுக்கு வரவேண்டும். மேற் கொண்டு ஹைட்ரஜன் குண்டுப் பரீட்சை நடத்துவதை அறவே நிறுத்திவிட வேண்டும்.

2. ஐ. நா. சபையில் குடியாக சீனாவைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அவ்விதம் சேர்த்துக் கொள்வது, உலக நெருக்கடி தீருவதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

3. இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, இந்தோனேஷியா, பர்மா முதலிய ஆசியா நாடுகளின் நிர்வாகத்தில் அன்னியர் எவரும் தலையிடக் கூடாது. அவ்வாறு தலையிடுவதால், அந்த நாடுகளின் பாதுகாப்புக்கும் சுதந்திரத்துக்கும் ஆபத்து ஏற்பட்டு, ஜனநாயகத்துக்கும் உலக அமைதிக்கும்கூடக் குந்தகம் உண்டாகும்.

வெகு காலமாக ஜவாஹர்லால்ஜி கூறிவந்துள்ள யோசனைகளே ஆசியாப் பிரதமர்கள் மகாநாட்டின் முடிவுகளாக உருப்பெற்றிருப்பதைக் கண்டு இந்தியா பெருமை கொள்ளலாம்.

பூரண சுதந்திரத்துடன் விளங்கும் மேற்படி ஐந்து ஆசியா நாடுகளும், ஜினிவாவில் கூடிய வல்லரசுகள் மகாநாட்டுக்குச் சரியான வழி காட்டியிருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை.

அந்த நாடுகளின் கருத்தை மற்ற எல்லா ஆசியா நாடுகளும் ஆதரிக்கும் என நம்பலாம்.

எனவே, உலக ஜனத் தொகையில் பாதிக்கு மேல் உள்ள ஆசியாவின் கோரிக்கையை ஜினிவாவில் கூடியுள்ள வல்லரசுகள் எவ்வளவு தூரம் நிறைவேற்றப் போகின்றன !

உலகில் நெருக்கடி தீர்ந்து அமைதி ஏற்படுவதும், ஜனநாயகம் தழைத்து ஓங்குவதும், அந்தக் கேள்விக்கு ஜினிவா மகாநாடு அளிக்கப் போகும் பதில் என்ன என்பதையே பொறுத்திருக்கின்றன.

# புதுப் பெயரும் புனர் ஜன்மமும்

வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவோர் இருப்பார்களா !

ஏன், இருக்கத்தான் செய்கிறார்கள் என்று இலங்கை இந்தியர் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டமான் கூறுகிறார்.

ஆசியாப் பிரதமர்கள் மகாநாடு நடந்த அதே சமயத்தில், இலங்கையைச் சேர்ந்த கம்பளையில் நிர்மாணிக்கப்பட்ட அசோக நகரில், இலங்கை இந்தியர் காங்கிரஸின் பதினாலாவது வருடக் கூட்டம் வெகு விமரிசையாக நடைபெற்றது. அதற்குத் தலைமை வகித்த ஸ்ரீ தொண்டமான் தமது அக்ராசனப் பிரசங்கத்தில் மேற்படி உண்மையை வெளியிட்டார்.

இலங்கை இயற்கைச் செல்வம் கொழிக்கும் நாடு; நவரத்னச் சுரங்கப் பொக்கிஷம் நிறைந்த தேசம்; அபரிமிதமாக நல்முத்துக்கள் விளையும் கடற்கரைப் பிரதேசம்; பாடுபட்டுப் பண்படுத்தினால் பொன் விளையக் கூடிய பூமி.

ஆனால், இன்று இலங்கையின் பொருளாதார நிலை திருப்திகரமாக இல்லை. சர்க்காரின் வருமானம் குறைந்து வருகிறது. இலங்கைக்குத் தேவையான உணவுப் பொருள்களில் மூன்றில் இரண்டு மடங்கு வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாக வேண்டியிருக்கிறது. இலங்கைத் தோட்டங்களில் உற்பத்தியாகும் சாதனங்களிலிருந்து இலங்கை சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானம் உலக விலைவாசிகளின் ஏற்றத் தாழ்வைப் பொறுத்ததாக இருப்பதால், சர்க்காரின் வருமானம் நிலையற்று இருந்து வருகிறது. இலங்கை சுதந்திரம் பெற்று ஆறு ஆண்டுகளாகியும், இன்னும் அதே நிலைமை நீடித்து வருவது வருந்தத் தக்கது.

உலக நாடுகளில் பல, வேலையில்லாக் கஷ்டம் நீங்கவும் பொருளாதார சுபிட்சம் ஏற்படவும் பெரு முயற்சி செய்து திட்டங்கள் வகுத்து வருகின்றன. ஆனால், இலங்கை அத்தகைய பலன் தரத்தக்க நடவடிக்கைகளில் ஈடுபடாதது ஏன் !

இந்தக் கேள்விக்கு, ஸ்ரீ தொண்டமான் தமது தலைமைப் பிரசங்கத்தில் பதில் அளித்துள்ளார்.

சென்ற சில வருஷங்களாக, இலங்கை சர்க்கார் இலங்கை இந்தியர்களுக்கு விரோதமாக விசித்திரமான சட்டங்களைத் தயாரிக்கும் விஷயத்தில் தங்களுடைய நேரத்தையும் திறமையையும் செலவு செய்து வருகிறார்கள். இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை மறுக்கும் விஷயமாக அவர்கள் காட்டி வரும் திறமையை, பொருளாதாரச் சுபிட்சத் திட்டம் வகுப்பதில் உபயோகித்திருந்தால், இலங்கையின் பொருளாதார நிலைமை இன்றுள்ள நிலைக்கு வந்திராது என்று ஸ்ரீ தொண்டமான் கூறியுள்ளார்.

இலங்கையில் உள்ள மனித சக்தியை, அதாவது இந்தியர் சமூகத்தின் இணையற்ற உழைப்பை இலங்கை சர்க்கார் பூரணமாக உபயோகித்துக் கொள்ள முற்பட்டிருக்கும் பட்சத்தில், உணவுக்கு இலங்கை பிறநாடுகளை எதிர்பார்க்கும்படியான நிலைமையே ஏற்பட்டிராது.

இலங்கை இந்தியர் காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ வி. அண்ணாமலையும், மற்றும் மேற்படி காங்கிரசில் தீவிர பங்கு எடுத்துக் கொண்ட ஸ்ரீ ராஜலிங்கம், ஸ்ரீ அஜீஸ் முதலிய தலைவர்களும், சமீபத்தில் புதுடில்லியிலே ஏற்பட்ட நேரு–கொத்தலாவல ஒப்பந்தத்தில் தங்களுக்குள்ள அதிருப்தியையும் அதற்கான காரணங்களையும் விவரித்துக் கூறினார்கள்:

இலங்கை இந்தியர் பிரச்னையை ஒட்டி மறுபடியும் சமரசப் பேச்சுகள் ஆரம்பித்துத் திருப்திகரமான முடிவு காணவேண்டும் என்று வற்புறுத்தி மேற்படி காங்கிரசில் தீர்மானம் நிறைவேறியது.

நேருஜியின் அவசர அழைப்புக்கு இணங்க, கம்பளையிலிருந்து கொழும்புக்கு விரைந்து சென்ற இலங்கை இந்தியர் காங்கிரஸ் அக்ராசனர் அத்தீர்மானத்தின் நகலை ஜவாஹர்லால்ஜியிடம் நேரில் கொடுத்துள்ளார்.

சிறிதும் தாமதமின்றி இந்தியா – இலங்கைப் பிரதமர்கள் மீண்டும் சந்திக்க வேண்டும்; தாங்களாக வலுவில் இந்தியாவுக்குச் செல்ல விரும்பும் சிறுபான்மையோரைத் தவிர, இந்திய வம்சா வழியினரான மற்ற எல்லோருக்கும் பிரஜா உரிமை வழங்க வேண்டும்; மற்ற இலங்கைப் பிரஜைகளைப் போல் இந்தியர்களுக்கும், இலங்கையில் வாழவும் வேலை செய்யவும் பூரண உரிமை இருக்க வேண்டும் என்று காங்கிரசில் நிறைவேறிய மற்றொரு தீர்மானம் கூறுகிறது.

இச்சந்தர்ப்பத்தில், ஜவாஹர்லால்ஜியும் இலங்கைப் பிரதமரும் மறுபடியும் சிறிது நேரம் சந்தித்து, இந்தியா – இலங்கை ஒப்பந்தம் எவ்வாறு அமுல் நடந்து வருகிறது என்பதைப் பரிசீலனை செய்தார்கள் என்று தெரிகிறது.

** ** **

இலங்கையிடமும் இலங்கை சர்க்காரிடமும் தங்களுடைய பூரண விசுவாசத்தைத் தெரிவிப்பதற்காக, தாங்கள் இந்தியப் பிரஜைகள் அல்ல என்பதை உலகம் அறியக் காட்டுவதற்காக இலங்கை இந்தியர் காங்கிரஸ் பிரதிநிதிகள் போற்றத் தக்க காரியம் செய்துள்ளனர்.

இலங்கை இந்தியர் காங்கிரசின் பெயரை இலங்கை ஜனநாயக காங்கிரஸ் என்று மாற்றி மேற்படி காங்கிரசில் ஏக மனதாகத் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறார்கள்.

பதினான்கு வருஷம் வனவாசம் செய்த பிறகு ஸ்ரீ ராமபிரான் அயோத்திக்கு வந்து முடிசூட்டிக் கொண்டார். அதுபோல், பதினான்கு ஆண்டுகளாகப் பலவிதமான கடும் சோதனைகளுக்கு உள்ளான இலங்கை ஜனநாயக காங்கிரசும் புனர்ஜன்மம் பெற்று விளங்கும் என்று நம்பலாம் அல்லவா!

ஆசியா நாடுகளுக்கு நீதி கிடைக்க வேண்டும்; ஹைட்ரஜன் குண்டு போன்ற நாசகரமான ஆயுத வகைகள் ஒழிய வேண்டும்; ஜனநாயகம் தழைக்க வேண்டும்; உலக அமைதி நிலவ வேண்டும் என்ற சீரிய லட்சியங்களுடன் ஆசியாப் பிரதமர்கள் மகாநாட்டைக் கூட்டிய இலங்கைப் பிரதமர் சர் ஜான் கொத்தலாவல, தமது நாட்டுப் பிரஜைகளான இந்தியர்களுக்கு நீதி வழங்கத் தயங்கமாட்டார் என்றே உலகம் எதிர்பார்க்கிறது.

# திருத்தணி விவகாரத்தைக் குழப்புகிறார்

ஆந்திர ராஜ்யம் ஏற்பட்டு ஆறு மாதங்களே ஆகின்றன. இதற்குள் இரண்டு பெரும் பிரச்னைகள் ஆந்திர ராஜ்ய சர்க்காரைக் கதிகலங்க அடித்து விட்டன. ஆந்திர ராஜ்யம் ஏற்பட்டதும் ஏற்படாததுமாகத் தலைநகர் சம்பந்தமாய் அங்கு எழுந்த பலாத்காரக் கிளர்ச்சியை அடக்குவதற்கு ஆந்திர சர்க்கார் திண்டாடித் திணறிப் போயினர். பிறகு, ஹைகோர்ட் அமைக்கும் விஷயமாக மேற்படி சர்க்கார் ஆந்திர ராஜ்ய அசெம்பிளியில் தோல்வி அடையவும் நேர்ந்தது. இவ்விதம் ஆந்திர சர்க்காரின் நிலைமை நித்திய கண்டமாக இருந்து வருகிறது. மேற்படி பிரச்னைகளைச் சுமுகமாகவும் திருப்திகரமாகவும் தீர்க்க முடியாமல் தவித்து வரும் ஆந்திர ராஜ்யப் பிரதமர் ஸ்ரீ பிரகாசம்காரு, திருத்தணி விவகாரத்தைக் குழப்ப முற்பட்டிருப்பது விந்தையாக இருக்கிறது.

சித்தூர் ஜில்லாவில் விவாதத்துக்கு இடமான பிரதேசங்கள் பிரச்னையைப் பரிசீலனை செய்வதற்காக விசேஷ எல்லைக் கமிஷன் நியமிக்க வேண்டுமென்று சென்னை சர்க்கார் இந்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், பிரகாசம் காரு இந்திய சர்க்கார் உள்நாட்டு மந்திரி ஸ்ரீ கட்ஜுவுக்கு எழுதியுள்ள கடிதத்தில், "திருத்தணி விஷயமாகச் சென்னை சர்க்கார் கோரும் உரிமை ஆதாரமற்றது. இப்போது அவர்கள் புதிதாக நினைத்துக் கொண்டு திருத்தணி விஷயத்தில் உறவு கொண்டாட முன் வந்திருக்கிறார்கள்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

திருத்தணிக்கும் தமிழ் மக்களுக்கும் உள்ள தொடர்பு மிகத் தொன்மையானது. திருத்தணிகை வேலனும், தமிழ் நாட்டு மலைமகள் வள்ளியும் மணம் புரிந்துகொண்ட இடத்துக்கும் தமிழகத்துக்கும் பண்டையத் தொடர்பு இல்லை என்று யாராவது கூற முடியுமா! எண்ணிக்கையற்ற புனிதத் தமிழ்ப் பாடல்களால் தனிச் சிறப்புற்று விளங்கும் திருத்தணியில் தமிழ் மக்கள் புதிதாக உரிமை கொண்டாட முன் வந்திருக்கிறார்கள் என்று கூற, பிடிவாத குணம் படைத்த ஆந்திர கேசரி பிரகாசத்தைத் தவிர வேறு யாரும் துணிய மாட்டார்கள்.

ஏற்கனவே, சென்னை நகர் விஷயத்தில் ஸ்ரீ பிரகாசம் எவ்வளவு பிடிவாதத்துடன் இருந்து வந்தார் என்பது யாவரும் அறிந்த விஷயம். அவரது பிடிவாதம் தனி ஆந்திர ராஜ்யம் ஏற்படுவதற்கே முட்டுக்கட்டையாக இருந்தது. அப்பிரச்னையை அடிப்படையாகக் கொண்டு சென்னை நகரிலே நடந்த தேர்தலில் ஸ்ரீ பிரகாசம் காரு தோல்வி அடைந்து, ஜாமீனையும் இழக்க நேர்ந்ததை யாரும் மறந்திருக்க முடியாது. அது போலவே, அவர் இப்போது திருத்தணி விஷயமாகவும் பிடிவாதம் காட்ட முற்பட்டிருக்கிறார்.

** ** **

தமிழகத்துக்கும் திருத்தணிக்கும் தொன்மையாக இருந்து வரும் தொடர்பு ஒருபுறம் இருக்கட்டும். 1911–ம் வருஷம் வரையில் திருத்தணி, புத்தூர், சித்தூர் முதலிய பிரதேசங்கள் தமிழ் நாட்டில் உள்ள வட ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்தவையாக இருந்தன என்பதை ஸ்ரீ பிரகாசம் காரு அறியாமல் இருக்க முடியாது. அப்போது நிர்வாக சௌகரியத்துக்காக ஜில்லாக்களை மாற்றி

அமைத்தபோது, சித்தூரைத் தனி ஜில்லாவாகப் பிரித்தார்கள். சுமார் நாற்பது வருஷ காலமாகத் திருத்தணி முதலிய பிரதேசங்கள் சித்தூர் ஜில்லாவில் சேர்ந்திருந்ததற்காக, அவை ஆந்திரர்களின் சொத்தாகி விடுமா !

ஸ்ரீ பிரகாசம் சென்னை அசெம்பிளித் தேர்தலுக்கு நின்றபோது, சென்னை நகர் தமிழ் நாட்டுக்கே சொந்தமானது என்று மக்கள் தீர்ப்புக் கூறியது போலவே, திருத்தணியும் தமிழ் நாட்டைச் சேர்ந்தது என்று திருத்தணி மக்கள் பல மாதங்களுக்கு முன்பே சந்தேகத்துக்கு இடமின்றித் தீர்ப்புக் கூறி விட்டார்கள்.

சென்ற வருஷம் அங்கு நடந்த பஞ்சாயத்து சபைத் தேர்தலில் ஒரே ஒரு ஸ்தானத்தைத் தவிர மற்றவை யெல்லாம் தமிழர்களுக்கே கிடைத்தன. அவ்வாறு, திருத்தணி தமிழகத்தின் ஒரு பகுதி தான் என்பதைப் பொது ஜனங்கள் நிரூபணம் செய்து விட்டார்கள். அப்படியிருக்க, இப்போது ஸ்ரீ பிரகாசம் அப் பிரச்னையைக் கிளறவும் குழப்பவும் முற்பட்டிருப்பது கண்டிக்கத் தக்கது.

சித்தூர் ஜில்லாவைச் சேர்ந்த திருத்தணி, புத்தூர் முதலிய சில இடங்களில் வாழும் மிகப் பெரும்பாலோர் தமிழர்களே. எனவே, இந்த விவகாரத்தைக் காட்டிலும் எல்லைக் கமிஷனின் பரிசீலனைக்கு விட வேண்டிய முக்கிய விஷயம் வேறு என்ன இருக்க முடியும் !

தவிர, சில மாதங்களுக்கு முன், திருத்தணி தமிழகத்தைச் சேர வேண்டும் என்று தமிழர்கள் பெரும் கிளர்ச்சி தொடங்கினர். அப் பிரச்னையை எல்லைக் கமிஷன் கவனித்து முடிவு செய்யும் என்று ஜவாஹர்லால்ஜி உறுதி கூறிய தன்பிறகே மேற்படி கிளர்ச்சி நின்றது. அப்படி யிருக்க, திருத்தணிப் பிரச்னையை எல்லைக் கமிஷனின் பரிசீலனைக்கு விட வேண்டும் என்ற சென்னை சர்க்காரின் கோரிக்கையை, ஸ்ரீ பிரகாசம் இப்போது எதிர்க்க முற்பட்டிருப்பது அவரது பதவிக்கும், வயதுக்கும், கௌரவத்துக்கும் உகந்த காரியம் அல்ல.

தமது இலங்கைக் கடிதம்

# அசோக நகரில்

கொழும்பு, மேமீ 2உ

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பாரதத்தை ஒரு குடையின் கீழ் அசோகச் சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில் தர்மத்தையும் நீதி நியாயத்தையும் அகிலமெல்லாம் பிரசாரம் செய்ய எட்டுத் திக்குகளுக்கும் தூதுவர்களை ஏவினார். அண்டைத் தேசமான இலங்கைக்குத் தமது அருமைப் புதல்வன் மஹிந்தனையும் புதல்வி சங்கமித்திரையையும் அனுப்பி வைத்தார். இந்தத் தர்ம தூதர்கள் விஜயத்தின் பலனாக அழகிய இத் தீவுக்குத் தர்ம த்வீபம் என்ற பெயரும் ஏற்படலாயிற்று. நன்றி கொன்ற அதர்மப் பாதையிலே நாடு சறுக்கி விழும் பேரபாயம் ஏற்பட்டுள்ள இத் தருணத்தில், கம்பளை நகரில் நிறுவிய ஒரு அலங்காரப் பந்தலுக்கு அசோக நகர் என்று நாமகரணம் சூட்டி, இலங்கை இந்திய காங்கிரஸ் தனது பதினாலாவது ஆண்டு விழாக் கூட்டத்தை இவ்வாரம் நடத்தியது.

மகாநாடு கம்பளையில் நடைபெறுவதிலே இன்னொரு விசேஷமும் உண்டு. பாரதத்தின் தவப் புதல்வர் நேருஜி நிறுவிக் கொடுத்த காங்கிரஸின் அங்குரார்ப்பணக் கூட்டம் 14 ஆண்டுகளுக்கு முன்னால் கம்பளையில்தான் நடைபெற்றது. சோதனை மிக்க சமயம் நேருஜி மறுபடியும் இலங்கைக்கு வந்திருக்கையில், 14வது வருடாந்தர மகாநாடு கம்பளையில் நடப்பது மிகவும் பொருத்தமென்று, மகாநாட்டுக்குச் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்த வரவேற்புக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ அண்ணாமலை அழகாகச் சொன்னார்.

## கடைசி நேரத்தில் தடை

பதினான்காவது மகாநாடு என்பதைக் குறிப்பதற்காகப் பதினான்கு யானைகளுடன் ஆரம்பித்த அக்கிராசனர் ஊர்வலம் மகாநாட்டுப் பந்தலையடைந்ததும் காங்கிரஸின் புதிய கொடியை முன்னாள் தலைவர் ஸ்ரீ அஜீஸ் கம்பீரமாகப் பறக்க விட்டு, அதிலுள்ள மஞ்சள் நீல வர்ணங்கள் இந்தியர் சிங்களவர்களையும் இடையிலுள்ள வெள்ளை நிறம் ஒற்றுமையையும் குறிப்பதாகச் சொன்னார். இவ்வருட அக்கிராசனப் பிரசங்கம் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாயிருந்தது. டில்லி ஒப்பந்தத்துக்குப் பின் இலங்கை இந்தியர் நிலைமை எவ்விதம் படிப்படியாக மோசமடைந்துள்ளது என்பதை அக்கிராசனர் ஸ்ரீ தொண்டைமான் தக்க சான்றுகளோடு எடுத்துக் காட்டி, ஒரு தலைப் பட்சமாக நடவடிக்கை யெடுத்து இந்தியர்களை விரட்டுவதற்குத்தான் இந்த ஒப்பந்தம் பயன்படுத்தப்படுவதாகத் தோன்றுகிறதே தவிர, பிரச்னையைத் தீர்க்க உதவுவதாகத் தெரியவில்லை என்றார். ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்ட மறுதினத்திலிருந்தே அதை மீறி அரசாங்கம் காரியங்கள் செய்து வருவதை எடுத்துச் சொல்லிவிட்டு இலங்கை அதிகாரிகள் இந்தக் கடைசி நேரத்திலாவது நல்லெண்ணமும் நியாய சிந்தையும் காட்டாவிடில் ஒப்பந்தம் ஒரு குப்பைக் கடுதாசி யாகிவிடுமென்று எச்சரித்தார்.

நேருஜி கம்பளைக்கு விஜயம் செய்து தொழிலாளர் மத்தியில் பேச எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தும் கடைசி நேரத்தில் அவர் கம்பளைக்கு வர முடியாதபடி அரசாங்கம் தடுத்து விட்டதைக் கண்டித்து மகாநாடு ஒரு தீர்மானம் நிறைவேற்றி அதை இலங்கை, இந்தியப் பிரதமர்களுக்கு அனுப்பி வைத்தது. இதை எழுதுகையில் மகாநாடு தொடர்ந்து நடைபெற்றுவருகிறது.

## இலங்கையில் நேருஜி

இலங்கைப் பொது ஜனங்களுக்குப் பாரதப் பிரதமர் நேருவிடம் எவ்வளவு தூரம் பக்தியும் நன்மதிப்பும் உண்டு என்பதை இவ்வாரம் வெளிநாடுகளிலிருந்து வந்திருக்கும் உலகப் பிரசித்தி பெற்ற பத்திரிகைகளின் விசேஷப் பிரதிநிதிகள் பார்த்துப் பிரமித்துப் போயிருக்க வேண்டும். ஐந்து ஆசியா தேசப் பிரதம மந்திரிகளின் மகாநாட்டுக்காக நேருஜி சென்ற 27ம் தேதி இங்கு வந்தார். அவர் வந்திறங்கிய சமயம் ரத்மலானை விமான நிலையத்தில் பலமான காற்றுடன் மழை கலந்து அடித்துக் கொண்டிருந்தது. அதையும் பொருட்படுத்தாமல் ஆயிரமாயிரமாக ஒரு பிரம்மாண்ட ஜன சமுத்திரம் விமான நிலையத்தில் திரண்டு நின்று தொண்டை நோவெடுத்துப் போகும் வரை ஜே கோஷம் செய்து பாரதப் பிரதமரை வாழ்த்தி வரவேற்றது.

சொட்டச் சொட்டக் கொட்டும் மழையில் மகா ஜனங்கள் நின்ற காட்சி நேருஜியின் கவனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். இலங்கைப் பிரதமர் நீட்டிய குடையையும் வேண்டாமென்று மறுத்து விட்டு மழையில் மக்களின் அருகில் சென்று கரம் குவித்து அஞ்சலி செய்தார். இதே போல இரண்டு மூன்று சந்தர்ப்பங்களில் மழையைப் பொருட்படுத்தாமல் மகா ஜனங்களில் தம்மையும் ஒருவராக மதித்துக் கொண்டு நேருஜி நடந்ததைப் பார்த்த ஒரு பத்திரிகை "வருணனை வென்ற மனிதர் நேரு" என்று எழுதியிருந்தது.

நேரு சென்றவிடமெல்லாம் வர்ணிக்க முடியாத கூட்டம். அவர் ஒரு இடத்துக்கு வரப் போகிறாரென்றால் அங்கு வெகு நேரத்துக்கு முன்னிருந்தே அலை அலையாக மக்கள் வந்து திரண்ட வண்ணமிருந்தனர். இவர்களில் அனேகர் சிங்களவர்கள். இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீ தேசாய் வாசஸ்தலத்தில் விருந்துபசார மென்றால் நூற்றுக் கணக்கில் 'விஸ்கி' போத்தல்கள் காலியாவது வழக்கம். நேருஜிக்கு நடத்திய விருந்தில் இவை தலைகாட்டவில்லை. காப்பி, இளநீர், சோடா முதலியவை மட்டுமே விநியோகிக்கப் பட்டன.

28-ம் தேதி முதல் கொழும்பில் இந்தியா, பர்மா, இலங்கை, பாகிஸ்தான், இந்தோனேஷியா ஆகிய ஐந்து தேசப் பிரதமர்களும் மகாநாடு கூடி ஆசியாப் பிரச்னைகள் பலவற்றையும் பற்றிப் பேசுகிறார்கள். மகாநாடு சுமுகமாக நடைபெறுவதற்குப் பாகிஸ்தான் பிரதம மந்திரி பல முட்டுக் கட்டைகள் போடுவதாயும் இதனால் மகாநாட்டில் என்னும் கொள்ளும் வெடிப்பதாயும் பாகிஸ்தானுக்கு இலங்கை வால் பிடிப்பதாயும் கூறப்படுகிறது. மூன்று தினங்களில் நடந்து முடிய வேண்டிய மகாநாடு இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது. இதை எழுதும் வரை மகாநாட்டு முடிவு விவரங்கள் தெரியவில்லை. ஆசியப் பிரதமர்களுக்கு நடக்கும் விருந்துபசாரங்களிலெல்லாம் அமெரிக்க ஸ்தானிகரும் அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களும் பாகிஸ்தான் பிரதம மந்திரியை வட்டமிட்ட வண்ணமா யிருப்பது அர்த்த புஷ்டியுடைய தென்பதை மகாநாட்டின் போக்கு அறிவுறுத்திக் காட்டுவதாயுள்ள தெனலாம்.

[குறிப்பு:—ஆசியப் பிரதமர்கள் மகாநாடு வெற்றிகரமாக முடிந்து ஒற்றுமையான தீர்மானம் நிறைவேறியுள்ள செய்தி பின்னால் கிடைத்திருக்கிறது. —ஆசிரியர்]

## தமிழ் வளர்க்கும் யாழ்ப்பாணம்

தமிழ் வளர்க்கும் யாழ்ப்பாணப் பெரு மக்கள் சென்ற வெள்ளி, சனி ஞாயிற்றுக் கிழமைகளில் சிலப்பதிகாரத் திருவிழாவை வெகு சிறப்புடன் கொண்டாடித் தங்களுக்கும் தமிழ் கூறும் நல்லுலகுக்கும் புகழைத் தேடிக் கொண்டார்கள். இந்த விழாவுக்கு இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் மட்டுமல்லாது, இந்தியாவிலிருந்தும் பல தமிழ்ப் பேரறிஞர்களைத் தருவித்திருந்தார்கள்.

சரித்திரப் 'பிரசித்தி பெற்ற கண்ணகியம்மன் கோயிலிருக்கும் புங்குடு தீவில் நடைபெற்ற இவ் விழாவைத் தபால் மந்திரி திரு எஸ். நடேசன் துவக்கி வைத்தார். அப்பொழுது பேசுகையில் சிலப்பதிகாரம் தமிழகத்தின் தனிப் பெரும் பொக்கிஷ மென்றும் அதைப் போற்றிப் புகழ்வது தமிழர் கடமை யென்றும் கூறினார். இலங்கையில் கண்ணகி வணக்கத்தைக் கயபாகு என்ற ஒரு சிங்கள மன்னன் ஆரம்பித்து வைத்தா னென்றும் அந்தக் காலத்தில் தமிழர் சிங்களவர் ஒரு குடும்பமாக வாழ்ந்தார்க ளென்றும் குறிப்பிட்டு இன்றைய இலங்கையில் வகுப்பு சௌஜன்யத்தின் அவசியத்தை அவர் வற்புறுத்தினார். முதல் நாள் பிற்பகல் விழாவுக்குத் தமிழ்மறைக் கழகத் தலைவர் பண்டித கா. பொ. ரத்தினம் தலைமை வகித்து ரத்தினமாகப் பேசுகையில் தமிழ் இசை சிலப்பதிகாரத்திலிருந்துதான் முதல் முதலாக உருவாகிய தென்றார். இதற்கு முன் மகாநாட்டுக்கு வந்திருந்தோர் அனைவரையும் வரவேற்ற வரவேற்புக் கமிட்டித் தலைவர் தமது உரையில் இலக்கியங்களின் இலட்சியம் மனிதனை மனிதனாக வாழச் செய்வதுதா னென்று கூறித் தமிழ் இலக்கியங்களின் உன்னதமான பண்பை வெகு அழகாக எடுத்துரைத்தார்.

## புலவருக்குப் பொன்னாடை

இரண்டாம் நாள் விழாவின்போது முது தமிழாசிரியர் ஸ்ரீ சி. இ. சதாசிவப் பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். பச்சையப்பன் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீ ஞானசம்பந்தன் சிலப்பதிகாரத்தைத் தமிழன் பண்பாட்டின் ஒப்பற்ற சிகரமென்று வர்ணித்துவிட்டு, சிலப்பதிகார காலத்துக்குப் பின் தமிழன் பண்பாட்டில் வீழ்ச்சி யடைந்துவிட்டா னென்பதைப் பிற்கால இலக்கியங்கள் காட்டுகின்றன என்றார். ஸ்ரீ சிவஞான கிராமணியார் இளங்கோவை ஒரு தலைசிறந்த அரசியல் வாதியென்று வர்ணித்தார். அந்தக் காலத்தில் சோழநாட்டு மக்கள் இமயத்தில் புலிக் கொடியை ஏற்ற ஒரு பிள்ளை பிறக்க வேண்டு மென்று பிரார்த்தித்தார்க ளென்றும் இந்தக் காலத்திலோ கொள்ளி வைப்பதற்கு ஒரு பிள்ளை யில்லையே என்று ஏங்கும் நிலைமைக்குத் தமிழன் சீர் குலைந்து விட்டதாயும் ஸ்ரீ கிராமணியார் மேலும் சொன்னார்.

அட்வகேட் ஸ்ரீ வி. ஏ. கந்தையா தமிழ்மொழியைப் புறக்கணிக்க இலங்கையில் நடக்கும் முயற்சியையும் அதைக் கண்டு தமிழ் இனம் கலங்கி நிற்பதையும் குறிப்பிட்டுச் சிறுபான்மையோர்களை அடக்கும் தேசம் உலக சரித்திரத்தில் எந்தக் காலத்திலும் உருப்பட்டது கிடையா தென்று எச்சரித்தார். பத்தினித் தெய்வம் எந்த ஒரு சாதிக்கோ சமயத்துக்கோ உரித்தானதல்ல வென்றும் அத் தெய்வம் எல்லோருக்கும் பொதுவான தென்றும் கூறிய ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் சிலப்பதிகார காலத்தில் புலவர்கள் நாட்டை ஆண்டார்கள் என்றும் இன்று இலக்கியமும் சமயமும் மதிப்பற்றுப் போயிருப்பது தமிழனின் வீழ்ச்சியைக் குறிப்பதாகவும் சொன்னார்.

ஸ்ரீ முத்து சிவன், பேராசிரியர் அருள்நந்தி, செல்வி இந்திரா முதலான மற்றும் பல அறிஞர்களும் அருமையாகப் பேசினார்கள்.

## திருவள்ளுவர் திருவிழா

மே மாதம் 16, 17, 18-ம் தேதிகளில் தமிழ் மறைக் கழகத்தின் இரண்டாவது திருக்குறள் மகாநாடு காவலப் பிட்டி இந்து வாலிபர் சங்க ஆதரவின் கீழ் நடைபெற ஏற்பாடாகி வருகிறது. இம் மகாநாட்டை உதவி நிதி மந்திரி ஸ்ரீ வி. குமாரஸ்வாமி துவக்கி வைக்கிறார். இம் மகாநாட்டுக்கு இந்தியாவிலிருந்து பல அறிஞர்கள் விஜயம் செய்ய விருக்கிறார்கள். விழாவின் பொழுது இசை நாடக நிகழ்ச்சிகளும் பேச்சுப் போட்டிகளும் நடத்த ஏற்பாடாகி வருகிறது.

# பொன்னியின் செல்வன்




### அத்தியாயம் 90

## பொன்மழை பொழிந்தது!

**வ**ந்தியத்தேவன் ஆனைமலைக் காட்டுக்குத் தான் சென்று வந்த வரலாற்றைக் கூறி முடித்ததும், குந்தவை அவனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் கூறிய வரலாறு மிக அதிசயமாயிருக்கின்றது. உண்மை நிகழ்ச்சிகள்தானா என்று சந்தேகமும் சில சமயம் எனக்கு ஏற்பட்டது. கதை புனைந்து கூறுவதில் தாங்கள் கெட்டிக்காரர் என்பதை அறிவேன். அதிலும் தாங்கள் அடிக்கடி பேச்சை நிறுத்தி மேலும் கீழும் பார்த்து விழித்து விட்டுப் பேச்சைத் தொடங்கியபோது என்னுடைய சந்தேகம் மேலும் அதிகமாயிற்று!" என்றாள்.

வந்தியத்தேவன் மற்றும் ஒரு முறை மேலும் கீழும் பார்த்து விட்டுக் குந்தவையை நோக்கினான்.

"தேவி! புனைகதை சொல்லுவதற்கு வேறு இடங்கள் இருக்கின்றன. என்னுடைய அந்தச் சாமர்த்தியத்தைத் தங்களிடம் இதுவரையில் நான் காட்டியதில்லை. இடையிடையே என் பேச்சுத் தடைப்பட்டதற்கு வேறொரு காரணம் உண்டு!" என்றான்.

"அதுவும் பெரிய இரகசியமா? பெண்களிடம் சொல்லக் கூடாததா?" என்று கேட்டாள் குந்தவைப் பிராட்டி.

"வேறு யாரிடமும் சொல்லக் கூடாத இரகசியந்தான். ஆனால் தாங்கள் அநுமதி கொடுத்தால் அதையும் சொல்லுகிறேன்!" என்றான் வந்தியத்தேவன்.

"உண்மையைச் சொல்லுவதற்கு எப்போதும் என்னுடைய அநுமதி உண்டு!" என்றாள் குந்தவை.

"அப்படியானால் சொல்லி விடுகிறேன். பிறகு என்னைக் கோபித்துக் கொள்வதில் பயனில்லை. நான் தங்களிடம் பேசிக் கொண்டிருக்கும்போது சில சமயம் தற்செயலாகத் தங்கள் விழிகளில் என் பார்வை பதிந்து விடுகிறது. தேவியின் கரிய கண்களில் என்ன அரிய மாயம் இருக்கிறதோ, தெரியவில்லை. அது என்னை அப்படித் திகைத்து நிற்கும்படி செய்து விடுகிறது. மறுபடியும் சமாளித்துக் கொண்டு பேச்சைத் தொடங்குகிறேன்!" என்றான்.

குந்தவையின் இதழ்கள் விரிந்தன; கன்னங்கள் குழிந்தன; கண்கள் சிரித்தன.

"ஐயா! என்னுடைய கண்களில் அரிய மாயம் ஒன்றுமில்லை; கரிய மாயமும் இல்லை. சில காலமாக மையிட்டுக் கொள்வதையும் விட்டுவிட்டேன். என்னுடைய கண்களில் தாங்கள் தங்களுடைய உருவத்தைத்தான் பார்த்திருப்பீர்கள். அதுதான் தங்களைத் திகைப்படையச் செய்திருக்கும்!" என்றாள்.

"தேவி! என்னுடைய உருவத்தை நான் கண்ணாடிகளில் பார்த்திருக்கிறேன்.

தெளிந்த நீரில் பிரதிபலிக்கப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் நான் எந்த விதத் திகைப்பும் அடைந்ததில்லை!'' என்றான் வல்லவரையன்.

''என் கண்களைக் கண்ணாடிக்கும் தண்ணீருக்கும் ஒப்பிடுகிறீர்களா? கண்ணாடி மங்கிவிடும்; தண்ணீர் கலங்கிவிடும்!'' என்றாள் இளவரசி.

''கண்ணாடி மங்கினால் துடைத்துச் சுத்தம் செய்வேன். தண்ணீர் கலங்காமல் பார்த்துக் கொள்வேன். தங்கள் கண்களின் இமைகள் மூடித் திரையிட்டு என் உருவத்தை மறைப்பதை நான் தடுத்து நிறுத்த முடியாதல்லவா?'' என்றான் வந்தியத் தேவன்.

''கண்ணாடிக்கு எதிரில் நின்றால்தான் உருவம் பிரதிபலிக்கும். தண்ணீர் கலங்காமல் தெளிந்திருந்தால்தான் உருவம் தெரியும். ஆனால் என் கண்கள் திறந்திருந்தாலும் கண்ணிமைகள் மூடியிருந்தாலும் தாங்கள் என் முன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தங்கள் உருவம் எப்போதும் என் கண்களில் பொலிகிறது. இந்த அதிசயத்தின் காரணம் என்னவென்று தங்களால் சொல்ல முடியுமா?'' என்று குந்தவை கேட்டாள்.

**வ**ந்தியத்தேவனின் மெய் சிலிர்த்தது. தழுதழுத்த குரலில், ''தெரியவில்லையே, தேவி!'' என்றான்.

''தெரியாவிட்டால் நான் சொல்லுகிறேன். தங்களிடத்திலேதான் அப்படி ஏதோ ஒரு மாய மந்திர சக்தி இருக்கிறது. சோழ குலத்தைப் பழி வாங்க வந்த வயிர நெஞ்சம் கொண்ட நந்தினியின் உள்ளமும் தங்களைக் கண்டு சஞ்சலம் அடைந்து விட்டதல்லவா?''

''சற்று முன் தாங்கள் அமுதினுமினிய வார்த்தை கூறி என்னைப் பரவசப் படுத்தினீர்கள். அதே மூச்சில், அந்தக் கொடிய விஷ நாகத்தின் பெயரை என் சொல்லுகிறீர்கள்?''

''நந்தினியை உள்ளத்தில் நஞ்சுடைய பாம்பு என்று நான் வெறுத்த காலம் உண்டு. இப்போது அவளை நினைக்கும் போது எனக்கு அவள் பேரில் இரக்கந்தான் உண்டாகிறது......''

''நந்தினியிடம் தாங்கள் இரக்கங் கொள்வது சோழ குலத்தை நாசமாக்க வரும் ஆலகால விஷத்திடம் இரக்கங் கொள்வதாகும்.''

''ஐயா! சோழ வம்சத்தாருக்குக் குல தெய்வமாகி விட்ட மந்தாகினி தேவியின் மகள் அவள்! என் அருமைச் சகோதரன் அருள்மொழியைப் பல முறை காப்பாற்றிய தேவியின் மகள் அவள்! என் தந்தையைச் சதிகாரனுடைய வேலுக்கு இரையாகாமல் காப்பாற்றித் தன்னுடைய உயிரைப் பலி கொடுத்த மாதரசியின் மகள் நந்தினி!......''

''ஆனால் அந்தச் சதிகாரனுடைய வேலை எறியத் தூண்டியவள் அவள்! ஆதித்த கரிகாலருக்கு யமனாக வந்தவள் அவள்! வீராதி வீராகிய பெரிய பழுவேட்டரையரின் மதியை மயக்கிப் பொம்மைபோல் ஆட்டி வைத்தவள்...''

''பெரிய பழுவேட்டரையரின் மதியை மட்டுந்தானா மயக்கினாள்? பார்த்திபேந்திர பல்லவன், கந்தமாறன் முதலியவர்களையும் தன் கைக்கருவி ஆக்கிக் கொண்டாள்! இவையெல்லாம் தெரிந்திருந்தும் அவளை என்னால் வெறுக்க முடியவில்லை. வீர பாண்டியனுடைய மரணத்துக்குப் பழி வாங்கவே இவ்வளவும் செய்தாள்! எடுத்த காரியத்தை நிறைவேற்றுவதில் வெற்றி அடைந்தாள்! வீர மறக் குலத்துப் பெண்! அவள் இப்படியெல்லாம் பயங்கரமான செயல்களில் இறங்குவதற்கு நானும் காரணமாயிருந்தேன் என்பதை நினைத்தால் வருத்தமாயிருக்கிறது. அவளுடைய குழந்தைப் பிராயத்தில் பழையாறையிலிருந்து விரட்டியடித்தோம்......''

''நல்ல காரியமே செய்தீர்கள், தேவி! தங்களுடைய நெஞ்சிரக்கத்தின் மிகுதியால் அவள் சோழ குலப் பகைவனுடைய மகள் என்பதை மறந்துவிட வேண்டாம். வீர பாண்டியனுடைய மகள் சோழர் வீட்டில் வளர்ந்து அதனால் விளைந்த அனர்த்தம் போதாதா? வீர பாண்டியனுடைய மகளும் இங்கே வளர்ந்து ஆதித்த கரிகாலரைத் திருமணம் புரிந்து கொள்ள நேர்ந்திருந்தால்......''

''மிக்க நன்மையாக முடிந்திருக்கும். இந்த இரண்டு பெருங் குலங்களின் பகைமை தீர்ந்து இரு குலமும் ஒரு குலமாகியிருக்கும். ஆனால் அந்தச் செய்தி உண்மையாயிருக்குமா?''

''எதைக் கேட்கிறீர்கள், தேவி!''

''நந்தினி வீர பாண்டியனின் மகள் என்பது உண்மையாயிருக்குமா?''

''நந்தினி அவ்வாறு ஆதித்த கரிகாலரிடம் கூறியதை என் காதினால் நானே கேட்டேன். பெரிய பழுவேட்டரையரும் கேட்டார். அதுதான் பெரிய பழுவேட்டரையரின் மனத்தை அடியோடு மாற்றி அவரை ரௌத்ராகாரம் கொள்ளச் செய்தது. அந்தக் கொடிய வார்த்தை

தான் இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கும் யமனாக முடிந்தது!''

''சிறிது யோசியுங்கள்! கரிகாலன் மீது பழி முடிப்பதற்காகவே அவள் அவ்விதம் சொல்லியிருக்கலாம் அல்லவா? வீர பாண்டியனைக் கரிகாலன் கோபத்திலிருந்து காப்பாற்ற விரும்பியபோது அவனை வேறு விதமாகக் கூறியிருக்கிறாள். பெற்ற தகப்பனைக் குறித்துக் 'காதலன்' என்று எந்தப் பெண்ணாவது தன் வாயினால் சொல்லியிருப்பாளா?''

''தேவி! கரிகாலர் அப்போது வெறி கொண்டவராயிருந்தார். அவள் என்ன சொன்னாளோ, இவர் என்னவென்று பொருள் செய்து கொண்டாரோ, யாருக்குத் தெரியும்? கரிகாலர் சொல்லியது தானே? அவரே பின்னால் நந்தினி 'என் தகப்பன் வீர பாண்டியன்' என்று சொன்னபோது நம்பிவிட்டாரே? மேலும் வீர பாண்டியன் இறந்த பிறகே அவளுக்கு இது தெரிந்திருக்கலாம். தன் பிறப்பைக் குறித்த உண்மையை அறிவதற்காக நந்தினி என்னென்ன பிரயத்தனங்கள் செய்தாள் என்பது தங்களுக்குத் தெரியுமே? நள்ளிரவில் அவளுடைய அன்னையின் ஆவியைப் போல் நடித்துச் சுந்தர சோழரைப் பைத்தியம் பிடிக்க அடிக்கவில்லையா? அதைத் தங்கள் தோழி பார்த்து மூர்ச்சையடைந்து விழவில்லையா......?''

''பாதாளச் சிறையில் மூன்று வருஷமாக அடைபட்டிருந்து தங்களுடன் விடுதலை அடைந்த பைத்தியக்காரனை ஆழ்வார்க்கடியான் பயமுறுத்திக் கேட்டபோது அவன் சொன்னதும் தங்களுக்குத் தெரிந்திருக்கும்......''

''தெரியாமலென்ன? நந்தினிக்கும் அவன் சகோதரனுக்கும் தானே தகப்பன் என்று அவன் கூறினான்......''

''அதுவே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா?''

''அப்படியானால், சில சமயம் பொய்யும் மிக்க வலிமையுடையதாகிறது. அரண்மனைக்குள்ளேயே வளர்ந்து சண்டையென்றால் பயந்து கொண்டிருந்த பழைய மதுராந்தகத் தேவர் தாம் வீர பாண்டியனுடைய மகன் என்று அறிந்ததும் எத்தகைய வீர புருஷர் ஆகிவிட்டார் என்பதைத் தாங்கள் பார்த்திருந்தால் பிரமித்துப் போயிருப்பீர்கள். ஒரு முறை சின்னப் பழுவேட்டரையர் தமது வயிரக் கரத்தால் என் தோளைப் பற்றினார். அதை நினைத்தால் இன்னமும் அவர் பிடித்த இடத்தில் எனக்கு வலியுண்டாகிறது. அத்தகைய மகா வீரருடன் நாமெல்லாரும் 'கோழை' என்று எண்ணிய மதுராந்தகன் சரி சமமாக வாட்போர் இட்ட காட்சியை என்றும் நான் மறக்க முடியாது.''

''அதைக் குறித்தே நானும் தங்கள் வார்த்தையில் சந்தேகம் உண்டாகிறது என்று சொன்னேன்.''

''நம்புவதற்கு அரிதான சம்பவந்தான். நந்தினியின் மூடு பல்லக்கில் பிரயாணம் செய்து கொண்டிருந்தவனும், பழுவேட்டரையர்களின் பெயரைச் சொன்னாலே நடு நடுங்கியவனுமான நாம் அறிந்த மதுராந்தகன் சின்னப் பழுவேட்டரையருடன் வாட்போர் செய்யத் துணிவான் என்று யார் நம்ப முடியும்? ஆயினும் அது உண்மையில் நடந்தது என்பதை ஆழ்வார்க்கடியான் திரும்பி வந்து தங்களுக்குக் கூறுவான்.''

''ஐயா! தாங்கள் நந்தினி தேவியைப் பார்க்க முடியவில்லையா?''

''அந்தப் பெண் உருக்கொண்ட ராட்சஸியை நான் ஏன் பார்க்க வேண்டும்?''

''நந்தினியைப் பற்றி இனி அவ்விதம் சொல்ல வேண்டாம். என்றைக்காவது ஒரு நாள் நானே அவளைச் சந்திப்பேன். உண்மையில் அவளுடைய தந்தை யார் என்னும் இரகசியத்தை அறிவேன். ஆனால் ஒன்று தெரிந்து கொள்ளுங்கள். நந்தினியைப் பற்றி என்னிடம் எதுவும் தவறாகக் கூற வேண்டாம். அவளுடைய தகப்பனார் யாராயிருந்தாலும், அவளுடைய அன்னை யார் என்பதில் சந்தேகமில்லையல்லவா? அவளிடம் நான் அன்பு கொள்வதற்கு அது ஒன்றே போதும். அதற்கு மேலே இன்னொரு முக்கிய காரணமும் இருக்கிறது......''

''அது என்ன காரணம்?''

''நந்தினி தங்களிடம் பிரியம் கொண்டிருந்தாள். அவளுடைய முத்திரை மோதிரத்தைத் தங்களிடம் கொடுத்தாள். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பிச் செல்வதற்கு உதவி செய்தாள். கொள்ளிடக் கரைக் காட்டில் ரவிதாஸன் கூட்டத்தாரிடம் தாங்கள் சிக்கிக் கொண்டிருந்த போது மறுபடியும் தங்கள் உயிரைக் காப்பாற்றினாள்...''

''கடைசியாக, ஆதித்த கரிகாலரைக் கொன்ற பயங்கரமான பழியை என் பேரில் சுமத்தினாள். அதற்காகவே அத்தனை சூழ்ச்சிகளும் செய்தாள்!''

''ஏன் அப்படிச் செய்தாள் என்று தங்களுக்குத் தெரியவில்லையா?''

"பாம்பு ஏன் கடிக்கிறது என்பதற்குக் காரணம் சொல்ல வேண்டுமா? சிறுத்தை ஏன் பாய்கிறது என்பதற்குக் காரணம் கூற வேண்டுமா?"

"நந்தினி பிறக்கும் போதே பாம்பாகவோ, சிறுத்தையாகவோ பிறக்கவில்லை. நாங்கள்தான் அவளை அப்படிச் செய்து விட்டோம். சந்தர்ப்பங்கள் அவ்விதம் சதி செய்து விட்டன. தாங்களும் அதற்குக் காரணமாயிருந்தீர்கள்."

"ஐயையோ! என் பேரில் ஏன் வீண் பழி? நான் அவளுக்கு அப்படி என்ன தீங்கு செய்தேன்?"

"தாங்கள் அவளுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை; அவள்தான் தங்களிடம் அன்பு கொண்டிருந்தாள்."

"தெய்வமே!......"

"புருஷர்கள் சில காரியங்களில் கண்ணிருந்தும் குருடர்களாயிருப்பார்கள் போலிருக்கிறது. ஐயா! இதைக் கேளுங்கள்! நந்தினியின் உள்ளம் தங்களுக்குத் தெரியவில்லை; நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன். அந்தத் துர்ப்பாக்கியசாலி உண்மையில் வீர பாண்டியனிடம் அன்பு கொண்டிருக்கவில்லை; பெரிய பழுவேட்டரையரிடம் அன்பு கொண்டிருக்கவில்லை; ஆதித்த கரிகாலனிடம் அவளுக்கு உண்மையான நேசம் கிடையாது. அவர்களிடம் அன்பு கொண்டதாக நடித்ததெல்லாம் அவள் அரசு பீடத்தில் அமர்வதற்காகத்தான்!"

"இதை நானும் அறிவேன், தேவி! அவளுடைய இராதக நெஞ்சில் அன்புக்குச் சிறிதும் இடமே இல்லை!"

"அது தவறு; தங்களைக் கண்டபோதுதான் அவள் உள்ளத்தில் உண்மையான அன்பு உதயமாயிற்று. தங்கள் அபிமானத்தைக் கவர்வதற்காக அவள் எதுவும் செய்யச் சித்தமாயிருந்தாள்..."

"என்பேரில் இளவரசரைக் கொன்ற பழியைச்சுமத்தவும் சித்தமாயிருந்தாள்."

"அது எதற்காக? தங்களை என்றைக்கும் சோழ குலத்தாருடன் நட்பும் உறவும் கொள்ளாமலிருக்கச் செய்வதற்குத்தான்..."

"அதற்காக என்னைத் தஞ்சாவூர் இராஜ வீதிகளின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றச் செய்வதற்கு ஏற்பாடு செய்து விட்டாள். அதை விட அவளுடைய கையில் பிடித்திருந்த கத்தியினாலேயே என்னைக் கொன்றிருக்கலாமே?"

"தங்களைக் கொல்ல எண்ணியிருந்தால் அவ்விதம் செய்திருக்கலாம். அல்லது ரவிதாஸன் கூட்டத்தைக் கொண்டு தங்களைக் கொல்லச் செய்திருக்கலாம். பெரிய பழுவேட்டரையர் குற்றத்தைத் தன் பேரில் போட்டுக்கொண்டிராவிட்டால், பொன்னியின் செல்வர் குறுக்கிட்டிராவிட்டால், தங்களை உண்மையிலேயே கழுவில் ஏற்றக் கட்டளை பிறப்பித்திருந்தால், ரவிதாஸன் கூட்டத்தார் வந்து தங்களை விடுவித்துக் கொண்டு போயிருப்பார்கள். தாங்களும் ஒருவேளை இன்று ஆனைமலையின் மேல் சேர்ந்திருக்கும் கூட்டத்துடன் கலந்து கொண்டிருந்தாலும் இருப்பீர்கள்."

"அத்தகைய விபத்து நேராமல் கடவுள்தான் என்னைக் காப்பாற்றினார்."

"சோழ நாட்டையும் காப்பாற்றினார். தங்களைப் போன்ற ஒரு வீரரின் சேவை சோழ சாம்ராஜ்யத்துக்கு நஷ்டமாகாமல் காப்பாற்றினார்......"

"தேவி! சோழ சாம்ராஜ்யம் மகத்தானது. ஐந்நூறு லட்சம் வீரர்களின் வாள்களும் வேல்களும் இந்த ராஜ்யத்தைக் கண் போலக் காத்து நிற்கின்றன. நான் ஒருவன் இதன் உதவிக்கு அவ்வளவு அவசியமாயிருக்க முடியாது..."

"சோழ நாட்டை நாலாபுறமும் புதிய அபாயங்கள் சூழ்ந்து கொண்டிருப்பதாகத் தாங்களே சொன்னீர்கள்."

"அது உண்மைதான், தேவி! ரவிதாஸனுடைய சூழ்ச்சித் திறன் அதிசயமானது. பாண்டிய நாட்டுச் சிங்காதனத்துக்கு உரிமையாளர் இரண்டு பேரை உண்டாக்கி விட்டான். முன்னே ஒரு சிறு குழந்தைக்குக் கொள்ளிடக் கரைக் காட்டில் பாண்டிய மன்னன் என்று பட்டம் சூட்டினான். அந்தப் பராங்குசன் நெடுஞ்செழியனுடன் இப்போது அமர புஜங்கன் நெடுஞ்செழியன் ஒருவனும் சேர்ந்து விட்டான்......"

"அது யார் அமரபுஜங்கன் நெடுஞ்செழியன்?"

"நம் பழைய மதுராந்தகரின் பெயர் இப்போது அதுதான். பாண்டிய அரசுக்கு உரிமை கொண்டாடுவோன், 'மதுராந்தகன்' என்ற பெயருடன் இருக்க முடியாதல்லவா? சின்னப் பழுவேட்டரையர் அருவிப் பள்ளத்தில் விழுந்ததும், மலை உச்சியில் 'பாண்டியன் அமரபுஜங்கன் நெடுஞ்செழியன் வாழ்க!' என்று எழுந்த கோஷம் அந்தப் பெரிய அருவி விழும் சத்தத்தையும் அடக்கிக் கொண்டு எழுந்தது."

"இம்மாதிரி இரண்டு உரிமையாளரை ஏற்படுத்தி வைப்பதில் ரவிதாஸனின் கூட்டத்தாருக்கு என்ன லாபம்?"




"ஒருவனுக்கு ஏதாவது நேர்ந்தால் இன்னொருவன் கையில் இருக்கட்டும் என்றுதான். ஒருவனைக் கொண்டு இலங்கை அரசன் மகிந்தன் உதவியைப் பெறவும், இன்னொருவனைக் கொண்டு சேர மன்னனின் கூட்டுறவைப் பெறவும் அக்கூட்டத்தார் முயற்சிப்பார்கள்......"

"ஐயா! என் சகோதரனும் தாங்களும் சேர்ந்து சதி செய்து உத்தமச் சோழரின் தலையில் மணி மகுடத்தைச் சூட்டினீர்கள். உத்தமச் சோழருக்கு நீங்கள் பெரிய நன்மை செய்து விட்டதாக நான் கருதவில்லை. தற்சமயம் சோழ சாம்ராஜ்யத்தின் பாரத்தை வகிப்பது அவ்வளவு எளிய காரியமாகத் தோன்றவில்லை......"

"சோழ சாம்ராஜ்ய பாரத்தை வகிப்பது தற்சமயம் மிகப் பிரயாசையான காரியந்தான். ஆனால் அதை உத்தமச் சோழரா தாங்கப் போகிறார்? அவர் தமது அன்னைக்கு உதவியாக ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டுக் காலங் கழிக்கப் போகிறார். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கப் போகிறவரும் பாதுகாக்கப் போகிறவரும் தங்கள் தம்பி அருள்மொழித் தேவர்தான்!"

"அது உண்மையே. அருள்மொழிக்கு அதற்கு ஆற்றலும் உண்டு. ஆனாலும் அவன் பிராயத்தில் சிறியவன்; அநுபவம் இல்லாதவன். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கி வந்த இரு பெரும் வயிரத் தூண்கள்—பழுவூர் அரசர்கள்—போய் விட்டார்கள். பெரியவர் நம்மை விட்டே சென்று விட்டார்! தாங்கள் சொல்வதைப் பார்த்தால், சின்னப் பழுவேட்டரையர் பிழைத்து வருவதும் துர்லபம் என்று தோன்றுகிறது......"

"அவர் பிழைத்து வந்தாலும் இராஜ்யத்துக்குப் பயன்பட மாட்டார். தமது மகளையும் மருமகளையும் நினைத்து நொந்து கொண்டிருப்பார்......"

"சம்புவரையரும் அதே நிலையை அடைந்து விட்டார். சில தினங்களில் அவருடைய உள்ளமும் உடலும் சோர்ந்து பலவீன மடைந்து விட்டன. மலையமான் முன்னமே முதுகிழவர். தமது பேரர்களில் ஒருவன் இறந்து இன்னொருவனுக்குப் பட்டமில்லை என்று ஆனாலும் அவ



ரும் அடியோடு தளர்ந்து போனார். கொடும்பாளூர்ப் பெரிய வேளாரின் மனம் ஒரு நிலையிலில்லை. அருள்மொழி முடி சூட்டிக் கொள்ளப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்து கடைசி நிமிஷத்தில் தம்மை ஏமாற்றி விட்டதை அவரால் மன்னிக்க முடியவில்லை. வானதியை அருள்மொழி மணந்ததில் கூட அவருக்குத் திருப்தி ஏற்படவில்லை. இனி மேல் இராஜ்ய விவகாரங்களில் தாம் தலையிடுவதில்லை யென்றும் கொடும்பாளூரில் ஆலயத்திருப்பணி செய்யப் போவதாகவும் கூறிவிட்டுப் போய் விட்டார். கடம்பூர் மாளிகையில் நடந்த சதிக் கூட்டத்தில் கலந்து கொண்ட மற்றச் சிற்றரசர்கள் அனைவரும் அவர்கள் ஒன்று நினைக்கக் காரியம் வேறாக முடிந்தது பற்றி வெட்கி மனங் குன்றிப் போனார்கள். ஐயா! அருள் மொழிக்கு உதவி செய்யத் துணைவர்கள் வேண்டும். வாள் வலி - தோள் வலியுடன் அறிவுத் திறமையும் வாய்ந்த உற்ற நண்பர்கள் அவனுக்கு வேண்டும்......"

"நல்ல வேளையாகப் பல்லவப் பார்த்திபேந்திரர் இருக்கிறார்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"அவருடைய துணை வலியும் அருள்மொழிக்குக் கிடைக்கும் என்று சொல்வதற்கில்லை. அவரை ஊரை விட்டு அனுப்பி விட்டு உத்தமச் சோழருக்கு முடிசூட்டியதில் அவருக்குக் கோபம். அதைக் காட்டிலும், அருள்மொழி தன் அந்தரங்கத் தோழராகத் தங்களைப் பாவிப்பது அவருக்குப் பிடிக்கவில்லை..."

"அவருடைய கோபத்துக்கு நியாயம் இருக்கிறது. சோழ குலத்துக்கு அவர் எவ்வளவோ தொண்டு செய்திருக்கிறார். நானோ புதிதாக வந்தவன். அவரிடம் நான் வேணுமானால் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்."

குந்தவை சிறிது யோசித்து விட்டு, "அது எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலாகும்" என்று கூறினாள்.

"பார்த்திபேந்திரர் மகாவீரர். அவரைச் சமாதானப் படுத்துவதற்கு வேறு வழி இல்லையா?" என்றான் வந்தியத்தேவன்.

"அவரே அந்த வழியைக் குறிப்பிட்டார். என் தந்தையிடமும் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்......"

"பார்த்திபேந்திர பல்லவருடைய விருப்பத்தை நிறைவேற்றச் சக்கரவர்த்தி மறுத்திருக்க மாட்டார்......"

"ஆனால் அது சக்கரவர்த்தியைப் பொறுத்ததல்ல. அவருடைய மகளைப் பொறுத்தது. அவருடைய மகள் அதை

ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டான்! ஆம், ஐயா! சிவாலயத்துக்கு மலர் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தவர் திடீரென்று சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடிக் கொண்டதைப் பார்த்துப் பல்லவகுலத் தோன்றலுக்குப் பொறுக்க வில்லை. கடலில் படகு விட்டுக் கொண்டிருந்தவன் சிங்காதனம் ஏறியதும் அவருக்குச் சகிக்கவில்லை. பழைய பல்லவ நாட்டுக்குத் தன்னைச் சுதந்திர மன்னனாக்கிச் சிலாசாஸனம் எழுதும் உரிமை அளிக்க வேண்டும் என்று கேட்டார்..."

"ஆகா! அது எப்படிக் கொடுக்க முடியும்? சோழ ராஜ்யத்தைச் சின்னா பின்னப் படுத்துவதாகு மல்லவா?"

"அந்த உரிமை கொடுக்க என் தந்தை சம்மதித்து விட்டார். அத்துடன் பல்லவ குமாரர் நிற்கவில்லை. முன்னொரு சமயம் பல்லவ அரச குமாரி சோழ குமாரன் ஒருவனை மணந்து கொண்டாளாம். அதற்கு ஈடாகச் சுந்தர சோழரின் குமாரியைத் தமக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று கோரினார்!"

இதைக் கேட்டதும் வந்தியத்தேவனின் முகம் மிக்க மனவேதனையைக் காட்டியது. அதை மறைத்துக் கொள்வதற்காக அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

குந்தவையின் முகம் புன் சிரிப்பால் மலர்ந்தது. வேண்டுமென்றே அவன் மேலே ஒன்றும் சொல்லாமலிருந்தாள்.

சற்றுப் பொறுத்து வந்தியத்தேவன் "அதற்குச் சக்கரவர்த்தி என்ன விடை கூறினார்?" என்றான்.

"அதற்குச் சக்கரவர்த்தி எப்படிப் பதில் கூற முடியும்? அது அவர் மகள் விருப்பத்தைப் பொறுத்ததல்லவா? சக்கரவர்த்தி தம் மகளைக் கேட்டார்..."

"சக்கரவர்த்தித் திருமகள் அதற்கு என்ன பதில் கூறினார்?"

"பார்த்திபேந்திரனைக் கைப்பிடிக்கச் சம்மதமில்லை என்று சொல்லி விட்டார்!"

"ஏன்? ஏன்?" என்று வந்தியத்தேவன் கேட்ட குரலில் அடங்காத ஆர்வம் ததும்பியது.

"சக்கரவர்த்தித் திருமகள் காரணம் எதற்காகச் சொல்ல வேணும்? இருந்தாலும், ஒரு காரணம் கூறினாள். தெய்வப் பொன்னி நதி பாயும் புனல் நாட்டை விட்டு, வெளி நாட்டுக்குப் போக விருப்பமில்லை என்று கூறினாள்."

"அது ஒன்றுதானா காரணம்?"

"வேறு காரணமும் இருக்கலாம். அதில் சிரத்தை உள்ளவர்களுக்கு அல்லவா சொல்ல வேணும்? ஏனோ தானோ என்று கேட்பவர்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?" என்றாள் குந்தவை.

"தேவி! அளவில்லாத சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் கேட்கிறேன்."

"அவ்வளவு சிரத்தையும் ஆர்வமும் உள்ளவர்கள் தாங்களாகவே அதைத் தெரிந்து கொள்வார்கள். அவர்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை."

குந்தவையின் முகத்தை அப்போது தான் முதன் முதலில் பார்ப்பவன்போல் வந்தியத்தேவன் பார்த்தான்.

மின்னலை மின்னல் தாக்கியது. அலையோடு அலை மோதியது. சொர்க்கம் பூமிக்கு வந்தது. மண்ணுலகம் விண்ணுலகம் ஆயிற்று.

விழிக்கோணத்தில் விஷமப் புன்சிரிப்புடன் குந்தவை "ஒரு பெண்ணின் மனத்தில் உள்ளதை அறிய முடியாமல் அவள் வாயினால் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கும் ஆண் மகனைப் பற்றி என்னவென்று நினைப்பது? சோழ சாம்ராஜ்யத்தின் பகைவர்களுடைய தந்திரச் சூழ்ச்சிகளை யெல்லாம் அவர் அறிந்து கொள்ள முடியும் என்று எவ்விதம் எதிர்பார்ப்பது?" என்றாள்.

வந்தியத்தேவன் சற்று நேரம் மேலும் கீழும் பார்த்து விட்டு, "தேவி! பழம் பெரும் பல்லவ குலத்தில் வந்த பார்த்திபேந்திரன் கோரிய அதே கோரிக்கையைத் தங்குவதற்கு ஒரு குடிசை நிழலும் இல்லாத அநாதை வாலிபன் ஒருவன் வெளியிட்டால், அதைப் பற்றிச் சக்கரவர்த்தி என்ன நினைப்பார்?" என்றான்.

"அவர் என்ன நினைத்தாலும், தம் மகளுடைய விருப்பம் என்னவென்று கேட்பார்; அதன்படியே பதில் சொல்லுவார்."

"தேவி! சக்கரவர்த்தியின் திருக்குமாரி என்ன பதில் சொல்லுவாள்?"

"இப்படிச் சுற்றி வளைத்துக் கேட்டுக் கஷ்டப் படுவானேன்? சக்கரவர்த்தியிடம் நேரில் கேட்டுப் பார்த்து விடலாமே? பதில் உடனே தெரிந்து விடுகிறது!" என்றாள் குந்தவை.

"அது எப்படிக் கேட்க முடியும்? ஈழம் முதல் வேங்கி வரையில் ஒரு குடை நிழலில் ஆளும் மன்னர் மன்னரின் திருமகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்கும்படி ஊரும் பேருமில்லாத வாலிபன் —உற்றார் உறவினர் அற்ற அநாதைச் சிறுவன் — எப்படித் துணிந்து கேட்க முடியும்?" என்றான் வல்லவரையன்.

"வாணர் குலத்தில் பிறந்த வீரருக்கு இவ்வளவு தன்னடக்கம் எங்கிருந்து

வந்தது? முதன் முதலில் தாங்கள் என்னைப் பார்த்த போது தங்கள் குலப் பெருமை பற்றிக் கூறியதை நான் மறந்து விடவில்லை. சேர சோழ பாண்டியர்களின் அரண்மனைகளில் ஆண் குழந்தைகள் பிறந்தால், அக் குழந்தையின் மார்பு அகலமாயிருந்தால், மாவலி வாணனின் பெயர்கள் எல்லாவற்றையும் அந்தக் குழந்தையின் மார்பில் எழுதலாம் என்று அரசிமார்கள் களிப்படைவார்கள் என்றீர்கள். வாணர் குல மன்னரின் அரண்மனை வாசலில் மூவேந்தர்களும் காத்திருப்பார்கள் என்றும், புலவர்கள் அம் மன்னரிடம் பெற்றுப் போகும் பரிசுகளைப் பார்த்து, 'இது என் குதிரை! இது என் யானை! இது என் கிரீடம்! இது என் குடை!' என்று அவர்கள் பேசிக் கொள்வார்கள் என்றும் சொன்னீர்கள். அவ்வாறு பெருமையடித்துக் கொண்டவர் இவ்வளவு அடக்கம் கொண்டவரானது ஏன்?''

''தங்கள் தம்பியின் சிநேகந்தான் அதற்குக் காரணம். பழைய குலப் பெருமையைக் கூறிச் சிறப்படையப் பார்ப்பதை அருள்மொழிவர்மர் வெறுக்கிறார். சூரிய குலத்தில் தோன்றியவர்கள் என்றும், கரிகால் வளவன் வம்சத்தினர் என்றும், விஜயாலயச் சோழரின் பேரரின் பேரர் என்றும் பெருமையடித்துக் கொள்வதை நினைத்து அவர் சிரிக்கிறார். ஒரு நாள் அவர் என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா? 'என் குலத்து முன்னோர்கள் இது வரையில் செப்புப் பட்டயமும் சிலாசாஸனமும் எழுதுவிக்கும்போதெல்லாம் சூரிய வம்சத்திலிருந்தும் மனு நீதிச் சோழனிலிருந்தும் சிபிச் சக்கரவர்த்தியிலிருந்தும் தொடங்கி எழுதச் செய்து வந்திருக்கிறார்கள். நான் அரச பீடம் ஏறினால் இந்த வழக்கத்தை மாற்றி விடுவேன். நான் எழுதுவிக்கும் சிலாசாஸனங்களிலும் செப்புப்பட்டயங்களிலும் நான் சாதனை செய்த காரியங்களை மட்டும் பொறிக்கச் செய்வேன். அப்போது அச் சாஸனங்கள் புனைந்துரைகளோ என்ற ஐயத்துக்கு இடந்தராத மெய்க் கீர்த்தியாக விளங்கும்!' என்றார். தேவி! நானும் அவருடைய கருத்தை ஒப்புக் கொண்டேன். பழைய குலப் பெருமை பேசுவதை விட்டுவிட உறுதி கொண்டேன். தங்கள் தந்தையாரிடம் சென்று என் பழைய குலப் பெருமைகளைக் கூறித் தங்கள் கரம் பிடிக்கும் பாக்கியத்தைக் கோர மாட்டேன். அருள்மொழி வர்மரும் நானும் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மைக்கு எங்கள் ஆயுளை அர்ப்பணித்திருக்கிறோம். வடக்கே விந்திய பர்வதத்திலும் தெற்கே திரிகோண மலையிலும் மேற்கே லட்சத் தீவிலும் கிழக்கே கடல்களுக்கு அப்பாலுள்ள சாவகத்திலும் கடாரத்திலும் காம்போஜத்திலும் புலிக் கொடியைப் பறக்கச்செய்யத் தீர்மானித்திருக்கிறோம். நாங்கள் மேற்கொண்ட காரியங்களை ஓரளவேனும் சாதித்த பிறகு சுந்தரசோழ சக்கரவர்த்தியிடம் சென்று 'இதோ நான் அணிந்து வந்திருக்கும் வெற்றி மாலைகளைத் தங்கள் திருக்குமாரியின் கழுத்தில் சூட அநுமதி கொடுங்கள்!' என்று விண்ணப்பித்துக் கொள்வேன். இலங்கைக்குச் சென்று மகிந்தனை வென்று பாண்டியன் மகுடத்தையும் இந்திரன் ஹாரத்தையும் கொண்டு வந்து இளவரசியின் முன்னால் வைப்பேன். வைத்து விட்டு, 'தங்கள் திருக் கரத்தைப் பிடிப்பதற்கு நான் தகுதியுள்ளவனானால் அந்த பாக்கியத்தை எனக்கு அளியுங்கள்!' என்று பெருமையோடு கேட்பேன்......''

''ஐயா! தங்கள் தீர்மானத்தை நான் பாராட்டுகிறேன். தங்களுக்கும் பார்த்திபேந்திரர் மனப் போக்குக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டு வியந்து மகிழ்கிறேன். ஆனால் ஆண் பிள்ளையாகிய தாங்கள்தான் இவ்வாறெல்லாம் செய்யலாம். வெற்றிகளையும் சாதனைகளையும் கொண்டு வந்து சமர்ப்பிக்கலாம். அவற்றைக் குறித்துப் பெருமையடையலாம். பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு இவை ஒன்றும் சாத்தியமில்லை. அவர்களுக்குத் தேவையும் இல்லை. அரச குலத்துப் பெண்களுக்குச் சுயம்வரம் நடத்தும் வழக்கம் நம் தேசத்தில் வெகு காலம் இருந்து வந்தது. இப்போது ஏனோ மறைந்து விட்டது. ஐயா! என் தந்தை எனக்கு ஒரு சுயம்வரம் நடத்தி அதற்கு இந்தப் பரந்த பாரத தேசத்திலுள்ள அத்தனை அரசகுமாரர்களையும் அழைத்திருந்தாரானால், என் கையிலுள்ள மாலையை அவர்கள் யாருடைய கழுத்திலும் போட்டிருக்க மாட்டேன். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பி ஓடி வந்து பழையாறை ஆலய பட்டரின் துணையுடன் ஓடமேறி ஓடையைக் கடந்து அரண்மனைத் தோட்டத்துக்குள் புகுந்து என்னைத் தனிமையில் சந்தித்த அநாதை வாலிபர், அத்தனை அரசகுமாரர்களுக்கு மத்தியில் எங்கேயாவது இருக்கிறாரா என்று தேடுவேன். அவருடைய கழுத்திலே தான் என் கையிலுள்ள சுயம்வர மாலையைப் போடுவேன்!''

**வ**ந்தியத் தேவனுடைய செவிகளில் ஆயிரம் கிண்கிணிகள் ஒலித்தன. வானத்திலிருந்து பொன் மழை பொழிந்தது. தளிர்களும் மலர்களும் குலுங்கிய மரங்களின் உச்சியில் வர்ணப்பட்டுப் பூச்சிகள் இறகுகளை விரித்து நடனம் புரிந்தன.

இதுவரையில் உட்கார்ந்திருந்த வந்தியத் தேவன் எழுந்து நின்றான்.

"நான் கூறியது தங்களுக்குப் பிடிக்கவில்லையா?" என்றாள் குந்தவை.

"நன்றாய்க் கேட்டீர்கள். நான் விழித்திருக்கிறேனா, என் காதில் விழுந்ததெல்லாம் உண்மையா, அல்லது கனவு காண்கிறேனா என்று சோதித்தேன். கனவு காணவில்லை, உண்மைதான் என்று தெரிந்து கொண்டேன்! பாற்கடலைக் கடைந்து தேவர்கள் அமுதத்தை அடைந்தார்கள், அதை அருந்தி அமரரானார்கள் என்று கேட்டிருக்கிறேன். தாங்கள் இப்போது கூறிய மொழிகள் என்னை அமுதமுண்டவனாகச் செய்து விட்டன; எனக்குப் புத்துயிர் அளித்து விட்டன!"

குந்தவை அப்போது "ஐயா! ஒன்று மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் போகுமிடங்களில் எத்தனையோ அபாயங்களுக்கு உட்படுவீர்கள். எவ்வளவோ போர்க்களங்களில் போர் செய்வீர்கள். பகைவர்கள் வஞ்சகச் சூழ்ச்சியால் தங்களை மேலுலகம் அனுப்ப முயற்சிப்பார்கள். அப்படி ஏதாவது தங்கள் உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால், இந்தத் தொல் பெருமை வாய்ந்த சோழ குலத்தில் பிறந்த ஓர் இளவரசி கலியாணம் ஆவதற்கு முன்னாலேயே கைம்பெண் ஆவாள்! இதை மறந்து விடாதீர்கள்!" என்றாள்.

"தேவி! அப்படி ஒன்றும் நிச்சயமாக நேராது. நான்தான் அமுதமுண்டு அமரனாகி விட்டேனே! எனக்கு இனி மரணம் இல்லை! கன இருள் சூழ்ந்த வனாந்தரங்களில் காற்றும் மழையும் கடுகிப் பெய்து நான் திசை தெரியாமல் தடுமாறும் சமயங்களில், தாங்கள் அக்காட்டு மத்தியில் உள்ள வீட்டில் பலகணிக்கு அருகில் விளக்கேற்றி வைத்துக் கொண்டு எனக்காகக் காத்திருப்பீர்கள். அந்த நினைவு எனக்குத் தைரியமளித்துக் காற்று மழைகளுந்த காரத்திலிருந்து தப்புவதற்குத் துணை செய்யும். அலை கடலின் நடுவில் மரக் கலத்தில் ஏறி நாளும் வாரமும் மாதமும் கணக்கும் மறந்து திக்குத் தெரியாமல் மதி மயங்கிக் கதி கலங்கி நிற்கும் போது, ஸப்தரிஷி மண்டலத்தின் அடியில் என்றும் நிலைத்து நின்று சுடர் விட்டு வழிகாட்டும் துருவ நட்சத்திரமாகத் தாங்கள் ஒளி வீசுவீர்கள். நான் திசை அறிந்து என் மரக்கலத்தைத் திருப்பிக் கொண்டு வருவேன். கடற்கரை ஓரத்துப் பாறைகளில் மாமலைகள் போன்ற பேரலைகள் தாக்கிக் கடல் கொந்தளித்துக் கொண்டிருக்கும் இரவு நேரங்களில் கலங்கரை விளக்கிலிருந்து வரும் உயிர்காக்கும் ஒளியாகத் தாங்கள் பிரகாசிப்பீர்கள். அந்தப் பிரகாசத்தைக் கொண்டு என் படகு பாறையில் மோதாமல் கரையிலே கொண்டு வந்து சேர்ப்பேன். புல்லும் பூண்டும் முளையாத அகண்டமான பாலைவனப் பிரதேசத்தில் வடவைக் கனல் எனக் கொளுத்தும் வெய்யிலில் அனல் பிழம்பெனச் சுட்டுப் பொசுக்கும் மணலில் நான் தாகத்தினால் நா உலர்ந்து வியர்வைக் கால்கள் வறண்டு தவித்துத் தத்தளிக்கும் நேரங்களில் தென்னை மரங்களும் தேன் கதலிகளும் சூழ்ந்த ஜீவநதியாகத் தாங்கள் எனக்கு உதவுவீர்கள். தேவி! இந்த விரிந்து பரந்த உலகத்தில் நான் எங்கே போனாலும் எத்தனை கஷ்டங்களுக்கு உட்பட்டாலும் ஒருநாள் கட்டாயம் திரும்பி வருவேன். திரும்பி வந்து தங்களைக் கரம் பிடித்து மணந்து கொள்வேன். இந்த என் மனோரதம் நிறைவேறும் வரையில் என்னை யமன் நெருங்க மாட்டான். அமுதமுண்ட அமரனாக இருப்பேன்!"

**இ**வ்விதம் வந்தியத் தேவன் தன் வாழ்க்கையில் என்றும் பேசி அறியாத வாறு பேசிவிட்டு உட்கார்ந்தான். இளைய பிராட்டி மெய்மறந்து அவன் முகத்தைப் பார்த்த வண்ண மிருந்தாள். இந்த வார்த்தைகளை யெல்லாம் இந்த வீரன் முதல் முறையாகத் தன்னிடம் சொல்லவில்லை யென்றும், எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முற்பட்ட யுக யுகாந்திரங்களில் எவ்வளவோ தடவை இதே சொற் பிரவாகத்தை இவனிடம் கேட்டிருப்பதாகவும் அவளுக்குத் தோன்றியது. இந்தச் சித்தப் பிரமையின் விசித்திரத்தைப் பற்றி அவள் சிந்தித்துக் கொண்டிருந்த போது "அக்கா! அக்கா!" என்ற வானதியின் குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

வானதி விரைந்து அவர்கள் அருகில் வந்து, "அக்கா! இவருக்கு ஓர் அவசர ஓலை வந்திருக்கிறது. மணிமேகலையின் தமையன் கந்தமாறனிடமிருந்து வந்திருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே ஓலையை நீட்டினாள்.

(அடுத்த இதழில் முடியும்)

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## டிரை பாட்டரி விற்பனையாளர்களுக்கு

# மிகக் குறைந்த விலை

| ரகம் | ஒரு குரோஸின் விலை | தள்ளுபடி |
|---|---|---|
| 112 | ரூ. 42/- | கேஸ் ஒன்றுக்கு 12½% |
| 113 | ரூ. 39/- | கேஸ்கள் 3-க்கு 12½% தவிர 2½% |
| 114 | ரூ. 36/- | கேஸ்கள் 10-க்கு 12½% தவிர 4% |

எங்களது கல்கத்தா, கான்பூர் நாகபுரி கிளை ஆபீஸ்களின் எல்லைக்கு உட்பட்ட வியாபாரிகளுக்கும் பவநகர், ஹைதராபாத். இந்தூர் மற்றும் **சென்னையில்** உள்ள ஏஜெண்டுகளின் மூலம் சரக்குகளைப் பெறுவோருக்கும் மேற்கண்டபடி விலையில் சலுகைகள் அளிக்கப்படும். உங்களது ஸ்டேஷன்களுக்குச் சாமான்களைக் கட்டணமில்லாமல் இலவசமாக அனுப்பப்படும். இதர விவரங்களுக்கும் மற்ற ரகங்களின் விலைகளுக்கும் எழுதிக் கேட்கவும்.




உங்கள் ஆர்டர்களை அருகிலுள்ள எமது கிளை ஆபீஸுக்காவது அல்லது ஏஜெண்டுக்காவது உடனுக்குடன் அனுப்பி வைக்கக் கோருகிறோம். அதிகமாக விற்று அதிக லாபம் அடையுங்கள்.




**எஸ்ட்ரெலா**
**பாட்டரிகள்**

## எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-19

*பிராஞ்சுகள்:* மதராஸ், டில்லி, கல்கத்தா, கான்பூர், நாகபுரி

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## உங்கள் பேனாவின் ஆயுளை நீடியுங்கள்!






# பார்க்கர் க்வின்க்

உபயோகியுங்கள்:

# ஸால்வ்-X

### அடங்கிய மை இது ஒன்றே

இப்பொழுதே பார்க்கர் க்வின்க் உபயோகிக்கத் தொடங்குங்கள். பேனாவைப் பாதுகாக்கும் பொருள் ஸால்வ் - X அடங்கிய மை இது ஒன்றுதான். இந்தப் பொருள் பேனா அடைபடுவதைத் தடுக்கிறது; உண்மையில் நீங்கள் எழுதுகையிலேயே பேனாவை துப்புரவாகக் கழுவி சுத்தம்செய்கிறது. மையோட்டம் தடையின்றி லாகவமாக அமைகிறது. க்வின்க் அழியா வர்ணங்களிலோ அல்லது கழுவக்கூடிய நிறங்களிலோ நீங்கள் விரும்பியபடி வாங்கலாம்.

விநியோகஸ்தர்கள் : டாட்ஜ் & ஸேமர் (இந்தியா) லிட்.
த. பெ. 51, மதராஸ்

PKQ. 7765




இந்தக் காலத்திலே எத்தனையோ வித விளையாட்டுத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. கால் பந்தாட்ட விழா நடைபெறுகிறது. கைப் பந்தாட்டத் திருவிழா நடைபெறுகிறது. பூப்பந்தாட்ட விழா நடைபெறுகிறது. கிரிக்கெட், ஹாக்கி, ஓட்டப் பந்தயம், தாண்டல் பந்தயம் என்று பல விளையாட்டு விழாக்கள் நடைபெறுகின்றன. அவரவர்களுக்குத் தெரிந்த விளையாட்டு அவரவர்களுக்கு முக்கியமானது. ஆகையினால் எல்லா வற்றுக்குமே விழா கொண்டாட வேண்டியதுதான்.

ஆனாலும் ஏப்ரல் மாதம் இருபத்தைந்தாம் தேதி வாணியம்பாடியில்நடைபெற்ற நகர ஆரம்பப் பாடசாலைகளின் விளையாட்டு விழாவைப் பார்த்தவர்கள்; சின்னஞ் சிறு குழந்தைகளின் குதூகலத்தைப் பார்த்தவர்கள்; அதன் தனிச் சிறப்பைப் பாராட்டாமலிருக்க முடியாது.

"ஓடி விளையாடு பாப்பா! — நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!"

என்று கவியரசர் பாரதியார் பாடினார். சின்னஞ் சிறு குழந்தைகளைப் பார்த்து,

"கூடி விளையாடு பாப்பா!—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா!"

என்று கனிவு ததும்பக் கூறினார்.

மகா கவியின் வாக்கை வாணியம்பாடியில் உள்ள பள்ளிக்கூட ஆசிரியர்களும், ஆசிரியைமார்களும் நல்ல முறையில் நடத்திக் காட்டினார்கள். குழந்தைகளுக்குள் விளையாட்டில் போட்டிப் பந்தயம் வைத்துக் குழந்தைகளுக்குள் கட்சி பிரிக்கவில்லை. விளையாட்டில் வெற்றி பெற்ற குழந்தையைப் பார்த்து, தோல்வி யடைந்த குழந்தைகள் அழுகையைப் படாமல் எல்லாக் குழந்தைகளும் ஒற்றுமையாகக் கூடி விளையாடும் ஆனந்தமான விளையாட்டுத் திருவிழாவை வெற்றிகரமாக மிகச் சிறந்த முறையில் நடத்தினார்கள்.

சுமார் அறுநூறு மாணவ, மாணவிகள் "சின்னஞ் சிறு குருவியைப் போலப் பறந்து திரிந்து" விளையாடும் திருவிழாவை நடத்தினார்கள். அந்த விழாவுக்கு வெளியூர்களில் இருந்து பல பிரமுகர்களை வரவழைத்தார்கள். "விளையாட்டுவிழா என்றால், இது வன்றோ விளையாட்டு விழா!" என்று வந்திருந்தவர்கள் வியக்கும்படியாக விளையாட்டு விழாவை நடத்தினார்கள்.

** ** **

வாணியம்பாடி பெரிய ஊர்; ஆனால் முதன் முதலாக ஊரைப் பார்க்கும் போது அப்படித் தோன்றவில்லை. ஊரின் மொத்த ஜனத் தொகையைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகுதான் அது எவ்வளவு பெரிய ஊர் என்பதை ஒருவாறு தெரிந்துகொள்ள முடிந்தது.

இவ்வளவு பெரிய ஜனத் தொகை உள்ள ஊரில் இருபது எலிமெண்டரி பாடசாலைகள் இருப்பதில் ஆச்சரியம் இல்லை. ஊரில் உள்ள தண்ணீர் உப்புக் கரித்துக் கொண்டிருந்தாலும் ஊர் ஜனங்கள் இனிமையாகவே இருக்கிறார்கள். முஸ்லிம்களின் ஜனத் தொகை இங்கு அதிகம். வாணியம்பாடி முஸ்லிம்கள் சிறந்த தொழில் வல்லுநர்கள். எந்தக் காரியத்தை மேற் கொண்டாலும் அதை மிகத் திறமையாகச் செய்து முடிக்கும் ஆற்றல் படைத்தவர்கள். இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு உறுதியான அடிப்படை அமைத்திருக்கிறார்கள்.




இந்துவாயிருந்தாலும், முஸ்லிமாயிருந்தாலும் எல்லோரும் தமிழர்கள்தானே என்ற மனப்பான்மையில் சகோதரர்கள் போல வாழ்ந்து காட்டி வருகிறார்கள். அவர்களுடைய உழைப்பால் அந்த ஊர் எவ்வளவு சிறந்த முறையில் பெருமைப் பட்டு வருகிறது என்பதை அவ்வூரில்



விளையாட்டு விழாவை வெற்றிகரமாக நடத்திய ஆரம்ப பாடசாலை ஆசிரியர்கள். நடுவில் மாலையுடன் உட்கார்ந்திருப்பவர்தான் திரு எஸ். ஆர். கல்யாணராமன்.

ஒவ்வொரு துறையிலும் காண முடிகிறது. இந்த விளையாட்டு விழாவிலும் அதை உணர முடிந்தது.

விளையாட்டு விழாக் கூட்டம் ஆரம்பமானதும் மேடைமீது இருந்தபடி எதிரே விளையாட்டு மைதானத்தைப் பார்த்தேன். விளையாட்டு மைதானத்தைச் சுற்றிலும் ஆயிரக் கணக்கான மக்கள் வந்து கூடி இருந்தனர். சிலர் பக்கத்தில் இருந்த காம்பவுண்டு சுவரின்மீது ஏறிச் சுவர் வைத்தது போல வரிசையாக உட்கார்ந்திருந்தனர். இன்னும் சிலர் அருகில் இருந்த மரங்களின்மீது அபாயமான இடத்தில் அமர்ந்திருக்கிறோம் என்பதையும் மறந்து அமர்ந்திருந்தனர். மேடைக்கு இருபுறமும் இருந்த விசாலமான இடத்தில் குழந்தைகளின் பெற்றோர்கள் தாய்மார்களுடன் நெருக்கி அடித்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். இதுவரை வாணியம்பாடியில் நடந்த எந்த விழாவுக்கும் ஜனங்கள் இந்த மாதிரி குதூகலமாக வந்து கூடியதில்லை என்று அந்த ஊரைச் சேர்ந்த பலர் பேசிக் கொண்டனர்.

விளையாட்டு மைதானத்துக்கு மத்தியில் பார்வையைச் செலுத்தினேன். வட்டம் வட்டமாக இருபது வட்டத்தில் அமர்ந்திருந்த மாணவர்களையும், மாணவிகளையும் பார்த்தேன். அறிவுக் களையும் ஆனந்தமும் தவழும் அந்தக் குழந்தைகளை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம்! விதம் விதமான ஆடைகள் அணிந்து கொண்டு அவர்கள் அமர்ந்திருந்தார்கள். எட்டு வயதிலிருந்து பன்னிரண்டு வயதுக்குட்பட்ட சின்னஞ் சிறு குழந்தைகளாக இருந்தாலும் நிமிர்ந்த மார்புடனும், நேர் கொண்ட பார்வையுடனும் கம்பீரமாக வீற்றிருந்தார்கள்.

விளையாட்டு மைதானத்தின் மத்தியில் ஓங்கி வளர்ந்திருந்த கம்பத்தின் உச்சியில் வாணியம்பாடி நகரசபைக் கமிஷனர் திரு கே. சேஷாச்சாரி அவர்கள் பாரத நாட்டின் மணிக் கொடியை ஏற்றிப் பறக்க விட்டார்.

ஆரம்ப பாடசாலைகளின் மாணவ மாணவிகள் கொடி வணக்கம் செய்தார்கள்.

ஒவ்வொரு பள்ளி உபாத்தியாயர், உபாத்தியாயினி தலைமையிலும் ஒவ்வொரு பள்ளிக்கூடத்து மாணவ மாணவிகளும் அணி அணியாக வந்து பாரத நாட்டின் மூவர்ணக் கொடியை வணங்கிச் சென்ற காட்சி அழகு நிறைந்த ஆனந்தமான காட்சியாக இருந்தது.

டாக்டர் சி. நாதமுனி நாயுடு அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கி விழாவை ஆரம்பித்து வைத்தார்கள். விளையாட்டு விழா ஆரம்பமாயிற்று. சுமார் இருபது வகையான விளையாட்டுக்களைச் சிறுவர்கள் விளையாடினார்கள். அறுநூறு மாணவ மாணவிகளும் சேர்ந்து ஆகாய விமானம் பறக்கும் போது ஏற்படும் சத்தத்தைப் போலச் சத்தம் போட்டு விமானம் ஆகாயத்தில் ஏறியும் இறங்கியும், தாழ்ந்தும் வளைந்தும் செல்லுவது போல் செய்து காட்டினார்கள். "இந்த விமானத்தில் பிரயாணம் செய்தால் ஆபத்து ஏற்படாது" என்று சொல்லி எல்லோரையும் நகைக்கும்படி செய்தார்கள். 'குப், குப்' 'குபுகுப், குபுகுப்' என்று ரயில் வண்டி விட்டார்கள். "ஓடி ஓடி வருவீரே!" என்று பாடிக் கொண்டு ஓடிஓடி விளையாடினார்கள். "ஆடுவோமே!" என்ற கீதத்துக்கு ஏற்ற வண்ணம் ஆடி விளையாடினார்கள்.

கூடியிருந்த மாபெரும் கூட்டம் "குபீர்!" "குபீர்!" என்று சிரிக்கும்படி குந்திக் குந்தி நடந்து, தலையில் ஒரு குச்சியைப் பிடித்துக் கொண்டு "குரங்கு நடை" நடந்தார்கள். தத்தித் தாவி, ஆடி அசைந்து "வாத்து நடை" நடந்தபோது ஏற்பட்ட கரகோஷம் வான வெளியை எட்டிப் பிடித்தது. அத்தனை குழந்தைகளும் வாத்தாகி விட்டார்களோ என்று ஒரு கணம் வியக்கும்படி இருந்தது. "கா! கா!" 'கா! கா!" என்று காகம் கரைவது போல அந்தச் சின்னஞ் சிறு குழந்தைகள் கத்தியதும் உண்மையான காக்கைக் கூட்டமே "கா! கா" வென்று அங்கு படையெடுக்கத் தொடங்கி விட்டது!

"புஸ்...ஸ்...ஸ்" "பட்!" "பட பட பட்" என்று பட்டாக வெடித்தல் விளையாட்டைக்

குழந்தைகள் விளையாடிய போது தீபா வளித் திருநாளை அந்த இடத்தில் அந்தச் சமயத்தில் கொண்டாடியது போலத் தோன்றியது. "திருட்டுப் பூனை" விளையாட்டின் போது திருட்டுப் பூனைகளே குழந்தை உருக்கொண்டு வந்து விட்டனவோ என்று வியக்கும் படி இருந்தது. கை இரண்டையும் துதிக்கை போலத் தொங்க வைத்துக் கொண்டு யானையைப் போல ஆடி, அசைந்து ஆடி "யானை நடை" நடந்த போது "அறு நூறு யானைகளுக்கும் தீனி போட்டுக் கட்டுமா!" என்று கேட்டு வியந்தார் மேடைமீது இருந்த ஒருவர். "வான வில்" காட்டியதும், "தோழனைக் கண்டு பிடி" விளையாட்டும், "படகோட்டி" நடனமும், "ராம்பே, ரம்பம்பே" "கப ஜெயம்" முதலிய விளையாட்டுகளும் படம் பிடித்து வெள்ளித் திரையில் காட்ட வேண்டிய அற்புதமான காட்சிகள்.

இந்த விளையாட்டுகள் ஒவ்வொன்றுக்கும் ஏற்ற வண்ணம் பாட்டு அமைத்திருந்தார்கள். பாட்டை இசையோடு பாட, பாடலுக்கு ஏற்றபடி அறு நூறு குழந்தைகளும் ஆடி ஓடி விளையாடும் போது எங்கோ கவலையற்ற குழந்தைகளின் குதூகல உலகத்தில் இருப்பது போலத் தோன்றியது.

அந்தச் சிறுவர் சிறுமிகள் "தெருக் கூத்து" விளையாட்டு ஒன்று விளையாடினார்கள். கூத்துக்கு ஏற்றபடி குழந்தைகள் வேஷம் போட்டுக் கொண்டனர். பாரதநாட்டில் உள்ள அத்தனை விதமான கிராம்ய ஆண் பெண் உடைகளை அணிந்து கொண்டார்கள். தெருக் கூத்து நடனம் ஆரம்பமாயிற்று.

"தெருக்கூத்து நல்லா ஆடுவான்
எங்கள் சின்னமாமன்
பெண் வேஷம் நல்லா போடுவான்!
ஒருகூத்தா இருகூத்தா,
ஒன்பது கூத்தாடுவான்!
உட்கார்ந்து படிக்கச்சொன்னால்
உருட்டி உருட்டிக்
கண் விழிப்பான்!"

என்ற பாட்டைக் கிராமிய மெட்டில் பாடக் குழந்தைகள் அதற்கு ஏற்ற வாறு ஆடி ஆடி நடித்த போது அந்த மாபெரும் கூட்டமும் தாளம் போட்டுக் கொண்டு பச்சிளங் குழந்தைகளுடன் ஆட ஆரம்பித்து விட்டது.

குழந்தைகளுக்குப் பாடலோடும் ஆடலோடும் படிப்புச் சொல்லிக் கொடுக்கலாம் என்பதற்கு இந்த விளை









1. தெருக் கூத்து நடக்கிறது. 2. விளையாட்டு விழா மைதானத்தில் ஒரு தோற்றம். 3. ஜனாப் குதூஸ் விளையாட்டு விழாவைப் பற்றி வியந்து பேசுகிறார். 4. விழாவுக்கு வந்திருந்த பெண்மணிகளின் கூட்டத்தில் ஒரு பகுதி.




அன்று பத்மநாபனின் மகள் பத்மலோசனியின் கலியாணம் அருகிலிருந்த கோயிலில் அதிக ஆடம்பரம் எதுவுமின்றி எளிய முறையில் நடந்தேறியது. பின்னும் ஒரு மணி நேரத்தில் தம்பதிகள் ஊர்வலமாகக் கோயிலிலிருந்து வந்து விடுவார்கள். அவர்கள் வருகையை எதிர்பார்த்த வண்ணம் மாடிக் கைப்பிடிச் சுவரின்மீது சாய்ந்தவண்ணம் நின்ற பத்மநாபனின் உள்ளத்தில் மகிழ்ச்சியின் ஊடே சிறு வேதனையும் எழுந்தது.

"மிக்க ஆடம்பரமாக நடக்க வேண்டிய என் குழந்தையின் கல்யாணம், என் அறிவீனத்தால் இன்று எவ்வளவு எளிய முறையில் நடத்தும்படி வந்தது."—இவ் வெண்ணம் எழுந்ததும் அந்தகனான பத்மநாபனது ஒளியற்ற கண்களினின்றும் இருநீர் முத்துக்கள் ஒளியுடன் உருண்டு விழுந்தன.

பெரிய மிராசுதாரான பரந்தாமனுக்குப் பத்து வருஷங்கள் குழந்தை யில்லாமலிருந்தது. பிறகு அபூர்வமாகப் பிள்ளை பிறக்கவே அவ் வைபவத்தைக் கொண்டாட அதிவிரிவான ஏற்பாடுகள் செய்து ஊர் எல்லாம் அழைத்தார்.

பலமான விருந்துபசாரத்துக்குப் பின் அனைவரும் அபூர்வமாகப் பிறந்துள்ள பரந்தாமனின் செல்வ மகனைச் சுற்றிக்கொண்டு ஆசையுடன் பார்ப்பதற்கு ஆரம்பித்தார்கள். நாற்பது தினங்களே ஆகியிருக்கும் பார்ப்பதற்கு குழந்தை அழகாகவும் திடகாத்திரமாகவும் இருந்தது. இது குறித்துப் பரந்தாமன் தம்பதிகளுக்கு அளவற்ற பெருமையும், மகிழ்ச்சியும் ஏற்பட்டது. நண்பர்கள் ஒவ்வொருவரும் குழந்தையின் சாமுத்திரிகா லட்சணத்தைச் சிலாகித்தபோது அந்தத் தம்பதிகளின் மகிழ்ச்சிக்கோர் எல்லை இல்லை. அச் சமயம் திடீரென்று ஒரு சிறுவனின் கேள்வி பலமாக ஒலித்து அனைவரது கவனத்தையும் இழுத்தது. அவன் மிக்க ஆர்வத்தோடு கேட்டான்: "அப்பா! பாப்பாவின் கண்ணிலே ஏன் 'பாப்பா' தெரியவில்லை!"

சிறுவனின் தகப்பனார் பரபரப்புடன் குழந்தையின் கண்ணுக்கு நேராகத் தம் விரலை நீட்டினர். அவரது கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. "ஆ! இது வென்ன! குழந்தையின் கண்ணில் ஏன் என் விரலின் பிரதிபிம்பம் விழவில்லை! குழந்தை தன் கண்களையும் ஏன் கொட்டவில்லை!" என்று கேட்டார்.

இதைத் தொடர்ந்து பலரது ஆராய்ச்சியும் விமரிசனமும் எழுந்தது. டாக்டர்கள் தருவிக்கப்பட்டனர். முடிவில் பரந்தாமன் தம்பதிகளின் அருமைச் செல்வன் 'கண் பார்வையற்ற அந்தகன்' என்ற தீர்ப்பே ஸ்திரப்பட்டது.

கண் பெற்ற குருடர்களைப் போல மைந்தன் பிறந்த மகிழ்ச்சியில் மூழ்கி யிருந்த பரந்தாமன் தம்பதிகளுக்கு இச் செய்தி பேரிடிபோல் தாக்கியது. அவர்கள் கண்களுக்கு உலகமே இருள் மயமாகத் தோன்றியது. அரிதிலும் அரிதாகப் பிறந்துள்ள தங்கள் அருமைச் செல்வன், 'அந்தகன்' என்று எண்ண எண்ண அந்தத் தம்பதிகளின் உள்ளம்கூட இருண்டு குருடாகியது.

ஏராளமான ஆஸ்திக்கு ஒரே வாரிசாகப் பிறந்துள்ள பிள்ளை பத்மநாபனின் எதிர்கால வாழ்வைப் பற்றி எண்ணும்போது பெற்றவளின் நெஞ்சம் நெருப்பில்லாமலே வேகத் தொடங்

கிரிஜா

மணியம்



# அந்தகன் குழந்தை



கியது. தாயுள்ளம் என்றுநாளும் எண்ணி ஏங்கியது. இப்படிப் பல பல எண்ணி ஏங்கியவள் அதிக காலம் இவ்வுலகில் உயிரோடு இருக்கவில்லை.

பரந்தாமன் தம் அருமை மனைவியின் பிரிவுக்குப் பின் பெரிதும் கஷ்டப்பட்டார். அந்தகனை பிள்ளையின் பராமரிப்பை அவர் ஒருவராகவே கவனிக்க முடியாமல் கஷ்டப்பட்டார். அதனால் அவர் தமது ஒன்றுவிட்ட சகோதரியைத் தருவித்துத் தம் வீட்டோடு வைத்துக் கொண்டார். அவரது சகோதரியின் பெண் அழகி ஹேமா, அவரது பிள்ளை பத்மநாபனுக்கு உற்ற தோழியாகவும், ஊன்றும் கோலாகவும், பார்க்கும் கண்களாகவும் இருந்து பரந்தாமனது உள்ளச் சுமையை ஒரு சிறிதளவு குறைத்தாள். அவ்வழகியின் தோழமையால் குதூகலங் கொண்ட பத்மநாபன் குழந்தைப் பருவத்தைக் கடந்து பெரியவன் ஆனான்.

இப்போது பரந்தாமன் தமது மகனது புத்தி தீக்ஷண்யத்தைக் கண்டு அதிசயித்தார். அடியோசையைக் கொண்டே வருபவரை அறிந்து சொல்லும் அவன் ஆற்றலைக் கண்டு ஆச்சரியம் கொண்டார். கேட்கும் விஷயங்களைக் கிரகித்துப் புரிந்து கொள்ளும் அவனது புத்தி கூர்மையைக் கண்டு பெருமையும், பூரிப்பும் கொண்டார். தம் அருமைச் செல்வனுக்கு அந்தகத் தன்மையைக் கொடுத்த இறைவன், அவனுக்கு வேறு பல நன்மைகளைக் கொடுத்திருப்பதை எண்ணிச் சற்று ஆறுதலும் கொண்டார்.

கல்லூரிப் பேராசிரியர்கள் அனைவரும் பத்மநாபனின் மேதா விலாசத்தைக் கண்டு மெச்சிப்

புகழ்ந்தனர். வயது ஏற ஏற அவனது அறிவும் அதிகச் சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கியது. ஒருநாள் பிரின்ஸ்பல் ஒரு காவியத்துக்குச் சரியான அர்த்தம் சொல்ல இயலாமல் திணறியபோது பத்மநாபன் அச்செய்யுளின் அர்த்தத்தைத் தன் அகத்தால் விளக்கினான். பேராச்சரியம் கொண்ட பேராசிரியர் அப்படியே அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு விட்டார். இந்தச் செய்தியைக் கேட்டபோது பரந்தாமனின் உள்ளம் உவகையால் பூரித்தது.

அன்று பரந்தாமன் தன் மைந்தனின் அறைப் பக்கமாக வந்தபொழுது அவரது கவனத்தைக் கவர்ந்த சம்பாஷணையினால் அசைவற்றுச் சிலை போல நின்று விட்டார்.

பரந்தாமனின் தங்கை மகள் ஹேமா அன்பு கனிய, "அம்மாஞ்சி! காலேஜில் நேற்று பேராசிரியர் நடத்திய பாடம் ஒன்றுமே எனக்கு விளங்கவில்லை; அந்தப் பிரசங்கம் இன்று நீங்கள் விரிவாக எடுத்துச் சொல்லி எனக்கு விளங்க வைத்த பிறகுதான் விளங்கியது. அறிவு விஷயத்தில் குருடாக இருக்கும் எனக்கு நீங்கள் அறிவுக் கண்ணாக இருந்து வழி காட்டுகிறீர்கள். இவ்வரிய உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!" என்றாள்.

இதைக் கேட்ட பத்மநாபன் நன்றி யுணர்ச்சியுடன், "ஹேமா! இதுவென்ன இன்று புதிதாகச் சொல்லுகிறாய்! வெளியுலகைப் பார்க்கும் சக்தியற்ற எனக்கு நீ பார்க்கும் கண்ணாக இருக்கிறாய். உன் தோழமை மூலம் உலகைப் பார்க்கும் நான் இன்று வரை என் பெரும் குறையை உணராமல் இருந்து வருகிறேன். அப்படியிருக்க என்னவோ இன்று என் செய்கையைப் பிரமாதமாக எடுத்துச் சொல்லுகிறாயே!" என்றான்.

எழுந்து அவன் அருகில் வந்து உட்கார்ந்த ஹேமா, "அம்மாஞ்சி! நான் உங்களுக்குப் பார்க்கும் கண்ணாக நின்று வழிகாட்டுவேன்; நீங்கள் எனக்கு அறிவுக் கண்ணாக நின்று வழி காட்டுங்கள்; இருவரும் சேர்ந்து நின்று இவ்வுலகுக்கே ஓர் புதிய வழியைக் காட்டுவோம்" என்று சொல்லிவிட்டுக் குதூகலமாக நகைத்தாள்.

பரபரப்புடன் எழுந்த பத்மநாபன், "அப்படியானால், ஹேமா நீ என்றுமே என் வாழ்வின் ஒளியாக, கண்ணின் மணியாக இருக்கத் தீர்மானித்து விட்டாயா!" என்றான். ஆவலால் அவனது அழகிய உடல் குலுங்கியது; அவனது அழகிய முகம் சிவந்தது; மெல்லிய சிவந்த உதடுகள் படபடத்தன. அவளது பதிலைக் கேட்கத் துடிப்புடன் நின்ற அவனது தோற்றம் அவளுக்கு அளவற்ற வியப்பைக் கொடுத்தது.

"அம்மாஞ்சி! இதில் உங்களுக்குச் சந்தேகம் வேறா! நான் இன்று போல் என்றுமே உங்கள் கண்மணிதான்" என்று சொல்லிவிட்டுக் கலகலவென்று நகைத்தாள். அப்போது அவனும் அவளுடன் சேர்ந்து சிரித்தான்.

கள்ளமற்ற அவ்விருவரது சிரிப்பும் சேர்ந்து அறை முற்றிலும் மோதி எதிரொலித்து, அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்த பரந்தாமனின் செவிகளிலும் வந்து மோதி அவரது உடலைச் சிலிர்க்கச் செய்தது.

குருடாக இருப்பது தம் மகனா, மருமகளா! என்ற பிரமிப்பில் ஆழ்ந்து நின்ற பரந்தாமன் பிறகு ஒரு முடிவுக்கு வந்தவராய் நீண்டதோர் பெருமூச்சு விட்டு விட்டுத் தம் அறையையடைந்து நிம்மதியாகப் படுத்தார்.

அதற்கடுத்த நாள் அவர் தம் மருமகளை அருகில் அழைத்து, "அம்மா, குழந்தாய்! நீ உன் மனத்திலுள்ளதை இன்று என்னிடம் ஒளிக்காமல் சொல்ல வேண்டும். என் மகன் பத்மநாபனை மணக்க உனக்குச் சம்மதமா! இதை நீ நன்றாக யோசித்து விடை கொடு. இது உன் வாழ்க்கை முழுதும் பாதிக்கக் கூடிய விஷயம். பின்னால் என்றுமே இது குறித்து நீ வருந்தக் கூடாது. உணர்ச்சி வசப்பட்டு இன்று நீ சம்மதம் கொடுத்து விட்டுப் பின்னால் இது பயித்தியக்காரத்தனம் என்று எண்ணவோ, அன்றி என் மகனை அவமதிக்கவோ கூடாது. ஆகையால் நீ நன்கு யோசித்துச் சொல்லு. இப்படியெல்லாம் நான் சொல்வதற்குக் காரணம், என் மகன் பத்மநாபன் ஓர் அந்தகன் என்பதே" என்று கூறி நிறுத்தினார். அப்போது துன்பத்தால் அவரது குரல் கம்மியது. கண்களில் நீர் நிறைந்தது.

ஹேமா தலை நிமிர்ந்து மாமாவின் முகத்தை ஏறிட்டு நோக்கினாள். அவளது அகன்ற பெரிய விழிகளிலும் நீர் முத்துக்கள் திரண்டன. "மாமா இதுவென்ன! அம்மாஞ்சி கண்ணற்றவர் என்ற எண்ணமே இன்று வரை எனக்கு உண்டான

இந்தக் கதையில் வரும் காட்சி யொன்று இவ்வார அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது!

இல்லை; இனி என்றுமே அது உண்டாகாது! இது நிச்சயம். இன்றுவரை ஒன்றாக நின்று அவரது அன்பு நிறைந்த உதவியால் என் அறிவையும், மகிழ்ச்சியையும் பெருக்கிக் கொண்டுள்ளேன். இனியும் அவரின்றி எனக்கு வாழ்வு ரசிக்காது. மொத்தத்தில் என்னை விட்டு அவரைப் பிரிப்பது என்பது என்னுடைய கண்களை என்னிடமிருந்து பிரிப்பது போல மனத்தை வாட்டி வருத்தும்'' என்று கூறி நிறுத்தினாள்.

அவளது வார்த்தைகளால் பரந்தாமனது உள்ளம் கசிந்தது. அவர் தம் கரத்தை அவன் சிரசின் மீது வைத்து ஆசீர்வதித்துச் சொன்னார் :—''குழந்தாய்! நீ என் குலத்தை வாழ்விக்க வந்த தெய்வம்!'' என்றார். அவரது குரல் தழதழத்தது; கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கி வந்தது.

பரந்தாமன் தம் அருமை மகனது விவாகத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினார். 'அந்தகனான தன் மகனுக்கு இல்லற வாழ்வு இல்லை' என்று ஏங்கிய அவருக்கு இத் திருமணம் எல்லையில்லாத மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஆகவே அவர் அன்னதானமும், சொர்ணதானமும் செய்து பத்மநாபனது திருமணத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடினார். அதன் பின் மகனது இல்லற வாழ்வைக் கண்டு மகிழ்ந்த அவர் அந்த மகிழ்ச்சியுடனேயே இறைவனின் இருப்பிடத்தைச் சென்று அடைந்தார். சில நாட்களில் அவரது சகோதரியும் அவரைத் தொடர்ந்தாள்.

## பிரபல திருமணம்



சென்னை ஜார்ஜ் ஒக்ஸ் லிமிடெட் டைரக்டரும் ஜெனரல் மானேஜருமான ஸ்ரீ கே. ஹரிஹரன் அவர்களின் குமாரி சௌபாக்யவதி **பூர்ணபுஷ்கலத்துக்கும்** ராஜக்கால்மங்கலம் ஸ்ரீ ஆர். எஸ். பரசுராம அய்யர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி **ஆர். பி. சுப்பிரமணியனுக்கும்** சென்ற 25-4-54 சென்னையில் மிகவும் சிறப்பாக விவாகம் நடந்தேறியது. முகூர்த்தத்திற்கும் அன்று மாலை நடந்த வரவேற்புக்கும் பல பிரமுகர்கள் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க மணமக்கள்.

*

அன்புக் கயிற்றால் இறுகப் பிணைக்கப்பட்டு விட்ட பத்மநாபன் தம்பதிகளுக்குப் பெரியவர்களின் பிரிவுத் துன்பத்தைத் தாங்குவதற்கும் அவ் வன்பே உதவியாக இருந்தது.

காலம் மெல்ல வளர்ந்து பத்மநாபன் தம்பதிகளின் அன்புக்கு ஓர் அடையாளத்தைப் பிறப்பிக்கும் தினம் வரை வந்து விட்டது.

''குவா'' ''குவா'' என்றெழுந்த அந்தப் புதிய சத்தம் பத்மநாபனின் படபடப்பை அதிகமாக்கியது. அவன் துடிப்புடன் டாக்டரின் வருகையை எதிர் நோக்கி நின்றிருந்தான்.

'டக்' 'டக்' கென்று பூட்ஸ் சத்தம் பத்மநாபனது செவிகளில் மோதி எதிரொலி செய்ய நடந்து வந்த டாக்டர், பத்மநாபனது கைகளைப் பிடித்துக் குலுக்கிய வண்ணம், ''கவலையை விடுங்கள் சார்; உங்கள் பையனின் கண்கள் நல்ல ஒளியுடன்தான் இருக்கின்றன. கண்களில் வேறு விதக் கோளாறும் இல்லை'' என்றார். டாக்டரின் வார்த்தைகளால் பத்மநாபனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கோர் எல்லையேயில்லை. அவன் அன்று தன் இழந்த கண்களையே பெற்று விட்டது போலப் பூரித்தான்.

குழந்தை மனோகரின் மூலம் பத்மநாபன் தம்பதிகளின் அன்பு பின்னும் இறுக்கமாகப் பின்னப்பட்டு எல்லை காண வியலாத இன்பத்துக்கும் ஏதுவாயிற்று. இவ்வித இன்பத்தின் ஊடே இரண்டாண்டுகள் பறந்தோடி விட்டதை அத் தம்பதிகள் உணர்ந்தார்களோ, என்னவோ!

மூன்றாம் ஆண்டில் இரண்டாவது கர்ப்பத்தைச் சுமந்து நின்ற ஹேமா, பத்மநாபனது அன்பை அள்ளிப் பகிர்ந்து கொள்ள இன்னுமொரு புதிய நபர் தோன்றப் போவதை எண்ணி மகிழ்ந்த வண்ணம் இன்ப கீதம் இசைத்துப் பாடிப் பறந்து கொண்டிருந்தாள். பாவம்! அவள் தன் இன்பத்துக்கும் இடையூறு உண்டு என்பதைக் கனவிலும் எதிர்பார்க்கவில்லை.

அன்றும் பத்மநாபன் தன் வழக்கப்படி காற்றுக்காக வெளி வராண்டாவில் உலாவிக் கொண்டிருந்தான். அச்சமயம் அடுத்த வீட்டு வெளி வராந்தாவில் நடந்த ஒரு சிறு சம்பாஷணை அவனைத் திடுக்கிட வைத்து, அவன் வாழ்வையும் பாழ் செய்ய ஹேதுவாயிற்று.

தன் வீட்டுத் திண்ணையில் தூங்கிய ஒரு சிறுவனைத் தட்டி யெழுப்பிக் கொண்டிருந்தார் அடுத்த வீட்டுக்காரர். அதே சமயம் அவர் வீட்டு விருந்தாளியாக வந்து படியேறிய ஒருவர், ''யார் இந்தச் சோம்பேறிப் பயல், நம்ம சோம்பேறிக் கிட்டுவின் பயலா!'' என்றார்.

வியப்புடன் நிமிர்ந்த வீட்டுக்காரர், ''அதை எப்படி நீங்கள் ஊகித்தீர்கள்!'' என்றார்.

''இது என்ன பிரமாதம்! இந்தப் பயலது சோம்பேறித் தனமே இவனது தகப்பன் யாரென்பதைக் காட்டிவிடுமே! திருடனின் பிள்ளை எப்படித் திருடனாகிறானோ, அப்படிச் சோம்பேறியின் பிள்ளை சோம்பேறியாகத்தான் விளங்குவான். மூடனின் பிள்ளை மூடனாகத்தான் இருப்பான். புத்திசாலியின் பிள்ளை புத்திசாலியாகத்தான் திகழ்வான்; இது உலக இயல்பு. இயற்கையின் நியதி!'' என்று முடித்தார் அவர்.

இதற்குள் நன்றாக விழித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்து விட்ட அந்தச் சோம்பேறிச் சிறுவன், ''அப்படியானால் மாமா, குருடனின் பிள்ளை...!''



ஸ்ரீ பாஸ்கர ராய் சௌத்ரி என்ற இந்த இளைஞர் பரத நாட்டியம், கதக், கதகளி, மணிபுரி முதலிய நடனங்களை வெகு நேர்த்தியாக ஆடிப் புகழ் பெற்று வருகிறார். கல்கத்தா முதலிய பல வட நாட்டு நகரங்களிலும் இலங்கையிலும் பல அரங்குகளில் ஆடியிருக்கிறார். சமீபத்தில் நடந்த தென் இந்தியப் பத்திரிகையாளர் மகாநாட்டிலும் தமது நடனத் திறமையைக் காண்பித்து 'சபாஷ்!' பெற்றிருக்கிறார். சிறந்த சித்திர சிற்பக் கலைஞரான ஸ்ரீராய் சௌத்ரியின் புதல்வர் இவர் என்று அறியும்போது 'புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?' என்ற பழமொழிதான் நினைவுக்கு வருகிறது!

---

என்று கேள்வியை முடிக்காமலே அவர் முகத்தை ஆவலுடன் பார்த்தான்.

"குருடனின் பிள்ளை ஒரு குருடனாகத்தான் இருப்பான்" என்று ஆணித்தரமாக அடித்துச் சொன்னார் வந்தவர்.

அவர் அறிந்தோ அறியாமலோ கூறிய அக்கடும் சொல் ஆயிரம் தேள்கள் ஏககாலத்தில் கொட்டியது போலப் பத்மநாபனின் மூளையில், 'சுரீர்' என்று தாக்கி அவன் உள்ளத்தையும் ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. அன்று வரை நினைத்தும் கேட்டும் அறியாத அந்த வார்த்தைகள் அவன் உடலைச் சூடாக்கி, அனல் பிழம்பாகவும் ஆக்கி விட்டது.

அன்று இரவு படுக்கையில் புரண்டு, புரண்டு படுத்தான் பத்மநாபன். தூக்கம் அவனை விட்டு விலகி நின்று வேடிக்கை பார்த்தது. துன்பம் அவன் உடலைத் தழுவித் தழுவி முத்தமிட்டது. "மூடனின் பிள்ளை மூடனாகத்தான் இருப்பான்; திருடனின் பிள்ளை திருடனாகத்தான் இருப்பான்......குருடனின் பிள்ளை......!" பத்மநாபன் தன் தலையைத் தன் இரு கரங்களாலும் பிடித்துக் கொண்டான். பசு மரத்தில் பதிந்து விட்ட ஆணிபோல் அவன் மூளையில் பதிந்துவிட்ட அவ்வார்த்தைகள் திரும்பத் திரும்பத் தீப் பிழம்பு போல் எழுந்து அவனது மூளையைக் கொதிக்க வைத்து, ஆயிரம் சுக்கலாக்கி விடுமோ என்று அஞ்சும்படியான துன்பத்தைக் கொடுத்தது. என்றுமில்லாத விதமாக அன்று அவனது அந்தகத் தன்மை பூத உருவம் கொண்டு அவன் முன் நின்று அவனை ஆட்டி வைத்து, வாட்டி வதைக்கத் தொடங்கியது. பொறுக்க வியலாத துன்பத்தால் துடித்த அவனது அழகிய சிவந்த உதடுகள் நீலம் பாரித்து உலர்ந்தன. படுக்கையில் புரண்டு, புரண்டு மனம் வெதும்பியவன் பொழுது புலரும் தருணத்தில் மெள்ளக் கண் அயர்ந்தான்.

இறைவனின் எல்லையில்லாத லீலைகளில் இதுவும் ஒன்று—குறைபாடு உள்ள ஒருவன் தன் குறைபாட்டைப் பிறர் வாய் மூலமாக அறிய நேரும் போதுதான் அதிகத் துன்பத்தை அடைகிறான். இன்று பத்மநாபனின் நிலையும் அவ்விதமே ஆகியது. இன்று வரை கேட்காமல் கேட்க நேர்ந்த அச்சொல் அவன் உள்ளத்தைப் புண்படுத்திக் கபடமற்ற உள்ளத்திலே கபடத்தையும் புகுத்தி, சுடர்விட்டுப் பிரகாசித்த அவன் அறிவையும் மழுங்கச் செய்து விட்டது.

அவன் எண்ணாதது எண்ணி ஏங்கினான். இன்று உலக முற்றிலுமே அவனைத் துச்சமாக மதிப்பதாகப் பட்டது. 'ஆம்; நான் ஓர் அந்தகன்; கண் பார்வை பெற்றுள்ள அனைவரும் என்னை அவமதிப்பதில் என்ன குற்றம்! ஆ! அப்படியானால்! என் கண்மணி ஹேமா கூடவா என்னைத் துச்சமாக நினைப்பாள்!...... ஏன் நினைக்க மாட்டாள்...! அவள் மட்டும் விதிவிலக்கா...! அந்தோ அவள் காட்டும் அன்பு...வெறும் நடிப்பா! அவ்விதம் நடிக்க வேண்டிய அவசியம்! 'முட்டாள்!' அவசியம் ஏன் இல்லை! உன் அளவற்ற செல்வம்! ஹே! பகவானே! இதுவென்ன!......அப்படியானால், அவர் வாக்குப்படி அந்தகனான எனக்குப் பிள்ளை ஒரு அந்தகனாகப் பிறக்காததற்கும் காரணம்......! கொதிப்படைந்து போன பத்மநாபனது உள்ளத்திலே இவ்விதமான கேள்விகளும், பதில்களும் எழுந்து குமுறியது. அத்துடன் 'சந்தேகம்' என்னும் புயலும் அவன் உள்ளத்தில் புகவே அவனது கூரிய அறிவு முற்றிலும் மறைந்து சூன்யமாகி விட்டது.

நடந்த தொன்றையும் அறியாத ஹேமா மெள்ள மெள்ளத்தான் தன் கணவனது மாறுபாட்டை உணரத் தொடங்கினாள். உள்ளுக்குள் குமுறிய பத்மநாபன் தன் உள்ளத்து உணர்ச்சிகளை அவளறியா வண்ணம் மறைக்கவே பிரயத்தனப்பட்டான். ஆயினும் அது அவனையும் மீறிப் பலவித ரூபங்களில் வெளிப்பட்டது. இதனால் துன்பம் என்பதையே இன்னதென்று அறியாத ஹேமா திடுக்கிட்டுத் திகைத்தாள். குதூகலமாகத் துள்ளித் திரிந்து கொண்டிருந்தவளுக்குக் கணவனது மனமாறுபாடு பெரும் கலக்கத்தைக் கொடுத்தது. தன் கணவனது மனத்தைத் துன்புறுத்தி வரும் துன்பம், 'எது?' என்று அறிய அவள் மனம் ஆவல் கொண்டது. மனத்தில் குழப்பம் ஏற்பட்டிருக்கும் நிலையில், கணவனிடம் காரணத்தைத் திடீர் என்று கேட்க முடியுமா! எனவே நல்ல சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி. யிருந்தாள்.

(அடுத்த இதழில் முடியும்)

# பெரம்பூர் ஸங்கீத ஸபா (REGD.)

## ஸத்குரு ஸ்ரீ தியாகப்ரம்ஹ மஹோத்ஸவ ஸீரீஸ்

பிரதம நீதிபதி **ஸ்ரீ பி. வி. ராஜமன்னார்** அவர்கள் திறந்து வைப்பார்கள்

கல்கி ஆசிரியர் **ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி** அவர்கள் தலைமை வகிப்பார்கள்

**இடம்: ராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி ஹைஸ்கூல் பெரம்பூர்**

○●○

| | | |
|---|---|---|
| 14-5-54 வெள்ளி | காலை 8-10 மணி | ஆராதனை |
| | மாலை 6 மணிக்கு | காரைக்குடி சாம்பசிவ அய்யர், குமாரி ராஜேஸ்வரி வீணை, ஸ்ரீ காரைக்குடி முத்து அய்யர். |
| | இரவு 9-30 மணிக்கு | திருவையாறு அண்ணாஸ்வாமி பாகவதர் - ஹரிகதை. |
| 15-5-54 சனி | மாலை 5 மணிக்கு | எம். எல். வசந்தகுமாரி, பரூர் எம். எஸ். கோபால கிருஷ்ணன், கிருஷ்ணபுரம் எம். வைத்தியநாதன், டி. எஸ். வில்வாத்ரி அய்யர். |
| 16-5-54 ஞாயிறு | மாலை 4-15 மணிக்கு | மஹாராஜா ஸ்வாதித் திருநாள் படத் திறப்பு. பேராசிரியர் சாம்பமூர்த்தி |
| | மாலை 5 மணிக்கு | டி. கே. பட்டம்மாள், திருவள்ளூர் சுப்ரமணியம், பாலக்காடு கே. குஞ்சுமணி, கிருஷ்ணபுரம் எம். வைத்தியநாதன். |
| 17-5-54 திங்கள் | மாலை 5 மணிக்கு | மூசிரி, திருவாலங்காடு சுந்தரேச அய்யர், பழநி, புதுக்கோட்டை சுவாமிநாத பிள்ளை. |
| 18-5-54 செவ்வாய் | மாலை 5 மணிக்கு | செம்மங்குடி, டி. என். கிருஷ்ணன், பாலக்காடு மணி, உமையாள்புரம் கோதண்டராமய்யர். |
| 19-5-54 புதன் | மாலை 5 மணிக்கு | மஹாராஜபுரம், ஆர். கே. வெங்கட்டராம சாஸ்திரி, ராமனாதபுரம் முருகபூபதி, R. S. கிருஷ்ணமூர்த்தி ராவ் |
| 20-5-54 வியாழன் | மாலை 5 மணிக்கு | அரியக்குடி, பாப்பா, பழநி, புதுக்கோட்டை சுவாமிநாத பிள்ளை. |
| 21-5-54 வெள்ளி | மாலை 5 மணிக்கு | ஆலத்தூர் சகோதரர்கள், மைசூர் சௌடையா, பாலக்காடு மணி, பழநி. |
| 22-5-54 சனி | மாலை 5 மணிக்கு | மதுரை மணி, லால்குடி ஜெயராமன், பழநி, மதுரை கிருஷ்ணய்யங்கார். |
| | இரவு 9-30 மணிக்கு | ஸ்ரீ எம்பார் விஜயராகவாச்சாரியார் — ஹரிகதை. |
| 23-5-54 ஞாயிறு | மாலை 5 மணிக்கு | ஜி. என். பாலசுப்ரமணியம், ராஜமாணிக்கம் பிள்ளை, ரகு, உமையாள்புரம் கோதண்டராமய்யர். |
| 24-5-54 திங்கள் | மாலை 5 மணிக்கு | கே. எஸ். தனம்மாள், திருவனந்தபுரம் ஹரிஹரன், கும்பகோணம் கணேசன், கே. நாகராஜ ராவ். |
| 25-5-54 செவ்வாய் | மாலை 5 மணிக்கு | மாலி, பாப்பா, வி. நாகராஜன், கண்டனூர் பங்கரு. |
| 26-5-54 புதன் | மாலை 5 மணிக்கு | எம். எம். தண்டபாணி தேசிகர், லால்குடி ஜெயராமன், S. V. S. நாராயணன், T. S. வில்வாத்திரி அய்யர் |
| 27-5-54 வியாழன் | மாலை 5 மணிக்கு | மாயவரம் கிருஷ்ணய்யர், திருவாலங்காடு சுந்தரேசய்யர், தஞ்சாவூர் டி. கே. மூர்த்தி. |
| 28-5-54 வெள்ளி | மாலை 5 மணிக்கு | கே. பி. சுந்தராம்பாள், திருவள்ளூர் சுப்ரமணியம், எஸ். வி. எஸ். நாராயணன், வில்வாத்திரி அய்யர். |
| 29-5-54 சனி | இரவு 8 மணிக்கு | திருவாவடுதுறை என். ராஜரத்தினம் பிள்ளை, நாச்சியார் கோவில் ராகவப் பிள்ளை, இருப்பூர் நல்லகுமார் |

30-5-54 ஞாயிறு மாலை 6 மணிக்கு ஸ்ரீமத் ஆஞ்சநேய உத்ஸவம்.

*Space Donated by*

ஜெயகோபால் & கம்பெனி, எலக்ட்ரிகல் எஞ்சினியர்ஸ் & கண்ட்ராக்டர்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை

# ப்ளிட்டில் நாங்கள் ஆறு கீடநாசினிகளை சேர்ப்பதன் காரணம்

எந்த ஒரு கீடநாசினிக்கும் எல்லா பூச்சிகளையும் கொல்லும் சக்தி கிடையாது. உதாரணமாக கீடநாசினி 'A' அது ஸ்பர்சிக்கும் எல்லா ஈக்களையும் கொன்று விடக்கூடும்—ஆனால் கரப்பான் பூச்சிகள் சிலவற்றைத்தான் சாக அடிக்கும்; கொசுக்களை ஒன்றும் செய்வதில்லை.





அதற்கு மாறாக, கீடநாசினி 'B' எல்லா கரப்பான் பூச்சிகளையும், சில கொசுக்களையுங்கூட கொல்லுகிறது—ஈக்களை பாதிப்பதேயில்லை.

உண்மையில் எல்லா பூச்சிகளையும் சாக அடிப்பதற்கு நிச்சயமான ஒரே வழி, ப்ளிட்டிலுள்ளதுபோல் பலவேறு கீடநாசினிகளை கலந்து உபயோகிப்பதுதான். ப்ளிட்டில் ஆறு கொடிய விஷப்பொருள்கள் கூடுமான அளவு ஸம்ஹார சக்தி பெறும்படியாக பக்குவமான அளவுகளில் கவனமுடன் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன. இந்த சமஷ்டி சக்தியின் பயனாகவே ப்ளிட் நீங்கள் வாங்கக் கூடிய வேறெந்த கீடநாசினியையும் விட அதிக சக்தி வாய்ந்ததாகவிருக்கிறது.






**அதனால்தான் நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவிற்கும் ப்ளிட் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது**

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பேனி

(கம்பேனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 9303




## 9. பல்லக்கு வந்தது!

கப்பல் வெகு வேகமாக, சமுத்திர ஜலத்தைக் கிழித்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தது. கப்பலின் மேலே அந்த முரட்டு மனிதர்கள் கூட்டமாக நின்று கொண்டு பூபதியின் படகு என்னவாயிற்று என்று கூர்ந்து கவனித்தனர். அது இருந்த திசையில் ஒன்றையும் காண வில்லை. படகு சென்ற திசையை நோக்கிச் சமுத்திரத்தில் பல முறை துப்பாக்கியினால் சுட்டனர். சமுத்திர ஜலம் குண்டு பட்ட இடத்தில் தூண் மாதிரி எழும்பி எழும்பிக் குதித்தது. நில வொளியில் அவ்விதம் எழும்பிக் குதித்த நீரைப் பார்ப்பதற்குப் பயமா யிருந்தது.

சுமார் இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு கப்பல் திரும்பி வேறு திசையில் செல்லத் தொடங்கியது. சிறிது நேரத்துக் கெல்லாம் நிலவு ஒளி குன்றியது.

கொஞ்சம் கொஞ்சமாகப் பொழுது விடிய ஆரம்பித்தது. சூரியன் பெரிய ஆப்பிள் பழம் மாதிரி கடலில் தோன்றினான். சிறிது நேரத்துக் கெல்லாம் ஜோதி ரூபனாக மாறிச் சமுத்திர ஜலம் முழுவதும் தன் ஒளிக் கதிர்களைப் பரப்பித் தங்கமய மாக்கினான்.

அதோ, தூரத்தில் ஒரு படகு போகிறதே! ஆம், அதில் இரண்டு பேர் இருக்கிறார்கள். இளைஞன் ஒருவன் வெகு வேகமாகத் துடுப்புப் போட்டுக் கொண்டு போகிறான். அவன் கவனம் முழுதும் படகில் துவண்டு கிடந்த ஓர் இளம் பெண்ணிடமே லயித் திருந்தது. பயங்கரமான நீலக் கடலில் ஆதரவு ஒரு சிறிதும் இல்லாமல், திக்குத் திசை தெரியாமல் அந்தச் சிறு படகில் செல்லுவது பற்றி அவன் பொருட் படுத்தியதாகவே தெரிய வில்லை.

நீலக் கடலில் நிலவியிருந்த குளிர், காலை இளம் வெய்யி லின் காரணமாகச் சற்று மாறி யிருந்தது. வெய்யில் இலேசாகப் பட்டு உடம்பில் ஒரு இதத்தை ஏற்றியது.

அந்த அழகிய பெண்மணி யின் செந்தாமரை போன்ற முகம், இளம் வெய்யிலின் இதத்தை அநுபவித்தவாறே மலர்ச்சி யடைந் திருந்தது. இளைஞன் அந்த மலர்ச்சி யைக் கண்டு மகிழ்ந்தான்.

மறுகணம் அந்தப் பெண் துணுக்குற்று விழித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந் தாள். தன்னையே பார்த்துக் கொண்டிருந்த இளைஞனைப் பார்த்ததும் அவள் முகத்தில் இருந்த பரபரப்பு சற்றுத் தணிந்தது.

"பூபதி, நாம் எங்கே போகிறோம்?" என்று திகைப்புடன் கேட்டாள்.

"சுமதி, எல்லையற்ற இன்ப உலகத் துக்குப் போகிறோம்!"

"அப்படியானால் நாம் இறந்து விட் டோமா? துப்பாக்கிக் குண்டுக்கு நாம் எப்படித் தப்பி யிருக்க முடியும்?"

"சுமதி, இன்னும் உன் பயம் தணிய வில்லை என்று தெரிகிறது. கடவுள் அரு ளால் நாம் அந்தக் குண்டு விபத்துக்குத் தப்பினோம். ஆனால் ஆபத்திலிருந்து தப்பி விட்டோம் என்று நிர்ப்பயமாக இருக்க முடியாது. இந்தப் பெரிய கடலிலிருந்து நாம் எப்படிக் கரை சேரப்போகிறோம்!

"பூபதி, ஆம். இப்பொழுது தான் நடந்த தெல்லாம் நினைவு வருகிறது. ஆகா! நீங்கள் எத்தனை பெரிய முயற்சி செய்து, உணவு உறக்கத்தை மறந்து, அந்தச் சதிகாரர்களின் சதிச் செயல்களை யெல்லாம் கண்டு பிடித்தீர்கள்! நம் காரியம் கை கூடும் தருணத்தில் அந்தக் கிராதகர்கள் நம்மைச் சுட்டுக் கொல்ல முயன்றார்களே! நீங்கள் மட்டும் அஞ்சா நெஞ்சத்துடன் சளைக்காமல் வெகு வேக மாகத் துடுப்பைப் போட்டிரா விட்டால் நம் இருவர் உயிரும் குண்டுக்கு இரையாகி இருக்கும்! கப்பல் எங்கே போயிற்று? தொடர்ந்து வந்து நம்மை ஒழித்து விடும் என்றல்லவா நான் எதிர்பார்த்தேன்!"

"சுமதி, கப்பல் நம் படகைத் தொடர்ந்து வரத்தான் செய்தது. அச்சமயம் கப்பலின் மேல் தளத்திலிருந்து முரடர்கள் பட பட வென்று சுடவே, கரும் புகை சூழ்ந்து நமது படகை மறைத்து விட்டது. நீ திடீ ரென்று சோர்ந்து படகில் சாய்ந்தாய். நான் உன் சோர்வைப் போக்குவதில் கூடச் சிரத்தை காட்டாமல் அசுர வேகத்துடன்

துடுப்புகளைப் போட்டுக் கொண்டு, திக்குத் திசை தெரியாத இந்தப் பிரம்மாண்டமான சமுத்திரத்தில் படகைச் செலுத்தினேன். அப்போது என் கைகளுக்கு எங்கிருந்து தான் அத்தனை பலம் வந்ததோ, தெரியவில்லை. கப்பல் மாலுமியின் கண்களில் படாமல் தப்ப நினைத்துப் படகை என் மனம் போனபடி செலுத்தினேன். வெகு நேரம் கழித்து, உடலும் உள்ளமும் சோர்ந்து போய்த் திரும்பிப் பார்த்தேன். தூரத்தில் கப்பல் திசை மாறிச் சென்று கொண்டிருந்தது தெரிய வந்தது. நிலவின் ஒளியில் கப்பல் புகை விட்டுக் கொண்டு சென்ற காட்சி மனத்துக்குத் திருப்தியளித்தது.''

''பூபதி, நீங்கள் எவ்வளவு தைரியத்துடன் முயற்சி செய்து என்னைக் காப்பாற்றி உங்களையும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்! பாவம், என்னால் உங்களுக்கு எத்தனை சிரமம்? கப்பலில் இருந்த போது கூட என்னை எப்படித் தப்புவிப்பது என்பதில் தான் உங்கள் மனம் முழுவதும் இருந்தது. நான் உங்களுக்கு எப்படி நன்றி தெரிவித்துக் கொள்வது?''

''சுமதி, நீ எனக்கு நன்றி தெரிவிப்பதை விட நான் உனக்கு நன்றி தெரிவிப்பதுதான் நியாயம். கப்பல் கொள்ளைக்காரர்களின் கையில் நான் சிக்கிக் கப்பலுக்குக் கொண்டுவரப்பட்ட பிறகு உன்னை மட்டும் அந்தக் கப்பலில் சந்திக்க வில்லையென்றால், நான் கப்பலின் மேல் தளத்திலிருந்து சமுத்திரத்தில் குதித்து உயிரை விட்டிருப்பேன்!''

''பூபதி, அப்படியெல்லாம் பேசாதீர்கள். உங்கள் வேணுகானத்தைக் கேட்டு உங்களைச் சாளரத்தின் வழியாகப் பார்க்கவில்லையென்றால், நானும் கடலில் விழுந்திருப்பேன்! பூபதி, அதோ பார்த்தீர்களா, பறவைகளும் காகங்களும் கூட்டமாகப் பறப்பதை! கடவுள் அருளால் நாம் ஒரு தீவை நெருங்கி விட்டோம்!'' என்று குதூகலத்துடன் கூவினாள் சுமதி.

பூபதியும் அவள் சுட்டிக் காட்டிய திசையை நோக்கிப் பார்த்தான். அவள் சொன்னது உண்மை தான். உடனே பூபதியின் முகத்தில் உற்சாகக்களை பொங்கியது. இருவரும் வேகமாகத் துடுப்புக்களைப் போட்டுப் படகை அந்தத் திசையை நோக்கிச் செலுத்தினார்கள். படகு கரையை நெருங்க நெருங்க, சமுத்திரத்தின் அமைதி குறைந்து உயர உயரமாக அலைகள் எழும்பிக் குதித்தன. படகு அந்த அலைகளில் மோதித் தத்தளித்தது.

படகு ஒருவாறு கரையைச் சேர்ந்தது. எங்கும் செழிப்பான மரங்கள் நிறைந்திருந்தன. சுமதியும் பூபதியும் படகை விட்டு இறங்கிப் படகைக் கரையில் ஒரு ஓரமாகத் தள்ளி விட்டு, ஊரை நோக்கி மேட்டுப் பாங்கில் ஏறினார்கள். பெரிய மரங்கள் நிறைந்து அங்கு வெய்யிலே இல்லாமல் இருந்தது.

''பூபதி, என்னால் இனி ஒரு அடி கூட நடக்க முடியாது, தாகம் வறட்டுகிறது, பசி காதடைக்கிறது. நான் இங்கேயே இருக்கிறேன்...''

''சுமதி, சரி. நீ இங்கே இந்த மரத்தடியில் படுத்துக் கொண்டிரு. நான் ஒரு நொடியில் ஊருக்குள் போய் ஏதாவது ஆகாரம் கொண்டு வருகிறேன்!'' என்று சொல்லி விட்டு, பூபதி ஓடினான். சுமதி மரத்தடியில் கண்ணயர்ந்தாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த வழியாக ஒரு பல்லக்கு வந்தது. கூட்டமாகக் குதிரைகளும் காலாட் படைகளும் வந்தன. அங்கு வந்ததும் கூட்டம் சற்று நின்றது. அவர்களுள் தலைவனாகத் தோன்றிய ஒருவன் சுற்று முற்றும் பார்த்து விட்டுச் சுமதியை அப்படியே தூக்கிப் பல்லக்கில் வைத்தான். மறுகணம் பல்லக்கு நகர்ந்தது. கூட்டமும் சென்றது. (தொடரும்)






அம்மாவும் பெரியம்மாவும் சண்டையில் இறங்கி விட்டார்கள்.

"உன் பிள்ளைக்கு இஷ்டம் போல ஒரு இடத்தில் நிச்சயம் பண்ணேன்!" என்று பெரியம்மா சொன்னாள்.

"பாழாப் போற வீட்டிலே இரண்டு குடியும் ஒரு குடியா இருக்கிறதுன்னு வறபோது, குடும்பத்திலே பெரிய பிள்ளை உன் பிள்ளைதானே!" என்று அம்மா தன் ஆத்திரத்தைக் கொட்டினாள்.

"இந்தக் காலத்திலே, எல்லாம் தெரிந்த நீ அதைப் பெரிசாகப் பார்ப்பானேன்! அக்கா இருக்கிறபோது தங்கைக்குக் கலியாணமாகிற காலத்திலே, ஒன்றுவிட்ட தம்பிக்கு முதலில் கல்யாணம் ஆவதில் என் தடங்கல்!"

"உன் வாய் ஒவ்வொரு தரம் ஒவ்வொரு மாதிரி பேசும். நீயே, நாளைக்கு நான் செய்யறது நன்றாயில்லேன்னு சொல்லப் போகிறாய்!" என்று அம்மா பொருமினாள். சாதாரணமாகவே பெரிய விழிகள் அவளுக்கு. கோபமும் ஆத்திரமும் வந்தால், தண்ணீரில் ஊறின விதைகள்தான். என்மேலுள்ள ஆத்திரத்தைத்தான் அவள் பெரியம்மா மீது கொட்டுகிறாள் என்று நன்றாகத் தெரியும். உண்மையில் இந்த மாதிரி சித்தியப் பூசலுக்கே நான்தான் காரணம். ஆனால் என் தப்பு இல்லை.

வழக்கம்போல் காலையில் நான் காப்பி சாப்பிடும் போது அம்மா, "ஏன்டா, மூர்த்தி, ராமரத்னம் காலிலே என்னைத் தடவிக்கொண்டு நடக்கிறான். ஏன் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறே!" என்றாள். அவளுடைய குரல் கெஞ்சியது.

"நான் ஒன்றும் பிடிவாதம் பிடிக்கவில்லை, அம்மா. பெரியம்மாவும் பெரியப்பாவும் என்ன நினைத்துக் கொள்ளுவார்கள்! அப்பாவுக்கும் அதுதான் கவலையாக இருக்கிறது..."

"உலகத்தில் ஒருவன் ஒன்றை நினைக்கிறான் என்பதற்காக நாம் நம்முடைய காரியத்தைக் கவனிக்காமலிருக்கலாமா!"

"வாஸ்தவந்தான், அம்மா. 'நம்ம' காரியத்திலே என் விஷயம் மட்டும்தானா! வேம்புவின் விஷயத்தையும் பார்க்க வேண்டாமா!"

"ஏன்டா, வேம்பு மேலும் பெரியம்மா பெரியப்பா மேலும் இவ்வளவு தூரம் இரக்கம் காண்பிக்கிறாயே! அந்த இரக்கத்திலே பாதி கூடப் பெற்ற தாயாரிடம் உனக்கு இல்லையடா!" என்றாள் தாயார் ஆத்திரத்திலும் தழுதழுத்த குரலில்.

"நான் என்ன அம்மா செய்து விட்டேன்!"

"பின்னே, பிடி கொடுத்துப் பேசாமல் தள்ளிப் போடறயே!"

"முதலிலே வேம்புக்குக் கல்யாணம் ஆகட்டும், அடுத்த முகூர்த்தத்துக்கு நான் தயார்..."

"இதுதான் நிச்சயமா...!"

"ஆமாம். கண்டிப்பாக...! வேம்புக்கு வயது இருபத்தெட்டு ஆகி விட்டது. அவனுக்கு மனசு எப்படியிருக்கும், நான் இப்போது கல்யாணம் பண்ணிக்கொண்டால்! அவனுக்கு ஆகட்டும்..."

"அவனுக்கு யார் பெண் கொடுக்கப் போறா!" அம்மாவின் குரலிலே இளப்பம் தொனித்தது.

எனக்குக் கோபம் வந்து விட்டது. மனித உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்காமல் என்னென்ன பேசுகிறாள் என்று நினைத்துக்கொண்டே, "அவனுக்குன்னு ஒரு பெண் எங்காவது பிறந்திருப்பாள்..." என்றேன்.

"பிறந்தும் இருப்பாள், பிறந்து செத்துப்போயிருப்பாள்...இந்த ஜன்மத்திலே காட்டுப் பெண் வந்து நான் பார்க்கப் போவதில்லை!"

அம்மாவுக்கு என் மீதுள்ள ஆத்திரம் அவள் ஓர்ப்படியின் மீது புயலாக வீசியது.

* * *

அறையில் உட்கார்ந்துகொண்டு ஏதோ படித்துக் கொண்டிருந்தேன். தாத்தா வேம்புவுடன் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

"என்னடா வேம்பு, எங்கே போயிருந்தே!"

"மாம்பலத்திலே புதிசா ஒரு ஹோட்டல் ஆரம்பிச்சிருக்கா, தாத்தா...ரவா தோசை எப்படியிருக்கு என்று நினைக்கிறே! அதுக்கு சொஜ்ஜி போட்டிருந்தான் தொட்டுக்க...பிரமாதம்!"

"எத்தனை தோசை தின்னே!" என்று தாத்தா கேட்டார். என்றைக்குமே அவருக்கு அவனிடம் கேலியாகப் பேசப் பிடிக்கும்.



"நல்ல காலம் ஆரம்பித்து விட்டது, சார்! 'ஏழை மக்களின் கஷ்டத்தைப் போக்கி அவர்களின் நல் வாழ்வுக்கான திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வரப் போகிறோம்' என்று யாரோ பேசி இருக்கிறார்."

"அட கஷ்டமே, அது பழைய பேப்பர் சார், தேர்தல் சமயத்தில் வந்த பிரசங்கம் அது."

---

"ஒரு தோசைதான் தின்னேன். வெளியே வந்தப்புறம்தான் இன்னொன்று தின்றிருக்கலாமே என்று தோன்றிற்று. அதுக்கென்ன நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்; எங்கே போகிறது!"

தாத்தா என்னிடம், 'உன் அண்ணன் இப்படி வயிற்றைக் கட்டிக் கொண்டு அலையறான்' என்று அடிக்கடி சொல்லுவார். அதைத்தான் இப்போதும் அவர் நினைத்துக் கொண்டாரோ என்னவோ!

"சரி, வேம்பு! அந்தச் சித்துரலை எடுத்துக் கொண்டு வா! வெற்றிலையும் சீவலும் இருக்கு. புகையிலும், சுண்ணாம்பும்தான் வேண்டும். போ. தோசையாவது ஜீரணமாகட்டும்" என்று தாத்தா அவனிடம் சொன்னார்.

வேம்பு போய் இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் திரும்பி வந்த பிறகு தாத்தா மேலும் பேசலானார்.

"ஏன்டா, வேம்பு! உனக்குக் கலியாணம் ஆக வேண்டாமாடா!"

"ஏன் தாத்தா, எனக்குப் பெண்ணைக் கொடுக்கிறேன் என்று யாராவது வந்தால்தானே சரி என்று பண்ணிக் கொள்வதற்கு!"

"வராதது யார் குற்றம்!"—உரலை இடித்துக் கொண்டே அவர் கேட்டார். வேம்பு என்ன சொல்லப் போகிறான் என்பதை நான் ஆவலாகக் கேட்கத் தயாரானேன். காலையில் என்னுடன் அம்மாவின் வாக்குவாதம். அப்புறம் பூனைகள் மாதிரி ஓர்ப்படிச் சண்டை. இப்போது தாத்தா-பேரன் சம்பாஷணை.

"யார் குற்றமோ!"

"நீயும் சிரத்தையாக மூர்த்தியைப் போலப் படித்திருந்தால், உனக்கும் பெண் கொடுக்கிறதற்கு இப்போது 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு பல பேர் வருவார்கள்!"

"எனக்குப் படிப்பு வரவில்லையே!" அவன் சொல்வதைக் கேட்ட போது எனக்கு அவன்மீது பரிதாபம்தான் தோன்றியது.

"நீ சிரத்தையுடன் படிக்கவில்லையடா!"

"அதுக்குத் தண்டனை இதுமாதிரி கிடைத்தால் ஏத்துக் கொள்கிறேன், தாத்தா!"

"அதெல்லாம் சரிதான்டா! மூர்த்திக்குப் பெண்ணைக் கொடுக்கிறேன்னு வருகிறார்களே, அவர்களுக்கு என்ன சொல்கிறது! அவனுக்கும் வயது இருபத்தைந்து ஆச்சே!"

"சொல்றதென்ன! அவனுக்கு நிச்சயம் செய்யுங்கள், பாவம்! அவனுக்கு ஆகவேண்டாமோ! படிப்பு இருக்கு, வேலை இருக்கு..." என்று வேம்பு சொன்னதைக் கேட்டதும் எனக்கு அவன்மீது பிறந்த அன்பில் மனம் நெகிழ்ந்து விட்டது.

"நீ சொல்றே... உன் அம்மா எரிந்து விழுவாளே, 'மூத்தவன் இருக்கிறப்போ, இளையவனுக்குக் கலியாணமா!' என்று."

"நாங்கள் என்ன, சொந்த அண்ணா தம்பிகளா! அம்மா தெரியாத்தனமாக ஏதாவது சொன்னால் நீங்களும் கேட்கிறீர்களே!"

"ஊரார் நானாவிதமாகப் பேசுவார்கள் ......!"

"என்னைத் தெரிஞ்சவா ஒன்றும் சொல்ல முடியாது!" என்று சொல்லி விட்டு வேம்பு, "தொண்டை என்னமோ கர கர என்கிறது ... போய் ஒரு கப் காப்பி குடிக்கிறேன்..." என்று கூறிவிட்டுக் கிளம்பினான்.

** ** **

வேம்புவுக்கு இருபத்தெட்டு வயதாகி விட்டது. மெட்ரிகுலேஷனை எட்டிக் கூடப் பார்க்கவில்லை. பெரியப்பா–பெரியம்மாவுக்குப் பிறந்த செல்லப் பிள்ளை. கஷ்டம் அறியாமல் வளர்ந்து விட்ட தோஷத்தில் உடம்பு ஒன்றுதான் தேறிற்று. நானும் அவனும் ஒரே பள்ளிக்கூடத்தில்தான் முதலில் படித்தோம். ஆனால் வருஷம் செல்லச் செல்ல, அவன் நான்காவது பாரத்தில் மூன்றாவது வருஷம் இருக்கையில், நான் கலாசாலையில் படிக்க ஆரம்பித்து விட்டேன். என் அம்மாவுக்கு இதைப்பற்றி ஒரு கர்வம். பெரியம்மாவுக்குப் பொறுமை. தாத்தாவுக்கு என்னைக் கண்டால் மிகவும் பிடிக்குமாதலால் அவரும் சந்தோஷப் பட்டார்.

ஆனால் பெரியப்பா அபூர்வ மனிதர். தம் பிள்ளையை வைத்துக் கொண்டே, "மூர்த்தி, உன்னை 'என்ஜினியரிங்'குக்குப் படிக்க வைக்கணும்டா!" என்பார். பெரியம்மாவுக்கு அப்போது தன் கணவர் மீது ஆத்திரம் பொங்கும். ஆனால் அதை எப்படி வெளியிடுவது! என் தகப்பனார் என் படிப்பில் மிக அக்கறை கொண்டதாகத் தெரியவில்லை. எந்தத் தியேட்டரில் என்ன சினிமா, யார் நடிக்கிறார்கள் என்ற கேள்விகளிலே மனத்தைச் செலுத்த ஆரம்பித்து விடுவார், காரியாலயத்தை விட்டு வந்ததும்.

வேம்பு பார்ப்பதற்கு 'ராஜா' மாதிரி இருப்பான். வாட்ட சாட்டமான தேகக் கட்டு. சில்க் ஷர்ட்டைத் தவிர அவனுக்கு வேறு ஒன்றும் தெரியாது. அம்மா ஆசையுடன் வாங்கிப் போட்ட வைர மோதிரம் விரலில் மின்னும். 'மாமனார் தலை தீபாவளிக்கு வாங்கிப் போடமாட்டார்னு தெரியும். தானே வாங்கிப் போட்டுவிட்டாள்!' என்று என் தாயார் இளக்காரமாகக் கூறுவாள். அவன் அழகாகச் சிங்காரித்துக் கொண்டு கிளம்பும்போது, "இருபதாயிரத்துக்கு ஜாமீன் கொடுக்கலாம் வேம்புவுக்கு!" என்பாள் அம்மா. "உனக்கு ஏன் இந்தக் கொழுப்பு!"

என்று நான் கேட்பேன். அம்மா ஒன்றும் பதில் சொல்ல மாட்டாள். எனக்கு ஆடம்பரம் இல்லாதது அவளுக்குக் குறைவாக இருந்தது.

வேம்புவுக்குப் படிப்பு மட்டும் இருந்திருந்தால் எப்பொழுதோ அவளுக்குக் கல்யாணமாகி அவளுடைய பிள்ளைக்கு இத்தனை நாளில் மூன்று வயதாகி யிருக்கும். நான் பரீட்சையில் தேறினதுமே பெண்ணைப் பெற்றவர்கள், ஜாதகங்களை எடுத்துக் கொண்டு மூற்றுகையிட ஆரம்பித்தார்கள். முதலிலெல்லாம், "பெரியவளின் பின்னைக்கு ஆனப்புறம்தான்!" என்று தாத்தா சொல்லி அனுப்பினர். ஆனல் ஒரு வருஷம் ஆகியும், வேம்புவைத் தேடிக் கொண்டு எந்த ஜாதகமும் வரவில்லை. தாத்தா சிறிது தயங்கிக்கொண்டு என் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தார்.

அப்பா என்னதான் குடும்பத்தில் அவ்வளவாக அக்கறை எடுத்துக் கொள்ளா விட்டாலும், தம் அண்ணாமீது அபார அன்பும் மரியாதையும் உள்ளவர். "அண்ணா பிள்ளைக்குக் கல்யாணமாகாமல், என் பிள்ளைக்கு இப்பொழுது என்ன அவசரம்!" என்று கூறினர்.

என் தாயார் முதலில் பொறுத்தாள். ஆனல் அவளுடைய பொறுமையைச் சோதிக்கும் கட்டத்திலேயே பொறுமையை இழந்தாள். அவளுக்கு வந்த ஆத்திரம் என்மீதும் பெரியம்மா மீதும் திரும்பியது. புத்திர வாஞ்சையுடன் என்னைக் கோபித்துக் கொள்வது ஏன் ஒட்டப் போகிறது! ஆனல் ஓர்ப்படியுடன் சண்டை பிடித்தால் இத்தனை நாள் ஒரே மரத்தின் கிளைகளாக வாழ்ந்த குடும்பம் இரண்டாகி விடுமே!

என்னைப் பொறுத்தவரையில் வேம்பு மீது பரிதாபம்தான் உண்டாயிது. அவன் என்னை விட மூன்று வயது பெரியவன். அவனுடைய உள்ளத்தில் ஆசைகள் இருக்காதா! எனக்கு வரன்கள்

வருகையில் தனக்கு ஒன்றும் வராததைக் காணும் போது அவன் மனம் கசியாதா! என் தாயாருக்கு நாட்டுப்பெண் வரவேண்டும் என்றிருப்பது போல, பெரியம்மாவுக்கும் இருக்காதா!

எனக்குத் தோன்றிய எண்ணங்கள் எல்லாம், தனிமையில், என்னை மறந்து இருக்கும் நிலையில் எழும் சிந்தனைகள். உலகத்தில் எண்ணங்களுக்கெல்லாம் உருவம் கொடுத்துக் கொண்டு போனால் உலகம் என்ன ஆவது!

நாட்கள் சென்றன. படிப்பும் வேலையும் இல்லாதவனுக்கு எவன் பெண்ணைக் கொடுக்க முன் வருவான்! இது வீட்டிலே எல்லாருக்கும் தெரிந்த உண்மைதான். பெரியம்மாவுக்கும் தெரியும். ஆனால் ஒப்புக் கொள்ளத்தான் அவள் மனம் இடம் கொடுக்க வில்லை.

ஆனால் சந்தர்ப்பங்கள் அவனுக்கு விரோதமாகச் சென்றன. பெரியப்பா இந்த வழிக்கே வர மாட்டார். அப்பாவை அம்மா தன் வசமாக்கி விட்டாள். தாத்தாவுக்கும் என் மீதுள்ள அன்பில் சீக்கிரத்தில் என் கல்யாணத்தை நடத்தி விட வேண்டும் என்று தோன்றியது.

என் ஒன்றுவிட்ட மாமா பெண்ணை நிச்சயித்தும் விட்டார்கள். அவள் எனக்காகப் பிறந்தவள்.

நாள் செல்லச் செல்ல, விவாக தினம் நெருங்க நெருங்க எனக்கு மன நிம்மதி யில்லாத நிலைமை ஏற்பட ஆரம்பித்தது. எப்போதும் போல வேம்பு, 'சில்க் ஷர்ட்டு'டன் போய் வந்தாலும் அவனுடைய முகத்திலே ஏக்கமும் வருத்தமும் பிரதிபலிப்பதாக எனக்குத் தோன்றியது. அவனுடைய நிலையில் நான் இருந்தால், எப்படி மனம் குமுறுவேன் என்று நினைக்கையில், அந்த நினைப்பே என்னை வாட்டியது. அவனும் ஒரு மனிதன். அவனுக்கும் உள்ளம் இருக்கிறது. ஆசாபாசங்கள் இருக்கின்றன. ஆனால் வீட்டில் யார் அவற்றையெல்லாம் லட்சியம் செய்கிறார்கள்!

இன்னும் ஐந்தாறு நாட்கள்தான் இருந்தன கல்யாணத்துக்கு. ஆத்திரத்தையும், துக்கத்தையும் உள்ளடக்கிக் கொண்டு, பசுமை போர்த்திய எரிமலையாக, பெரியம்மா, காரியங்களில் ஈடுபட்டாள். துணி மணிகள் வாங்குவதிலும், உற்றார் உறவினர்களை அழைப்பதிலும் விடு இரண்டு பட்டது. தகப்பனார் ஸ்தானத்தில் நிச்சிந்தையாக இருக்கையில் பெரியப்பா, ஓடி ஆடினார் வீட்டுக்குள், வியர்வை அரும்ப. சிற்றூரில் வெற்றிலை இடித்தவாறே, எல்லோரிடமும் தாத்தா அளவளாவினார்.

என் மனத்தில் நிம்மதியில்லை. வேம்புவின் மனத்திலும் நிம்மதி யிருக்காது என்பதை எண்ணியபோதே, மனம் மேலும் கசிந்தது. எப்போதுமே நானும் அவனும் அதிகமாகப் பேசிக் கொள்வதில்லை. அவனுக்கு ஒரு உலகம்; எனக்கு வேறு உலகம். இரு உலகங்களுக்கும் பொதுவான பாலமே இல்லை. ஆனாலும், அவனைப் பார்த்துப் பேச வேண்டும் என்று தோன்றியது.

"வேம்பு!" என்று அவனை அழைத்தேன்.

"ரொம்ப அவசரமா, மூர்த்தி...நான் வெளியே புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்......" என்றான்.

"அப்புறம் போகலாம்...இப்படி வாயேன்..."

வந்ததும், "என்ன!" என்று கேட்டான்.

எனக்கு எப்படி ஆரம்பிப்பது என்று தெரியவில்லை. மனத்தில் என்னென்னவோ உணர்ச்சிகள் கொப்பளித்தும், எதைப் பேசுவது என்று தெளிவான தீர்மானம் உதயமாகவில்லை.

நான் சிறிது தயங்கினேன்.

"என்ன, மூர்த்தி!" என்று அவன் வினவினான்.

"வாஸ்தவத்தில், வேம்பு, எனக்கு இந்தக் கலியாணத்தில் இஷ்டமில்லை......"

"ஏன்......பெண்ணைப் பிடிக்கவில்லையா......!"

"அதெல்லாம் இல்லை......இப்போது கல்யாணம் செய்துகொள்ளப் பிடிக்கவில்லை......"

"ஏன், என்ன காரணம்!"

"என்னைவிட நீ பெரியவன் இல்லையா! நாம் இருவரும் சொந்த அண்ணா தம்பிகள் மாதிரி ஒரே வீட்டில் வளர்ந்திருக்கிறோம்!"

"பூ! இதைத்தான் சொல்லக் கூப்பிட்டாயா!"

"என் மனச்சாட்சி உறுத்துகிறது......"

"அப்போ, நீ சாமியாராகத்தான் போகணும். ஏதாவது பிதற்றிக்கொண்டு இருக்காதே... என்னை வைத்துக்கொண்டு, நீ ஒவ்வொரு காரியத்தையும் நிர்ணயிக்க ஆரம்பித்தால், அவ்வளவுதான்! என்னை விட மோசமாகிவிடும்!"

சொல்லிவிட்டு அவன் போய் விட்டான்.

இருளின் அமைதியில் தனிமையை நாடும் பட்சி போல உட்கார்ந்திருந்த என் மனத்தில் சிந்தனை சிறகடித்தது. வெளியே என்ன சொன்னாலும் உள்ளூற அவன் புலம்பிக் கொண்டிருப்பான் என்று நினைத்தேன்.

நான் நினைத்தது சரி என்பது போல, அவன் மறுநாள், "இன்னிக்கு மகாபலிபுரம், போகிறேன்!" என்று கிளம்பினான். நான்கு நாட்கள் தான் இருக்கிறது, கலியாணத்துக்கு! அதைக் காணச் சகியாமல்தான் கிளம்பி விட்டான் என்று நான் முதலில் ஆத்திரப் பட்டேன். ஆனால் அவனுக்கும் உணர்ச்சிகள் இல்லையா! உணர்ச்சிகளின் மதிப்பு எனக்குத் தெரியும்.

அவன் மறுநாளே வந்து விட்டான், கையில் ஒரு பொட்டலத்துடன்.

"மூர்த்தி, உனக்கு இருக்கிற ஷர்ட்டெல்லாம் மில் துணிதானே! இந்த சில்க் எப்படி யிருக்கு, பார்!" என்று பொட்டலத்தை அவிழ்த்துக் காட்டினான். எனக்கு உலகமே சுற்றுவதுபோல இருந்தது. பதினெட்டு கஜம் 'சில்க்!' விதவிதமான நிறங்களில்.

"ஏன் வாங்கினாய்...மகாபலிபுரம் போறேன்னு சொன்னாயே!"

"ஏதோ சொன்னேன்...சில்க் எப்படி யிருக்கிறது! பிடித்திருக்கிறதா!"

வேம்புவைப் பார்க்கவே என் கண்கள் பயந்தன. அவனுடைய அன்பின் பாரத்தை என்னால் தாங்க முடியவில்லை.

அவன் தொடர்ந்து, "கல்யாணப் பத்திரிகையெல்லாம் அனுப்பியாகி விட்டதா! யாருக்காவது பாக்கியிருந்தால் சொல்லு, நான் போய்க் கொடுக்கிறேன். நீ அலையவேண்டாம்!" என்றான்.

எனக்கு மூச்சுத் திணறியது.

அவன் மேலும் பேசினான்: "நேற்றுத்தான் உனக்கு மனைவியாக வரப்போகிறவளை நுங்குக் கடையில் பார்த்தேன். உன் மாமாவுடன் வந்திருந்தாள். உனக்கு ஏற்றவளாக இருக்கிறாள்... நீ கொடுத்து வைத்தவன்......" உணர்ச்சியுடன் வார்த்தைகள் உதிர்ந்தன. பிறகு அவன், "மூர்த்தி...என்னதான் கலியாணத்துக்கு மற்றவர்கள் புடவை எடுத்தாலும், உன் கையால் ஒன்று அவளுக்கு எடுக்க வேண்டாமா! இது நீ அவளுக்குக் கொடுக்கும் முதல் பரிசாக இருக்கட்டுமே!" என்றான்.

என் நாதமும் தழுதழுத்தது. "எடுக்க வேண்டியதுதான் வேம்பு......நீயே எடுத்து விடு, உன் இஷ்டம்போல!" என்றேன்.

அவன் விரைந்தான். அவனுக்கு இருக்கும் உள்ளம் சாதாரண உள்ளமா!

மாலை நேரம். மலர்ந்து குலுங்கும் பூக்கள் நிறைந்த தோட்டம். இயற்கை அழகின் ஒரு பாகம் போல் விளங்கிய சிறு பெண் குழந்தை ஒருத்தி தோட்டத்தில் தன் இஷ்டம் போல் ஓடியாடிக் கொண்டிருந்தாள். அவளுக்கு வயது ஏழு இருக்கும்.

திடீரென்று அவள் முன்னால் சுமார் எட்டு வயதுள்ள சிறுவன் ஓடி வந்து, "வனஜா! விளையாட்டிலே நான் சேரக் கூடாதா?" என்று கேட்டான்.

வனஜா சற்று யோசித்தாள். பிறகு மிடுக்காக, "சேரலாம். ஆனால் என்னை நீ அடிக்கக் கூடாது!" என்று ஒரு நிபந்தனையைக் குறிப்பிட்டாள்.

"நான் அடிக்க வில்லை. ஆனால் நீயும் சமர்த்தா யிருக்கணும்" என்று தன் சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் பதில் அளித்தான் சிறுவன்.

சிறிது நேரம் இருவரும் சமாதானத்துடன் விளையாடினார்கள். திடீரென்று வனஜா, "ராமு! மேலே பாரேன்! ஆகாயத்தில் எத்தனை நிறம்! பார்க்க அழகாயில்லை?" என்று கேட்டாள்.

ராமு சிடுசிடுப்புடன் ஒரு தடவை மேலே அண்ணாந்து பார்த்தான். "இதிலே என்ன அழகு இருக்கிறதாம்? சிவப்பும் மஞ்சளுமாக மாறி மாறி வந்து கொண்டிருக்கிறது. நீ ஆட்டத்தைப் பார்த்து ஆடமாட்டாய்?" என்று கேட்டான்.

"போடா, உனக்கு அழகை அழகு என்று சொல்லக் கூடத் தெரிய வில்லை. ஆமாம், அது ஏன் அப்படி வெவ்வேறு விதமாக மாறிக் கொண்டிருக்கிறது?"

ராமுவுக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது. தெரிந்து கொள்ளவும் அவன் விரும்ப வில்லை. ஆட்டத்தில் தோல்விக்கு மேல் தோல்வி அடைந்து கொண்டிருந்ததால் அவனை வனஜாவின் பேச்சு கோபப் படுத்தியது. "அது என்னவானால்தான் உனக்கென்ன? நீ ஆட்டத்தைக் கவனிக்கப் போகிறாயா, இல்லையா?" என மிரட்டிப் பார்த்தான்.

"ஏண்டாப்பா, இத்தனை கோபம் வருகிறது உனக்கு? விளையாட்டில் என்னை ஏமாற்ற முடியவில்லையே என்று?"

ராமுவின் கோபம் அதிகரித்தது. "வாயை மூடு, கழுதை! அடி கிடி கேட்கிறதோ? நான் ஏன் உன்னை ஏமாற்றப் போகிறேனாம்?" என்று கேட்டான்.

"சரியாக ஜயிக்க முடியா விட்டால் நீ அப்படித்தானே பண்ணுவாய்?"

இப்படி ஒரு தங்கை அண்ணனைப் பார்த்துச் சொன்னால் அதற்குப் பிறகும் அண்ணன் பேசாமல் இருப்பானா? அப்படி யிருந்து விட்டால் அவன் மரியாதை என்ன ஆகிறது? ராமுவுக்குச் சுபாவத்திலேயே அதிகாரம் செய்யப் பிடிக்கும். வனஜா தன்னைவிடச் சிறியவள், அவளை எதுவும் சொல்லவோ செய்யவோ தனக்கு உரிமை உண்டு என்னும் எண்ணம் அவன் மனத்தில் வேரூன்றிப் போயிருந்தது. ஆனால் அவனிடம் சிநேகிதமா யிருக்கத்தான் வனஜா விரும்பினாள். அண்ணனிடம் அவ்வளவு ஆசை. ஆயினும் வலுவில் வந்த சண்டையை இலேசில் விட மாட்டாள்.

ராமு ஆக்ரோஷத்துடன், "என்ன சொன்னாய்? என்னால் சரியாக ஜயிக்க முடியாதா?" என்று கேட்டுக் கொண்டே தங்கையை நோக்கி வீசிய கையுடன் பாய்ந்தான். இதை முன்பே எதிர்பார்த்திருந்த வனஜா ஒரு குதி குதித்துப் பின்னால் தாண்டினாள். அடுத்த கணம் வீட்டுக்குள் பாய்ந்து விட்டாள். அவளைத் துரத்தித் துரத்தி ராமு அலுக்காமல் ஓடினான். அவள் களைத்துப் போனாள். அப்போதும் தோல்வியை ஒப்புக் கொள்ள அவள் விரும்பவில்லை. சட்டென்று ஒரு யோசனை தோன்றவே ஓடிச் சென்று அப்பாவின் அறைக்குள் நுழைந்தாள். புயலைப் போல் தலைவிரி கோலமாய்த் தம் மகள் ஓடி வருவதைக் கண்டதும் அவர் கலவரமடைந்து "என்ன அம்மா, வனஜா! ஏன் இப்படி ஓடி வருகிறாய்? என்ன நடந்தது, சொல்லு!" என்று கேட்டார்.

"அப்பா! அப்பா!! என்னைச் சட்டென்று தூக்கிக் கொள்ளேன்! என்னை அடிக்கிறதற்கு ராமு வருகிறான்" என்று இரைறிக் கொண்டே மூச்சு வாங்கச் சொன்னாள் வனஜா.

நிலைமையைத் தெரிந்து கொண்ட தகப்பனார் மகளைக் கையில் எடுப்பதற்கும் ராமு அறைக்குள் நுழைய




# வனஜா நல்லவள்!

தற்கும் சரியா யிருந்தது. களைத்துப் போய் வியர்வை சொட்டச் சொட்ட வந்து கொண்டிருந்த அவன் முகத்தில் இன்னும் கோபக் குறி மாறாமலேயே இருந்தது.

வனஜா தகப்பனாரின் தோள்மேல் சௌகரியமாக உட்கார்ந்திருந்தாள். ஒய்யாரமாக ஒரு கையால் அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டு மற்றொரு கையை ராமுவுக்கு நேரே ஆட்டினாள்.

"இப்போது பார்த்தாயா? இதிலே கூட நான்தான் ஜெயிக்கிறேன்! ரொம்பப் பெரியவன் மாதிரி துரத்திக் கொண்டு வந்தாயே, இப்போ என்ன ஆச்சு...!" என்று ராகம் போட்டுப் பாட ஆரம்பித்தாள்.

அவமானத்தால் உள்ளம் குமுறிய ராமு, "அப்பா! அவளைக் கீழே இறக்கி விடு! ஒரு கை பார்த்து விடுகிறேன்" என்றான்.

அதற்குள் வனஜா, "நீ எதையடா பார்க்கிறது? நீ கீழேயே நிற்க வேண்டியதுதான். நான் ஜோராக அப்பாவின் மேலே உட்கார்ந்திருக்கிறேன். அப்பாடியோ! நான் எவ்வளவு உயரமாகப் போய் விட்டேன்! ஏன், அப்பா! நான் இப்போது ராமுவை விடப் பெரியவள்தானே?" என்று கேட்டாள்.



"ஆமாம்! எங்கள் வனஜாதான் பெரியவள்!" என்று தகப்பனாரும் தங்கைக்கு அனுகூலமாகப் பேசவே ராமுவுக்குப் பொறுக்க வில்லை. "அப்பா மேலே உட்கார்ந்து கொண்டு வீம்பு பேச உனக்கு வெட்கமா யில்லை?" என்று கேட்டான்.

ஆனால் எப்போது ரோசப்பட வேண்டும், எப்போது கூடாது என்று வனஜாவுக்குத் தெரியாமலில்லை. "ஆமாண்டா, நீ மட்டும் என்னவாம்? உன்னைத் தெரியாதா எனக்கு? ஆட்டம் சரியாக வரா விட்டால் கோபித்துக் கொண்டு போகிறவன்தானேடா, நீ? நான் ஏதாவது பண்ணினால்தான் தப்பாக்கும்!" என்று கேட்டாள்.

அதற்குப் பிறகு ராமுவுக்குத் தன் ஆத்திரத்தை அடக்க முடிய வில்லை. வாயால் ஒன்றும் சொல்லாமல் மேலே நோக்கிப் பார்த்தான். பாவம், வனஜா அவன் கைக்கு எட்டாத உயரத்தில் உட்கார்ந்திருந்தாள்! தோல்வி அவனுடைய கோபத்தை வளர்த்தது. "வனஜா! மரியாதையாகக் கீழே இறங்கிவிடு. இல்லா விட்டால் இன்றைக்கு எனக்கு வருகிற கோபத்தில் உன்னை அடித்து நொறுக்கி விடுவேன்!" என்றான். அந்தச் சமயத்தில் அவள் மட்டும் அவன் கைக்கு அகப்பட்டிருந்தால் தன் வார்த்தையை நிச்சயம் நிறைவேற்றிக் காட்டி யிருப்பான்.

வனஜா பயந்து விட்டாள். எனவே, கலவரத்துடன் அப்பாவின் கழுத்தை இரண்டு கைகளாலும் இறுகக் கட்டிக் கொண்டு, "என்னை இறக்கி விட மாட்டாயே?" என்று கேட்டாள்.

"மாட்டேன், பயப்படாதே!" என்று அன்புடன் கூறி அவள் கன்னத்தைத் தட்டிக் கொடுத்தார் தந்தை.

ராமு சிறியவன்தானே? அப்பா தனக்கு ஒரு பெரிய துரோகத்தைச் செய்கிறார் என்ற எண்ணம் அவனுக்கு உண்டாகி விட்டது.

"அப்பா! நீ இப்படிப் பண்ணலாமா? அவள் என்னை எப்படியெல்லாம் ஏசுகிறாள், தெரியுமா? அவளுக்குப் பரிந்து கொண்டு பேசுகிறாயே!" என்று துக்கம் தொண்டையை அடைக்கச் சொன்னான் ராமு.

தகப்பனாருக்குப் பரிதாபமாகத் தானிருந்தது. ஆனால் வனஜாவை அப்போது கீழே இறக்கி விட்டால் என்ன ஆகும் என்று தெரிந்து பேசாமலே நின்றார்.

வனஜாவின் உள்ளம் அன்பு நிறைந்ததுதான். ஆனாலும் அப்போது அண்ணனின் நிலையைக் கண்டு அவள் சந்தோஷம்தான் அடைந்தாள். தன் மனத்துள் 'நன்றாக வேண்டும். தினமும் என்னை எப்படி அடிக்கிறாய்?' என்று சொல்லிக் கொண்டாள்.

ஆயினும் அவ்வளவு சுலபமாய்த் தோல்வியை ஒப்புக்கொள்ள ராமுவும் சம்மதிக்க வில்லை. அவளை எட்டிப் பிடிக்கப் பார்த்துக் கொண்டுதானிருந்தான். அதைப் பார்த்து அவள் சிரித்துக் கொண்டே, "உன்னாலே முடியாது. ஏனென்றால் நீ ரொம்பக் கெட்ட

வன். நான் சொல்கிறதெல்லாம் நிஜமாகச் சரிதானே, அப்பா! ராமு நிஜமாகவே ரொம்பக் கெட்டவன், கெட்டவன், கெட்...டவன்!'' என்று முத்தாய்ப்புடன் முடித்தாள்.

ராமுவின் முகம் சிவந்தது. ''அப்படியா சொல்கிறாய்? பாரு உன்னை...''என்றுசொல்லி அவசர அவசரமாகப் பக்கத்திலிருந்த நாற்காலி ஒன்றைத் தகப்பனாரின் அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு சட்டென்று அதில் ஏறினான். ''ஐயோ,''அப்பா!'' என்று வனஜா கத்தினாள். தந்தை சிரித்துக் கொண்டே சில அடிகள் தள்ளிச் சென்று நின்று கொண்டார்.

தன் கஷ்டமான முயற்சி ஒரே விநாடியில் பாழாக்கப் பட்டதைப் பார்த்தபோது ராமுவுக்கு ஆத்திரமும் அழுகையும் குமுறிக் கொண்டு வந்தன. சிரமப்பட்டு அழுகையை அடக்கிக் கொண்டான். ஆத்திரத்தால் அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவளை அப்படியே அடித்துத் தீர்த்து விட வேண்டுமென்ற கோபம். அவளோ அவனுக்கு எட்டாத உயரத்திலிருந்தாள்.

வனஜாவுக்குப் பரம சந்தோஷம். ''ராமு! நீ என்னைப் பிடிக்க முடியாது. உன் கெட்ட தனத்துக்கு நீ அப்படியே சும்மா நின்று கொண்டுதானிருக்கணும்!'' என்றுசொல்லிப் பூரித்துப் போனாள்.

தகப்பனார் அவன் கட்சியில் இருக்கும்வரை ஜயம் அவனுடையதுதானே! 'நாம் தோற்றுப் போவதா? அதுவும் வனஜாவிடத்தில் தோற்றுப் போவதா?' என்று எண்ணிய ராமுவின் மனத்தை என்னவோ செய்தது.

''இரு, இரு! அப்பா வெளியிலே போகட்டும். அப்புறம் உன்னை ஒரு கை பார்த்துக் கொள்கிறேன்'' என்றான்.

''அப்பா! என்னை இவனிடம் விட்டுவிட்டுப் போகாதே, அப்பா!'' என்று கெஞ்சினாள் வனஜா. ராமுவுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. ஆனால் வனஜாவின் மகிழ்ச்சிக்கோ ஒரு எல்லை இல்லை.

கடைசியாக ராமு தீர்மானத்துடன் சட்டென்று அப்பாவின் மேலேயே ஒட்டிக் கொண்டு மெள்ள ஏற ஆரம்பித்தான்! ஒரு கையினால் அவனைத் தடுத்து நிறுத்தி விட அவருக்கு முடியவில்லை. நெருங்கி வரும் ஆபத்தைக் கண்டு வனஜா அலறி விட்டாள். அவளைச் சந்தோஷப் படுத்தும் பொருட்டு அவர் சற்றுப் பலமாகவே அவனை விலக்கினார். அவன் தோளைப் பிடித்து நிறுத்த அவர் கையை நீட்டிய போது தற்செயலாக ராமு தலையை மேலே தூக்கியிருந்தான். தோளில் படவேண்டிய அவர் கை தவறுதலாக அவன் கன்னத்தில் பலமாகப் பட்டு விட்டது. எதிர்பார்க்காமல் இப்படி தாக்கப் பட்டதால் ராமுவின் பிடி தளர்ந்து போய் அவன் கீழே விழுந்து விட்டான். நன்றாக அடி பட்டு விட்டது. கோபத்துடனும் அவமானத்துடனும் வலியும் சேர்ந்து விட்டதால் ராமுவுக்கு மிதம் மீறித் துக்கம் எழுந்து விட்டது. கண்ணீர் ஆறாய்ப் பெருகத் தடுமாறிக்



கொண்டே தரையிலிருந்து மெள்ள எழுந்தான். ''அப்பா! என்னை இப்படித்தான் பிடித்துத் தள்ளுகிறதா? நான் என்ன அப்பா பண்ணினேன்? என்னை வைகிறதையும் வைது விட்டு இப்போது உன்மேலே...ஜம்முனு... உட்கார்ந்து கொண்டு......'' விம்மல்களினிடையே அவன் வார்த்தை தடைப் பட்டது. முகத்தைக் கைகளினால் மூடிக் கொண்டு பெரிதாக அழ ஆரம்பித்து விட்டான்.

பயத்தைக் கடந்து விட்டது சகோதர வாஞ்சை. வனஜா அண்ணனிடம் அளவற்ற இரக்கம் கொண்டாள்.

தான் பெரிய தவறு செய்து விட்டதாக அவளுக்குத் தோன்றியது. 'ஐயோ! ராமு இப்படி அழுகிறானே!' என்று மனம் குமைந்தாள். ராமு அவள் சொந்த அண்ணன்! எவ்வளவு வருத்தமாய் அழுகிறான்! கண்களிலிருந்து கண்ணீர் எத்தனை வேகமாய் ஓடுகிறது! அவன் அன்று அவள் முன்னாலேயே அழுகிறான். ஏன்? அவளாலே தான்! அவள் தான் அவன் கஷ்டத்துக்குக் காரணம். அவனை எப்படியெல்லாம் திட்டி விட்டாள்? அண்ணா வென்று பாராமல்! அவன் மேல் ஒரு தப்பும் இல்லை. அவளை அவன் அடிக்கக் கூடாதா? இவ்வளவு தூரம் அவனை வையாதிருந்தால் அவன் கோபம் எப்போதோ பறந்து போயிருக்குமே! அவனை உடனே சந்தோஷப் படுத்த வேண்டும் என்ற எண்ணம் இருதயத்தில் எழுந்தது.

''அப்பா! என்னைக் கீழே விட்டு விடு! சீக்கிரம் இறக்கி விடு, அப்பா!'' என்றாள்.

மகள் முகத்தில் வருத்தம், கருணை, பச்சாத்தாபம் ஆகியவை தென்படுவதைக் கண்டு தந்தை கீழே இறங்கி விட்டார். அடுத்த நிமிஷம் அண்ணனிடம் ஓடிச் சென்றாள் வனஜா. அவன் கைகளை முகத்திலிருந்து எடுத்துக் கொண்டே, ''ராமு! அழாதேடா! இதோ பாரு, நான் இங்கேதான் இருக்

## அறைகூவல்!




இந்திய சர்க்காரின் பெருந்தன்மையினால்தான் இன்னும் கோவாவில் போர்த்துகீசிய சர்க்கார் இருந்து வருகிறது என்பதை மேற்படி போர்ச்சுகீசிய சர்க்கார் உணர்ந்து கொள்ளாமல் தடபுடலாக அறைகூவி வருகிறார்கள் !

கிறேன். என்னை அடி ! எவ்வளவு இஷ்டமோ, அவ்வளவு அடி. நான் ஒன்றும் சொல்ல மாட்டேன் !'' என்று கெஞ்சலானான்.

கைகளை முகத்திலிருந்து அகற்றினான் ராமு. கண்கள் வீங்கிச் சிவந்திருந்தன. கண்ணீரின் ரேகை கன்னங்களில் படிந்திருந்தது. உடல் இன்னும் துடித்துக் கொண்டிருந்தது. ஆத்திரத்துடன் பல்லைக் கடித்துக் கொண்டிருந்த அவனெதிரில் வனஜா சிறிதும் பயமில்லாமல் நின்று கொண்டிருந்தாள். அப்போது தன்னைப் பற்றி அவள் நினைக்கவில்லை. அவன் ஆறுதல் அடைந்தால் அதுவே போதும் என்று தான் எண்ணினாள். ஆத்திரத்தோடு அவளை நோக்கிக் கையை ஓங்கினான் ராமு. தகப்பனார் அவர்களை விலக்க நினைத்தார். ஆனால் ராமுவின் ஓங்கிய கை உடனே கீழே வரவில்லை.

அதே வினாடியில் தங்கை தன் முன் நின்றிருந்த காரணத்தை ராமு உணர்ந்தான்.

வனஜா அடிவாங்கத் தயாராய் நின்றாள். ஏன் ? அவன் சமாதானமடைவதற்குத்தான் ! அவன் வருத்தப் படுவதை அவளால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை !

அவனுக்கு உண்மை புலனாயிற்று. தவறு செய்தது அவன்தான். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சண்டையை ஆரம்பித்தது அவன்தான். அவள் எப்போதும் அவனுடைய சிநேகத்தைத்தான் விரும்பினாள். அது கிடைக்காமல் போகும் போது வாய்ப் பேச்சால் அவனை ஜயித்தால் அது அவளுடைய கெட்டிக்காரத் தனம்தானே ?... தான் அகாரணமாக அவளை அடித்து அழ விட்டு வேடிக்கை பார்த்ததெல்லாம் அவனுக்கு நினைவு வந்தது. அவள் அழுகையைக் கண்டு ராமு பல தடவை சந்தோஷப் பட்டிருக்கிறான். ஆனால் அவன் அழுகையை நிறுத்த அவள் அவனிடம் அடிபடக் கூடத் தயாராயிருந்தாள் ! இப்படிப் பட்ட நல்ல சமர்த்துத் தங்கையிடம் அவன் எவ்வளவு கெட்டவனாக நடந்து கொண்டான் !

இதை நினைத்துப் பார்க்கப் பார்க்க 'வனஜா எவ்வளவு நல்லவள் !' என்றே எண்ணத் தோன்றியது.

''வனஜா !'' என்று பரிவாக அழைத்தான் ராமு. அடிக்க ஓங்கிய கை அவளை அன்புடன் அணைத்துக் கொண்டது !

''வனஜா ! எவ்வளவு நல்லவள் நீ. என் மேல் கோபித்துக் கொள்ளாதே. நான் உன்னை அடிக்கப் பார்த்தது தப்புத்தான், வனஜா !'' என்றான்.

அண்ணனின் அனுதாபத்தை வனஜா உணர்ந்து கொண்டாள். சிறிதும் பிரயாசையின்றி ஒரு புன்னகை அவள் உதடுகளில் தோன்றியது. ''இல்லை, ராமு ! எனக்கு உன் மேல் கோபமே இல்லை. நீ கூட நல்லவன்தான்'' என்று கூறி அவன் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டாள்.

குழந்தைகளிருவரும் அன்பில் இழைந்த அந்தக் காட்சியைப் பார்த்தபடி மெய்ம் மறந்து நின்றார் தந்தை. இந்த அன்பும் ஒற்றுமையும் அவர்களுக்குள் என்றும் நிலைத்திருக்கும் என்று எண்ணிய போது அவர் உள்ளத்தில் இன்பம் நிறைந்தது.

## பிரஷால் தேய்ப்பதால்

# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது...அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனுடிலை அறிக்கும் தீய அமிலங்களையும் ... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்கள் சேர்ந்தது




## புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்




ராஜியின் ரோஜாக் கன்னம் சிவந்துவிட்டது. அவள் தளிர் மேனி நடுங்கிக் கொண்டிருந்தது. அப்படியா ஒருவன் தன் மனைவியை அடிப்பான்!

அன்று ஆபீஸிலிருந்து வந்ததும் ராமு மனைவியைப் பார்த்து, "ம்...சீக்கிரம் டிரஸ் செய்து கொள்" என்று உத்தரவு போட்டு விட்டுத் தன் அறைக்குச் சென்றான். அவன் டிரஸ் செய்து கொண்டிருக்கையில் கூடத்தில் ராஜி தாயாரிடம் நடத்திய சம்பாஷணை அவன் காதில் தெளிவாக விழுந்தது.

"என்னடி ராஜி! அவர் சொன்னது காதிலே விழல்லே! காப்பிப் பாத்திரத்தை நான் தேய்க்கறேன், நீ போ." இது அவன் மாமியார்.

"எங்கேம்மா போகச் சொல்றே!"

"என்னமோம்மா, எங்கேன்னு என்னைக் கேட்டால்! எனக்கென்ன தெரியும்! நீதான் கேளேன் அவரை. எங்கே இருக்கும்! எங்காவது சினிமா இல்லாவிட்டால் கடற்கரை போவதாயிருக்கும்."

"நான் எங்கேயும் போகல்லே. அவரே போய் வரட்டும்." ராஜியின் பதில் அவன் உடலைக் குலுக்கிற்று. தன் கௌரவமே பாதிக்கப்பட்டு விட்டதாக நினைத்தான். தன் அழைப்புக்கா அவள் இந்தப் பதில் சொல்லுகிறாள்! இருந்தாலும் பொங்கி வந்த கோபத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டுக் கடற்கரைக்குக் கிளம்பத் தயாராக வந்தான், அவர்கள் பேச்சைக் கேட்காதவன் போல. அவன் மனைவி ராஜி முழங்கை வரை சாம்பலுடன் காப்பிப் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

ராமு ஒன்றும் பேசவில்லை. மௌனமாகக் கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாக உலாவினான். இடையிடையே ராஜியின் கண்கள் அவன் பார்வையைச் சந்தித்தன. ஆனால் அவளிடம் எந்த விதச் சலனமும் ஏற்படவில்லை. அவள் தன் பாட்டுக்கு அடுத்தடுத்து வீட்டுக் காரியங்களைச் செய்து கொண்டிருந்தாள். ராஜி குத்து விளக்கைத் துடைத்துக் கொண்டிருந்த போது ராமு தன் கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி 6–45. அணை போட்டு வைத்திருந்த ஆத்திரம் அத்துமீறி அவனை மூழ்கி விட்டது.

"ராஜி!" என்றழைத்தான் அந்த நிலையிலும் நிதானத்தை இழக்காமல் ராமு.

கையைத் துடைத்துக் கொண்டு குத்து விளக்கைப் போல அவன் எதிரில் வந்து நின்ற ராஜியின் கன்னத்தில் பளீர் என்று ஒரு அறை அவள் எதிர்பாராதபடி விழுந்தது. "ஐயோ!" என்று முகத்தை இரு கைகளாலும் மூடிக் கொண்டு தலை குனிந்தாள் ராஜி.

"அகம்பாவம் பிடிச்ச கழுதை! அரை மணி நேரமாக நான் காத்துக் கொண்டு நிற்கிறேன். வெளியில் கிளம்பத் தயாரா இருன்னு சொன்னேனு, இல்லையா! என் வார்த்தைக்கு இவ்வளவு அலட்சியமா!"

"இல்லேன்னு...வந்து..."

"பேசாதடீ...அம்மாகிட்ட நீ சொன்னது என் காதிலே விழுந்தது. நான் மட்டும் போறதுக்கு நீ என்ன உத்தரவு போடறயா எனக்கு! இல்லே, எனக்குத் தனியாகப் போகப் பயமாக இருக்கு என்று உன்னைத் துணைக்குக் கூப்பிட்டேனு!"

"ஐயையோ......நான் இப்படியெல்லாம்......" அவள் உடல் மட்டுமல்ல; குரலும் நடுங்கிற்று.

"சட் பேசாதடீ. திமிர் பிடிச்சவளே!" அவளைப் பேச விடாமல் தொடர்ந்து நாலைந்து அடிகளை அவள் மீது பதித்துவிட்டு விருட்டென்று வாசலில் இறங்கி வேகமாக நடந்தான் ராமு.

உடல் குன்றித் துவள, உள்ளம் துடித்துக் குமைந்து கொண்டிருந்தாள் ராஜி. ராமுவுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்பட்ட போது கூட அவளுக்கு இவ்வளவு வேதனையும் துக்கமும் அழுகையும் வரவில்லை.

அவர்களுக்கு மணமாகி இன்னும் ஆறுமாதம் கூட ஆகவில்லை. இளம் கணவன் இரண்டாந்தாரத்திடம் அன்பைச் சொரியா விட்டாலும் இப்படி அடிப்பான் என்பதை எதிர்பார்க்கவில்லை.

ராமுவும் அப்படி ஒன்றும் கொடுமைக்காரன் அல்ல. அதாவது அவன் வாழ்க்கையை அறிந்தவர்களுக்கு அந்த உண்மை தெரியும். முதல் மனைவியோடு அவன் நடத்திய சாரமற்ற வாழ்க்கையும், ராஜியிடம் அவன் எதிர்பார்த்தது ஏமாற்றமாக முடிந்ததும்தான் அன்று அவனுக்கு அத்தனை ஆத்திரம் வந்ததற்குக் காரணம்.

பொங்கி வரும் அலைகளுக்கு அருகில் பொங்கிப் பொங்கி வழியும் உள்ளத்துடன் ராமு கடற்கரை மணலில் உட்கார்ந்திருந்தான். அவன் மனத்திலிருந்த ஆத்திரம் அடங்கவே இல்லை. தன்னுடைய அழைப்பை ராஜி அலட்சியம் செய்ததை நினைக்க நினைக்க அவன் ஆத்திரம் அதிகமாயிற்று. இப்படி அவள் நடந்து கொள்வது முதல் தடவையா!

கடற்கரையின் சூழ்நிலை அவன் உள்ளக் கொதிப்புக்குச் சூடேற்றுவதாக இருந்தது. எங்கு திரும்பினாலும் கலகலவென்ற சிரிப்பொலியும், ஜோடி ஜோடியாகத் தங்களை மறந்து வேடிக்கையாகச் சல்லாபித்துக் கொண்டிருக்கும் இளங் காதலர்களின் காட்சியும் அவன் தொய்ந்த உள்ளத்தைப் பிய்த்துக் கொண்டிருந்தது. வேதனை பொருமையாகி அவன் நெஞ்சை அழுத்திற்று. "சே, என்ன கல்யாணம்! என்ன வாழ்க்கை!"

என்று மிகவும் அலுத்துக் கொண்டது அவன் களைத்த மனம்.

வாழ்க்கையை அனுபவித்து ரசித்து வாழ வேண்டும் என்று எவ்வளவோ பெரிய கனவுகளெல்லாம் கண்டு கொண்டிருந்தவன் ராமு. கல்யாணமாவதற்கு முன்பு, தான் கண்ட ஒவ்வொரு காட்சியையும் மனத்தில் பதித்துக் கொண்டு, நாமும் இப்படி வாழவேண்டும், நாமும் இப்படி எல்லாம் மனைவியோடு இன்ப வாழ்க்கை நடத்த வேண்டும் என்று மனக் கோட்டைகள் பல எழுப்பி இருந்தான்.

குமுறிப் பாய்ந்து கருளும் அலைமீது குஷியாகச் சறுக்கி விளையாடும் மேல் நாட்டு இளைஞனுக்கு ஆழ்கடலின் அடியில் உள்ள பயங்கரங்கள் தெரியாதா! ஆனால் அவன் எப்படி இளமை வெறியில் கடலலை மீது கம்பீரமாக இரண்டு கைகளையும் விட்டு வழுக்குப் பலகைமீது நின்று கொண்டு போகிறானோ, அதுபோல வாழ்க்கைக் கடலில் உல்லாசமாகச் சறுக்கி விளையாடலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான் கற்பனை உள்ளம் படைத்த ராமு. அதிகமாகக் கற்பனைகளிலே மயங்கிக் கிடப்பவர்களின் வாழ்வாசைகள் கனவாகத்தான் போய் விடும் போலிருக்கிறது. இல்லாவிட்டால் தங்க நிறமும் தளிர் மேனியும் சிலைகளிலே வடித்திருக்கும் உடலமைப்பும் முத்துப் பல்லும் முறுவலும் குறும்பு தெறிக்கும் கடாக்ஷமுமாக ஒரு நவ நாகரிக யுவதியைக் கற்பனை செய்து கொண்டு காத்துக் கிடந்த ராமுவுக்குக் கோமதி மனைவியாக வந்து வாய்ப்பானேன்! இதைத்தான் விதி என்று சொல்வதோ!

கோமதியைக் குரூபி என்று சொல்ல முடியாது. ஆனால் அவள் ராமுவின் கற்பனைக் கட்டழகியாக மட்டும் இல்லை.

அழகான ஒரு மணி மண்டபம். அற்புதமான சித்திரப் பாவைகளைச் சிற்பிகள் தூண்களில் வடித்திருக்கிறார்கள். பொன்னும் மணியும் கொண்டு அதன் சுவர்களைப் பூசி இருக்கிறார்கள். இருளில் அந்த மண்டபத்தின் அத்தனை அழகும் மறைந்துதானே போகிறது! இருளின் நிறம் கறுப்பு. கோமதியின் கறுப்பு நிறம் அவளிடமிருந்த சொற்ப அழகையும் குணத்தையும் ராமுவின் கண்களுக்கு முன்னால் இருளாகத் திரையிட்டு நின்று மறைந்து விட்டது.

ஆயுள் தண்டனை அடைந்த கைதியைப் போலத்தான் ராமு கோமதியுடன் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தான். வெளித் தோற்றத்தில் அவனைத் திருப்திப் படுத்த முடியாத கோமதி ராமுவின் மனத்தில் வெறுப்பின் வடிவாகப் பதிந்துபோய் விட்டாள். அவன் கற்பனை மாளிகை தரைமட்டமாக இடிந்து நொறுங்கி விட்டது. கோமதியை அவன் நிமிர்ந்து கூடப் பார்ப்பதில்லை. அவளுடைய வாத்ஸல்யம் நிறைந்த பரிதாபமான முகமும் ஏக்கம் பொங்கி வழியும் பார்வையும் ஒருவேளை தன்னிடம் இரக்கத்தை ஏற்படுத்தி விடும் என்று பயந்தானோ என்னவோ! அவளோடு முகம் கொடுத்துப் பேசுவதில்லை. ஏன் வீட்டிலேயே கூடத் தங்குவதில்லை.

ஒரு நாள் சாப்பிடும்போது அதிசயமாக அவளுக்குச் சொல்லிக் கொண்டான், "இன்றைக்குப் பாலஸ் தியேட்டரில் நல்ல சினிமா, போக வேண்டும்" என்று. அவன் ஆபீசுக்குப் போனதும் கோமதிக்கு இருப்பே கொள்ளவில்லை. 'அவர் அப்படி வாய்விட்டுச் சினிமாவுக்குப் போக வேண்டும் என்று சொன்னது தன்னையும் கூட்டிக் கொண்டு போவதற்காகத்தான். இல்லாவிடில் அவர் தினம் எவ்வளவோ இடங்களுக்குப் போகிறார். எத்தனையோ காட்சிகளையும் சினிமாவையும் பார்க்கிறார். அப்போதெல்லாம் வாய் விட்டுத் தான் போகுமிடத்தைச் சொல்கிறாரா! இன்றைக்கு என்னிடம் நேரடியாக நீயும் தயாராக இரு என்று சொல்வதற்குப் பதிலாகத்தானே மறை பொருளாக இப்படிச் சொல்லி இருக்கிறார்!' என்று அவன் பேச்சுக்கு வார்த்தை வார்த்தையாக வியாக்யானம் செய்து பூரித்து போனாள். "எத்தனை நாளைக்குத்தான் மனைவியோடு பேசாமல் இருக்க முடியும்!" என்று பெண்மை பெருமை கொண்டது. பாவம்! கோமதி கள்ளங் கபடமற்ற பெண். கல்யாணமாகி இரண்டு மாதந்தானே ஆகிறது. தான் அழகில்லை என்று குறைப்பட்டுக் கொண்டு பராமுகமாக இருந்த கணவனின் உள்ளத்திலே தன்மீது கருணை பிறந்து விட்டதாக எண்ணி ஆறுதலடைந்தாள்.

அன்று மாலை ராமு வருவதை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந்தாள் கோமதி. இடையிலே பட்டுப் புடவை மொட மொடத்தது. தலையிலே அவனுக்குப் பிடித்தமான மல்லிகையைக் கொண்டையைச் சுற்றிச் சந்திரஹாரமாக வளைத்துச் சூடிக் கொண்டிருந்தாள். இந்த அழகுக்கெல்லாம் மேலாக அவள் உள்ளத்திலே பொங்கி நின்ற மகிழ்ச்சி முகத்திலே வழிந்து கொண்டிருந்தது.



"குழந்தைகள் செய்யக் கூடாத விஷமம் வேறு ஏதேனும் இருந்தால் சொல்லு, அம்மா!"

கோமதியின் கோலத்தைக் கண்ட ராமுவின் முகம் கருங்கிற்று. "என்ன அலங்காரங்கள் எல்லாம் பலமாக இருக்கு. எங்கே கிளம்பப் போறுப்பலே!" என்று குத்தலாகக் கேட்டான்.

"நீங்கள்தான் சாயந்திரம் சினிமாவுக்குப் போகலாம்......" அவள் முடிக்கவில்லை.

"உன்னைக் கூட்டிக் கொண்டு போவதாகச் சொன்னேனா? என்னோடு வெளியே கிளம்பி வருவதென்பதைக் கனவிலேயும் நினைக்காதே. ஆமாம்!" என்று சடுகடுப்புடன் சொல்லியபடியே கோட்டைக் கழற்றி அறைக்குள் வீசி எறிந்தான். பாவம்! அந்த அப்பாவிப் பெண் கோமதிக்கு எப்படி இருக்கும்! அப்படியே குன்றிப் போய்விட்டாள். கருமை

யான அவள் முகம் இன்னும் கறுத்து விட்டது. கண்களிலிருந்து பொல பொல வென்று நீர் உதிர்த்து பட்டுப் புடவையை நனைத்தது. கணவனுக்காக ஆசையோடு செய்து வைத்திருந்த மைசூர்ப்பாகையும் காராபூந்தியையும் காப்பியுடன் குனிந்த தலை நிமிராமல் வைத்துவிட்டுப் பொங்கி வரும் அழுகையைப் புடவைத் தலைப்பால் ஏந்திக் கொண்டு தன்னுடைய நிரந்தர இடமான சமையலறைக்குள் சென்றாள்.



ஒரு பெண்ணின் மனத்தை இப்படிப் புண்படுத்துகிறோமே என்று பச்சாத்தாபப் படாமல் ராமுவின் மனம் வேறு வகையில் புண்பட்டுக் கொண்டிருந்தது. தன்னைப் போல உள்ளவர்கள் தங்கள் இளம் மனைவிகளுடன் கை கோத்துக் கொண்டு கடற்கரைக்கும் சினிமாவுக்கும் போவதைக் கண்டு பெருமூச்சுவிட்டான். தனக்குக் கல்யாணமானதும் தன் மனைவியுடன் எப்படி எல்லாமோ வாழ வேண்டும், அவளை வாழ்விக்க வேண்டும் என்று கற்பனை செய்திருந்தான். அவளை நாழிக்கொரு உடை உடுத்திக் கொள்ளச் சொல்லி உல்லாசமாகப் பிறர்பார்த்துப் பொறாமைப் படும்படியாகக் கடற்கரை, சினிமா, நாடகம், காட்டியும் என்று இன்ப வாரிதியில் இருமாந்து போய்விட நினைத்திருந்தான். ஆனால் இன்று பிறரைப் பார்த்து அவன் பொறாமைப் படும்படியாக அமைந்து விட்டது அவன் வாழ்க்கை.

ஜைலான் புடவையைப் பெண்களின் உடலோடு ஒட்ட வைத்து விளையாடும் கடற்காற்றையும், அவர்களின் அருகில் மகிழ்ந்து போய் உட்கார்ந்திருக்கும் கணவன்மார்களையும் கண்டு அவன் நெஞ்சு வெந்து கொண்டிருந்தது. இந்தச் சுகங்கள் தனக்குக் கொடுத்து வைக்கவில்லை. அதற்குக் காரணம் அவலட்சணமாகத் தனக்கு வாய்த்த மனைவி கோமதிதான் என்ற முடிவில் அவள் மீது அவனுக்கு ஆத்திரமும் வெறுப்பும் ஏகமாக வளர்ந்து கொண்டே வந்தது.

கோமதி, பாவம்! பொறுமையே அவதாரமான பெண். வெளி அழகுக்கு ஏங்கிக் கிடந்த ராமு அவள் உள்ளத்து அழகைத் தெரிந்து கொள்ள முடியாத மூடனாக இருந்தான். தன்னை வெளியில் அழைத்துக் கொண்டு போவதை அவமானமாகத் தன் கணவன் கருதுகிறான் என்பதை அறிந்து கொண்ட போது கோமதி தன் ஆசைகளையும் அபிலாஷைகளையும் கல்லாக்கிக் கொண்டாள். அவனிடம் பொங்கி வழிய வேண்டிய புன்சிரிப்பும் பொசுங்கி விட்டது. அவளுடைய உள்ளத்தில் வைராக்கியம் பிறந்த பிறகு, முகத்திலே மகிழ்ச்சியும் கூம்பி விட்டது.

தன்னைத் தன் கணவன் வெறுக்கிறான் என்பதற்காக அவள் அவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளில் அசிரத்தையோ ஆத்திரமோ கொண்டதில்லை. தன்னோடு முகம் கொடுத்துப் பேசாத கணவனின் முகம் கோணாமல் அவனது தேவைகளை எல்லாம் அறிந்தறிந்து அப்போதைக்கப்போது செய்து வந்தாள். ஆனால் கலங்கிய அவள் கண்கள் தெளியவே இல்லை. ஜ்வலிக்கும் விழிகளில் தேங்கி நின்ற நீர் வற்றவே இல்லை. குனிந்த தலையை அவள் நிமிர்த்தவும் இல்லை. அன்பையும், ஆதரவையும், பரிவையும், பாசத்தையும் எதிர்பாராமல், பயன் கருதாமல் பற்றற்று, தன் கடன் பணி செய்வதே என்ற லட்சியத்துடன் யந்திரமாக மாறி விட்டாள் கோமதி. இருந்தாலும் இடை யிடையே ஆசைகள் அவள் வைராக்யக் கோட்டையையும் இடித்துக்கொண்டு பூரித்தெழும். கணவனின் மனத்தைக் காலம் மாற்றாதா! என்றைக்காவது அன்போடு அழைத்துப் பேசமாட்டாரா என்று ஏங்க ஆரம்பிக்கும்.

ஆனால் இந்த நீல மாதங்களிலிருந்து வருஷங்களாக வடிவெடுத்த போது அவள் உள்ளத்தில் ஒட்டிக் கொண்டு ஊசலாடிய நம்பிக்கை செத்து விட்டது.

அவள் உலகில் உல்லாசமாக வாழும் தம்பதிகளையும் காற்றில் முந்தானை பறக்கக் கைகோத்துக் கொண்டு கடற்கரை மணலிலே உட்கார்ந்து கலகலவென்று சிரிப்பைச் சிந்தும் ஜோடிகளையும் பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தாள்.

அவளும்தான் நல்ல வாழ்வு வாழும் நங்கைகளைப் பார்த்து, கணவன் மார்களின் கட்டிக் கரும்பாக வாழும் பாவையர்களின் பாக்கியத்தை நினைத்துப் பரிதவித்துப் போய்க் கொண்டிருந்தாள்.

கோமதியின் உலராத கண்களை ராமு சந்திக்கவே இல்லை. தளராமல் அவள் அவனுக்குச் செய்து வரும் சேவைகளை அவன் பாராட்டக் கூட இல்லை. ஆசை கொள்ளா விட்டாலும் அனுதாபமாவது கொண்டிருக்கலாம். அந்தப் பெண் ரத்தினத்தின் உள்ளத்திலே சுடர்விடும் அன்புத் தீயிலே அவன் குளிர் காயவே இல்லை!

அந்தத் தீ தூண்டுவாரின்றி ஜ்வாலை குன்றி அவிந்து கொண்டே வந்தது. ஏன், ஒரு நாளைக்கு அவிந்தேகூடப் போய் விட்டது. உடல் நோய்க்கு மருந்துண்டு. மனநோய்க்கு மருந்தேது! தன் நோயை அவள் சொல்லவும் இல்லை; மருந்தும் கேட்கவில்லை. ஆனால் தன் கடைசி மூச்சின் போதும் கணவனின் சுகத்துக்காக மருந்து சொல்லிவிட்டுப் போக அவள் மறக்கவில்லை.

இளமையின் துடிப்பும் மென்மையும் நிறைந்து நாணத்தினால் நடுங்கிய கோமதியின் கையை

மணப்பந்தலில் பிடித்த ராமு, மறுபடியும் அவளது மரணப் படுக்கையில்தான் கைப்பிடித்தான். அப்போதும் போலவே, இப்போதும் அவன் கைகள் நடுங்கிக் கொண்டுதானிருந்தன. உயிரே நடுங்கிக் கொண்டிருந்த வேளை அது. என்றோ உற்றுப் பார்த்திருக்க வேண்டிய அவளுடைய முகத்தை இன்று தான் உற்றுப் பார்த்தான் ராமு. அவள் வாழ்ந்த நாளில் அவனோடு எவ்வளவோ நான் பேச வேண்டுமென்று துடித்த அவள் உதடுகள் இன்றுதான் திறந்தன.

"என்னால் உங்களுக்கு ஒரு சுகமும் இல்லை. நான் உங்கள் வாழ்வைப் பாழாக்கி விட்டேன்..." திக்கித் திணறிப் பேச அவள் படும் அவஸ்தையைப் பார்க்கச் சகிக்காமல் ராமு, "இப்படி எல்லாம் பேசாதே, கோமதி! அதெல்லாம் ஒன்றுமில்லை..." என்று முகத்தில் வேதனை வடிய வார்த்தையை வழிய விட்டான்.

"எனக்கு ஒரு வாக்குக் கொடுப்பீர்களா! கொடுக்கிறேன் என்று கையில் அடித்துக் கொடுங்கள். நிறைவேற்றுகிறேன் என்று சொல்லுங்கள்...!" உரிமையோடு அவன் கைகளை எடுத்துத் தன் உலர்ந்த மார்பில் வைத்துக் கொண்டாள் கோமதி.

"சொல், கோமதி! உன்னுடைய உள்ளத்தில் இருப்பதைச் சொல்!"

"நான் உயிர் வாழப் போவதெல்லாம் இன்னும் கொஞ்ச நேரம்தான். எனக்குப் பிறகு நீங்கள் ஒரு அழகான பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொண்டு..." வார்த்தையை முடிக்காமல் அவள் தன்னுடைய வாழ்வை முடித்துக் கொண்டு விட்டாள்.

இந்த வாக்குறுதியை அவன் கேட்டிருக்கவே வேண்டாம். கேட்காதிருந்தாலும் அவன் செய்யப் போவது அதுதானே!

அவனுக்கோ வயது 25. கோமதியோடு வாழ்ந்த வாழ்வெல்லாம் மூன்றே வருஷம்தான். இறந்தவளிடம் அவன் மனத்தைப் பறிகொடுத்தவனில்லை. ஏன், பச்சாதாபங்கூடப் பட்டதில்லை. இன்ப வாழ்வுக்கு ஏங்கும் இளங் காளை இரண்டாம் கலியாணம் செய்து கொள்ளாமல் இருப்பானா? அதுவும் ராமுவினால் இருக்கவே முடியாது.

கோமதியோடு வாழ்ந்ததைக் கெட்ட கனவாக மறந்து புது வாழ்வின் புது ஏட்டுக்குப் பிள்ளையார் சுழி போட்டான். இந்தத் தடவை அவனுக்கு அதிர்ஷ்டம் காத்துக் கிடந்தது. கணவனை இழந்து தன் ஒரே மகளை வைத்துக் கொண்டு சாப்பாட்டுக்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஒரு குடும்பத்தை அவன் முன்னால் கொண்டு வந்து நிறுத்தியது. தன் கற்பனைக் கன்னியாக அங்கு ராஜியைக் கண்டான் ராமு. கோமதி மறைந்த மூன்றாவது மாதமே அந்த இடத்தைப் பூர்த்தி செய்ய வந்து விட்டாள் ராஜி.

ராஜி ராஜாத்தியாக இருந்தாள். ரோஜாப்பூ மேனி. கோமதியின் உருவத்துக்கு எதிர்மாறான தோற்றம். ஆனால் அதே அடக்கமும் அமரிக்கையுமான குணம். ராமு தன் மனைவியின் அழகிலே இறுமாந்து போனான். விதி கோமதியைக் கொடுத்துக் கொடுமை செய்ததற்குப் பிராயச் சித்தமாக ராஜியை அளித்திருப்பதாக எண்ணி மகிழ்ந்தான். நாளெல்லாம் 'ராஜி, ராஜி' என்று அன்போடு வாய் நிறைய அழைத்துக்கொண்டு அவளையே சுற்றிச் சுற்றி வந்தான். இந்தப் புது மோகம் தணிந்த பிறகும் ஏனோ அவனை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை.

ராஜி அவன் மனம் கோணாமல்தான் நடந்து வந்தாள். அவன் விரும்பிய இன்பத்தை எல்லாம் கொடுத்தாள். ஆனால் அவளை எங்காவது வெளியில் அழைத்தால் மட்டும் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லித் தப்பித்துக் கொண்டு வந்தாள். இதன் மர்மம் அவனுக்குப் புரியவில்லை.

ஒரு நாள் அவன் அவளைக் கடற்கரைக்கு அழைத்தபோது அவள் தலையை வலிக்கிறது என்று சொன்னதை நம்பினான்.

மற்றொரு நாள் சினிமாவுக்கு அழைத்தபோது அவள் தான் வரமுடியாமைக்குச் சொன்ன காரணத்தையும் ஏற்றுக் கொண்டான். ஆனால் ஒவ்வொரு தடவையும் அவள் அவன் அழைப்புக்குக் கூறும் போலிக் காரணங்களை அவனால் நம்பிக் கொண்டிருக்க முடியுமா!

அதுவும் அழகான, பிறர் பார்த்துப் பொறாமைப் படக் கூடிய தோற்றத்தை உடைய மனைவியை அடைந்திருக்கும் ராமு அவளை அழைத்துக் கொண்டு உல்லாசமாக வெளியில் கிளம்ப வேண்டும் என்ற துடிப்பை எத்தனை நாளைக்குத்தான் தாங்கிக் கொண்டிருக்க முடியும்!

முதலில் ராஜியின் இந்தப் போக்கைச் சாதாரணமாகவும் சகஜமாகவும் மதிப்பிட்டான். பிறகு கிராமத்துப் பெண், நாகரிகம் தெரியவில்லை என்று அலைபாயும் மனத்துக்கு ஆறுதல் சொன்னான்.

அதற்கு மேலும், இன்னுமா வெட்கம் நீங்கவில்லை என்று வியந்து கொண்டான்.

இத்தனைக்குப் பிறகும் அன்று அவள், "நான் எதற்கு அம்மா! அவரே போய்விட்டு வரட்டும்" என்று சொன்னதும் ராமுவுக்குத் தலை தெறித்து விடுவது போல ஆத்திரம் பீறிக் கொண்டு வந்தது. தன்னுடன் வர மறுக்கும் காரணத்தைப் பல விதங்களில் அவளைக் கேட்டுப் பார்த்தும் திருப்திகரமான பதில் கிடைக்கவில்லை அவனுக்கு. சிரித்து மயக்கி மழுப்பிக் கொண்டிருந்தாள் ராஜி. அவள் மையலிலே மயங்கிய அவனும் அவளைச் சிறிதும் கட்டாயப் படுத்தவில்லை.

ஆனால் அன்று கடற்கரைக்கு எப்படியும் ராஜியை அழைத்துக் கொண்டு போக வேண்டும்

## கோடைக் காட்சி!



என்று எத்தனையோ ஆசையோடு வந்த ராமுவுக்கு அவள் செய்கை மிகவும் விபரீதமாகப் பட்டது.

சில்லென்ற குளிர் காற்று மாலை மறைந்த நேரத்தை நினைவு படுத்தவே ராமு ஒரு நீண்ட பெருமூச்சுடன் எழுந்திருந்தான். அலைகடலின் அடங்காத குமுறலைப் போல அவன் மனத்திலும் எண்ணங்கள் அலைமோதிக் கொண்டிருந்தன. மங்கிய மாலை வெளிச்சத்தில் சற்றுத் தொலைவில் உட்கார்ந்திருந்த ஒரு இளந் தம்பதிகளின் உருவம் ராமுவின் பார்வையைத் தடைப் படுத்திற்று. அவள் வெண்மணலில் படுத்திருந்தாள்.

அவள் கணவன் அவள் முகத்துக்கு நேரே குனிந்து என்னவோ சொன்னதும் அந்தச் சுந்தரி குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

"உம்...நல்ல மனைவி வாய்ப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்" என்ற ஏக்கத்துடன், 'ஏன் ராஜி நல்லவள் இல்லையா! அவள் அழகுக்கு என்ன குறை!' என்று விவகாரம் பேசிற்று மனம்.

"என்னோடு வெளியே கிளம்ப ஏன் மறுக்கிறாள்! ஒருவேளை நான் முதல் மனைவியை உதாசீனம் செய்து துன்பப் படுத்தியது அவளுக்குத் தெரிந்திருக்குமோ! அதற்காக என்னைப் பழி வாங்குவதுபோல இப்படி என்னுடன் வெளியே வர மறுக்கிறாளோ!



ஏப்ரல் பதினோராம் தேதி புரசைவாக்கம் கங்காதீசுவரர் கோயிலில் சிதம்பரம் ஸ்ரீ சி. எஸ். செல்வரத்தினம் அவர்களின் ராமாயண கதா காலக்ஷேபம் நடந்தது. காலக்ஷேபத்தின் நடுவில் மிகப் பொருத்தமாகக் கம்பராமாயணப் பாடல்களையும் சேர்த்துச் சொல்லிச் சபையோரை மகிழ்வித்தார். சென்னை புரசை சன்மார்க்க சபையாரின் ஆதரவில் நடந்த இந்தக் காலக்ஷேப வைபவத்தில் ஏராளமான பொது மக்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

"அழகில் குறைந்த கோமதியை நான் வெளியில் அழைத்துப் போக வெட்கப்பட்டேன். அகௌரவம் என்றுகூட எண்ணினேன். இன்று என்னைவிடக் கம்பீரமும் அழகும் அந்தஸ்தும் நிறைந்தவனுக்கு ஏற்றவள் ராஜி. அதனால் என்னோடு வருவதை, அவள் கணவன் நான் என்பதைப் பிறர் அறிவதை வெறுக்கிறாளா!"

இந்த நினைவுகள் அவன் நெஞ்சைச் சுட்டன. நடந்து கொண்டிருந்தவன் திரும்பி நின்று தூரத்தில் குமுறிக் கொந்தளிக்கும் கடலைப் பார்த்தான். அந்த வெண் நுரையிலே கோமதியின் முகம் தோன்றியது. அவள் தன் முத்துப் பல் வரிசை தெரியத் தன்னைப் பார்த்துக் கலகலவென்று சிரிப்பது போல இருந்தது ராமுவுக்கு.

"ஏன் கடற்கரைக்கு மனைவியை அழைத்துவரவில்லையா!—என்னது! வரமாட்டேன் என்றுவிட்டாளா! அட, ஆச்சரியமாயிருக்கிறதே!"—யாரோ யாருக்கோ பதில் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ராமுவின் காதுகளில் அது கோமதியின் குரலாகத்தான் விழுந்தது.

இத்தனை நாள் இல்லாத ஒரு புதிய உணர்ச்சி அவனுடைய நினைவிலே தோன்றியது. கோமதியை உதாசீனப்படுத்தி அலட்சியம் செய்து அகம்பாவத்துடன் நடந்து கொண்டதெல்லாம் நினைவுக்கு வந்து அவன் உடலைக் குன்றச் செய்தது. இன்று ராஜி என் அழைப்பை ஏற்று வர மாட்டேன் என்பதற்கு நான் இத்தனை கொதிப் படைந்தேனே! அன்று கோமதியை நான் புழுவாக மதித்து அவளது உணர்ச்சிகளையும் ஆசைகளையும் வாழ்வின்பத்தையும் என் காலடியிலே துவைத்து மிதித்துவிட்டுப் போனபோது அவள் உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்! பெண்ணானாலும் அவள் அழகில்லாதவளானாலும் உள்ளமும் உணர்ச்சியும் எல்லோருக்கும் ஒன்றுதானே!

கோமதி வாழ்ந்திருந்தபோது அவளிடம் காட்டியிருக்கவேண்டிய பரிவும் பச்சாத்தாபமும் அவன் நெஞ்சைச் சுற்றி இழுக்கப் புது மனிதனாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான் ராமு. ராஜியை அப்படி மூர்க்கத்தனமாக அடித்தது தவறு என்ற எண்ணமும் மேலோங்கி நின்றது.

ஆத்திரம் அடங்கிக் கோபம் மழுங்கிப்போயிருந்தாலும் வீட்டுக்குள் நுழையும் போது வீறுப்பை விட்டுக் கொடுக்காமல் செருப்புக் காலை உதறிவிட்டு மௌனமாகக் கைகால்களை அலம்பிக் கொண்டு தயாராக இருந்த இலை முன் உட்கார்ந்தான். முகத்தின் கடுமையைக் கஷ்டத்துடன் காப்பாற்ற வேண்டி இருந்தது.

ராஜி பரிமாற வந்தபோது அவளது அழுது வீங்கிய கண்களுக்கு முன்னால் அவன் பார்வையில் பட்டது தந்தம் போன்ற அவளது உடலில் வரி வரியாக, கன்னக் கதுப்பிலே இவனது நான்கு விரல்களும் குங்கும ரேகையாகப் பதிந்திருந்த காட்சிதான். ராமுவுக்குப் பகீர் என்றது. "ஐயோ, பாவி! இப்படியா நான் அடித்து விட்டேன்!" அவன் நெஞ்சிலே சுரீல் என்று வலித்தது. கலங்கின் போது வேண்டுமென்றே அவள் கன்னத்தில் பட்டு மஞ்சளை அப்பியது நினைவுக்கு வந்தது. அவனுக்குச் சாப்பாடே வேண்டியிருக்கவில்லை. வயிற்றைக் குமட்டிற்று. மனத்தைக் குற்றவாளி மனப்பான்மை குடைந்து கொண்டிருந்தது.

ராஜியின் வரவுக்காகப் படுக்கை அறையில் உள்ளத் தவிப்புடன் காத்துக் கொண்டிருந்தான் ராமு. விரல் பதிந்து சிவந்த அவள் கன்னங்கள் அவன் முன்னால் வந்து அவனை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தன.

ராஜி சமையலறையை அலம்பி விட்டுச் சாமான்களைப் பார்த்து மூடிவிட்டு வெற்றிலையுடன் அறைக்குள் மெள்ள நுழைந்தாள். கணவன்



உருளைக் கிழங்குக்கு விற்பனை வரியிலிருந்து விலக்களிக்க வேண்டும் என்று கோரி, சென்னை உருளைக் கிழங்கு வர்த்தக சம்மேளனத்தார் சென்ற மாதம் சென்னையில் பெரிய மகாநாடு நடத்தினார்கள். இந்த மகாநாட்டுக்கு ஸ்ரீ பி. டி. ராஜன் தலைமை வகித்தார். உருளைக் கிழங்கு வியாபாரிகள் ஊர்வலமாகச் செல்லும் காட்சியைப் படத்தில் காணலாம்.

படுத்துக் கொள்ளாமல் கட்டிலில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு தலை குனிந்து தயங்கி நின்றாள் ராஜி. "ராஜி, இப்படி வா, இங்கே!" என்று அழைத்தான் ராமு. பரிவோடு அழைத்து அணைத்துச் சமாதானம் செய்யத்தான் நினைத்திருந்தான். ஆனால் அவளைக் கண்டதும் ஏனோ குரலில் பரிவு போய்க் கடுமை ஏறிவிட்டது.

ராமுவின் குரலைக் கேட்டதும் ராஜியின் கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் உதிர ஆரம்பித்து விட்டது. குரல் அடைக்க, "என்னை மன்னித்து விடுங்கள். நான் ஏதோ அசட்டுத்தனமான ஒரு எண்ணத்தில்......" என்றாள். அவளை மேலே பேச விடாமல் அழுகை வந்து வார்த்தைகளுக்கு அணை போட்டது. ஆத்திரத்தில் அப்படி அடித்ததற்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளத் தயாராக இருந்த ராமுவின் மனப்பான்மையை அவள் வார்த்தைகள் மாற்றி விட்டன.

"ம்!" என்று கனைத்துக் கொண்டான். "என்னோடு வந்தால் உங்கள் கௌரவம் குறைந்துவிடுமாக்கும். ஏன் அப்படித்தானே!" என்று தான் இன்னும் அந்தச் சம்பவத்தை மறக்கவில்லை என்பதைக் காட்டிக் கொண்டான்.

ராஜி அவன் காலடியில் வந்து உட்கார்ந்து கொண்டாள். "அப்படி எல்லாம் ஒன்றுமில்லை. நான் வெளியிலே வரத் தயங்குவதற்குக் காரணம் என் சின்ன வயதிலே நடந்த ஒரு சம்பவத்தின் நினைவு இன்னும் பசுமையாக என் மனத்திலே பதிந்திருப்பதுதான்" என்றாள்.

ராமு அவள் சொல்லப் போவதைக் கேட்கும் ஆவலுடன் அவள் மணிக் கழுத்தோரத்திலே அசைந்து நெளியும் சுருண்ட கருங் குழலைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

"நான் அன்றைக்குத்தான் தாவணி போட்டுக் கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போனேன். என்னை எல்லோரும் விசேஷமாகத் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். கசமுச என்று பேசிக் கொண்டார்கள். சாதாரணமாகவே நான் அழகு. அதுவும் பருவம் என்னுள் புகுந்து மலர்ந்திருந்தது. என் காது கேட்கவே 'ராஜியைப் பாரேன். தாவணி போட்டதும் பெரிய மனுஷி மாதிரி இல்லை!" என்றாள் ஒரு பெண்.

"என் தாவணியும் பருவத்தின் பூரிப்பும், எங்கள் அக்கம் பக்கத்திலுள்ளவர்களின் விழிகளை இமைக்காமல் செய்தன. 'இந்த அழகு எத்தனை குடியைக் கெடுக்கப் போகிறதோ!' என்றாள் ஒரு பாட்டி. என் நெஞ்சிலே அந்த வார்த்தை சுருக்கென்று தைத்தது.

"சீதையும் திரௌபதியும் அகலிகையும் கஷ்டப்பட்டது அழகினால்தான். பெண்களுக்கு அதிகமான அழகே ஆபத்துதானம்மா!" என்று வியாக்கியானம் செய்து வம்பளக்கும் அளவுக்கு என் தோற்றம் புரட்சியை உண்டாக்கி விட்டது. அன்று முதல் நான் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தினேன். எல்லோரும் என்னைத் திரும்பிப்பார்த்து என் அழகைக் கண்டு வியப்பது எனக்கு வெறுப்பாக இருந்தது. வெளியில் போகவே கூசினேன்.

"நான் உங்களுக்கு மாலையிட்டதும் என் அழகுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டு விட்டதாக எண்ணினேன். என் பயத்தில் பாதி குறைந்தது. ஆனால் ஏதோ கதையில் ஒரு கணவன் தன் மனைவியின் அழகை எல்லோரும் கண்டு ரசிப்பதைப் பொறுக்க முடியாமல் பொறாமை கொண்டு அவளைத் தவறாகப் புரிந்து கொண்டு துன்பப்படுத்தினான் என்று படித்திருக்கிறேன். அதனால்தான் அந்த மாதிரி என் அழகினால் உங்கள் அன்பை இழந்து விடுவேனோ என்று......"

ராமுவிடமிருந்து கடகட வென்று எழுந்த சிரிப்பொலி அவள் பேச்சைத் தடைப்படுத்திற்று.

அவளைத் தூக்கித் தன் அருகில் உட்கார வைத்துக் கொண்டே, "அடி, அசடே! இதற்காகவா நீ என்னுடன் வெளியில் வருவதற்குக் கூச்சப்பட்டுக் கொண்டிருந்தாய்! நான் என்னென்னவோ எண்ணி விட்டேன்..." என்று சொன்னானே தவிர அவன் மனத்தில் ஏதோ ஒரு பலமான அடி விழுந்தது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவன் உடல் லேசாக நடுங்கிற்று. தான் பிற பெண்களைக் கண் இமைக்காமல் பார்ப்பது அவன் நினைவைத் திருகிற்றோ என்னவோ!

ராமுவின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்ட ராஜிக்கு அழுகை கொப்பளித்துக் கொண்டு வந்தது. விக்கி விக்கி அழுதாள். தான் அழுவதின் காரணம் அவளுக்கே விளங்கவில்லை. ஆனால் அது அவளுக்கு ஆறுதலாக இருந்தது.

"அசடே, அழாதே!" என்று செல்லமாக அவள் கன்னத்தைத் தொட்டபோது அவன் கை நடுங்கிற்று. அந்தப் பட்டுக் கன்னம் அவன் தொட்டபோது மிருதுவாக இல்லை. வரி வரியாக அவன் விரலின் அடையாளத்தைக் காண்பித்துக் கொண்டு உறுத்திற்று. அவன் நெஞ்சம் நினைவும் நடுங்கிற்று. மனத்தில் பல வருஷங்களாக கெட்டிப்பட்டு இறுகிப் போயிருந்த ஏதோ ஒன்று கரைந்து போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

"ராஜி, நான் ரொம்பக் கொடியவன்...உன்னை இப்படி அடித்து விட்டேனே, பாவி!" என்றான். அவன் வாயை அதற்கு மேல் பேசவொட்டாமல் கைகளால் பொத்தி முறுவலித்தாள் ராஜி.

....உங்கள் விடுமுறைக்கு

# காஷ்மீர்

என்று சொல்லுங்கள் !

இவ்வருடம் காஷ்மீரை உங்கள் விடுமுறைத்தலமாக தேர்ந்தெடுங்கள். காஷ்மீரின் மொகல் தோட்டங்கள், மிக ரம்மியமான பனி மூடிய மலைகள், அழகிய ஏரிகள், வேக மிகுந்த சிற்றோடைகள் மற்றும் பல கவர்ச்சிகளும் உங்கள் மனதில் வெகு காலம் நீடித்து நிலைத்திருக்கும் விடுமுறையை அளிக்கும்.




வெளியிடுவோர்

டைரக்டர், விசிட்டர்ஸ் பியூரோ, ஜம்மு & காஷ்மீர் கவர்ன்மென்ட், ஸ்ரீநகர்




கஸ்தூரிபா பிரசவ ஆஸ்பத்திரிக் கட்டிடத்திலிருந்த பெரிய மணிக் கூண்டு "டாண் டாண்" என்று நான்கு தடவைகள் அடித்து ஓய்ந்தது. பிரசவ அறையின் தென்புறமிருந்த கட்டில் ஒன்றில் வேதனையுடன் முனகியவாறு கிடந்தாள் சாவித்திரி. அவள் கண்களிலிருந்து பெருக்கெடுத்தோடிய கண்ணீர் அந்த வெண்ணிறத் தலையணையை நனைத்துக் கொண்டிருந்தது. பிரசவ வேதனையுடன் மன வேதனையும் திகிலும் கலந்து அவளை வாட்டிக் கொண்டிருந்தன. "ஆண் குழந்தையை மட்டும் எனக்குக் கொடுத்து விடாதே. கடவுளே!" என்று அவள் உதடுகள் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தன.

அந்தச் சமயத்தில் அந்த அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தாள் நர்ஸ் லீலா. சாவித்திரியை அணுகி அவள் நாடியைப் பரிசோதித்துப் பார்த்த லீலாவின் கண்கள் மலர்ந்தன. "சாவித்திரி! இன்னும் சில நிமிஷங்களில் குழந்தை பிறந்து விடும்" என்று கூறி விட்டு வேகமாக அவ்விடத்தை விட்டு வெளியேறி இன்னொரு நர்ஸை அழைத்துக் கொண்டு வந்தாள். புதுக் குழந்தை ஒன்றை வரவேற்கத் துரிதமாக ஏற்பாடுகள் நடந்தன.

பத்து நிமிஷங்களில் 'குவா. குவா' என்ற சப்தம் அந்த அறையில் ஒலித்தது. ஆவல் ததும்பும் உள்ளத்துடன், "என்ன குழந்தை?" என்று கேட்டாள் சாவித்திரி.

"ஆண் குழந்தைதான் பிறந்திருக்கிறது. வருத்தப் படாதே, சாவித்திரி!" என்று துயரத்துடன் மொழிந்தாள் லீலா.

"என்ன! ஆண் குழந்தையா?" என்று திகிலுடன் அலறிய சாவித்திரி மறுகணமே மூர்ச்சையாகி விட்டாள்.

** ** **

மணமாகிப் பத்து வருடங்களுக்குப் பிறகு கருத் தரித்திருந்தாள் சாவித்திரி. 'என்ன குழந்தை பிறக்கும்? அதன் அதிர்ஷ்டம் எப்படி இருக்கும்?' என்பதை அறியும் அவாவுடன் ஒரு சோதிடரிடம் தங்கள் ஜாதகத்தைக் காட்டினர் சாவித்திரியும் அவள் கணவர் நாகராஜனும். ஆனால் சோதிடர் கூறிய வார்த்தைகள் அவர்கள் நெஞ்சைக் கலக்கி விட்டன. "ஆண் குழந்தை பிறந்தால் தகப்பனாரை ஐந்து வருடங்களுக்குள் தீர்த்துக் கட்டி விடும். ஆகையால் பெண் குழந்தைதான் பிறக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தனை செய்யுங்கள்" என்று கூறிச் சென்று விட்டார் அந்தச் சோதிட நிபுணர். திகிலென்னும் தீ அந்தத் தம்பதியின் உள்ளங்களில் சுடர் விட்டு எரிய ஆரம்

பித்தது. இந்தப் பயங்கர நம்பிக்கை நாக ராஜனைப் படுக்கையில் கிடத்தி விட்டது. அவருக்கு 'இருதயக் கோளாறு' என்று கூறி விட்டார் டாக்டர்.

தனக்கு ஆண் குழந்தை வேண்டும் என்று முன்பு எத்தனை ஆயிரம் தடவைகள் கடவுளை வேண்டினாளோ, அதைவிடப் பல ஆயிரம் தடவைகள் தனக்கு ஆண் குழந்தையை அளித்து விடாதே என்று இரவும் பகலும் இறைவனைப் பிரார்த்தித்தாள் சாவித்திரி. அன்று மத்தியானத்திலிருந்து பிரசவ வேதனையில் துடிக்க ஆரம்பித்த சாவித்திரியை மோட்டாரில் கஸ்தூரிபா ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றார்கள். வீட்டில் வயது சென்ற அத்தை ஒருத்தி நாக ராஜனைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

பிரக்ஞை இழந்த சாவித்திரி மறுபடியும் கண்களைத் திறந்த பொழுது ஐந்து மணி இருக்கும். சிரமத்துடன் தன்னைச் சுற்றிலும் ஒரு தடவை கண்களைச் செலுத்தினாள். அவள் முகத்தையே ஆவலுடன் நோக்கியவாறு கட்டிலருகே நின்று கொண்டிருந்தாள் நீலா. பொங்கியெழுந்த துக்கத்தை அடக்கிக் கொண்டு தன் அருகில் கிடந்த குழந்தையை நோக்கிய சாவித்திரிக்குத் தான் காண்பது கனவா, நனவா என்று புரியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தாள். ஆம், சந்தேகமில்லை. அவள் அருகில் ஆனந்தமாக உறங்கிக் கொண்டிருந்தது ஒரு அழகிய பெண் குழந்தைதான்!

வியப்பால் விரிந்த கண்களுடன் நீலாவை நோக்கினாள் சாவித்திரி. நீலா அவளைப் பார்த்துப் புன்னகை செய்தாள். சாவித்திரியினால் தன் ஆவலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. "நீலா! எனக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறதென்றல்லவா சொன்னாய்?" என்று வியப்புடன் கேட்டாள்.

சுற்றும் முற்றும் பார்த்து விட்டு மெல்லிய குரலில் பேசினாள் நீலா. "சாவித்திரி! உனக்கு ஆண் குழந்தைதான் பிறந்தது. ஆனால் உனக்கு அடுத்தாற்போல் பிரசவித்த ஒரு ஏழைப் பெண்ணின் குழந்தை இது. அவளுக்கு ஐந்நூறு ரூபாய் தருவதாகக் கூறி அவள் குழந்தையை உனக்கு மாற்றி விட்டேன். இந்த விஷயம் என்னையும் நர்ஸ் கோமளத்தையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. இதை யாரிடமும் வெளியிடாமல் உன் குழந்தையைத் தன் சொந்தக் குழந்தையைப் போலப் பாதுகாத்து வளர்க்க வேண்டும் என்று அந்தப் பெண்ணிடம் வாக்குறுதியும் வாங்கி விட்டேன். வாக்குறுதி தவறமாட்டாள்" என்றாள்.

"இருதயக் கோளாறினால் வருந்தும் அவர் ஆண் குழந்தை பிறந்திருக்கிறது என்கிற செய்தியை அறிந்தால் அதிர்ச்சியடைந்து விடுவாரே என்று கலங்கிக் கொண்டிருந்தேன். நீலா! நீ செய்த இந்த உதவியை நான் மறக்க மாட்டேன். இப்பொழுதே போன் செய்து அவருக்கு இந்தத் தகவலைச் சொல்லி விடு. பெண் பிறந்திருக்கிறாள் என்பதை அறிந்தவுடன் அவர் நோய் எல்லாம் பறந்து விடும்" என்று மகிழ்ச்சியுடன் கூறினாள் சாவித்திரி.

ஆனால் அதே சமயத்தில், தான் பெற்றெடுத்த, தன் ரத்தத்தில் உதித்த குழந்தையைப் பாலூட்டிச் சீராட்டி வளர்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்ற வருத்தமும் அவள் மனத்தை வாட்டியது. அந்தக்



குழந்தையை ஒரு முறை பார்க்க வேண்டும் என்கிற தன் ஆவலை நர்ஸ் நீலாவிடம் தெரிவித்தாள். அவள் தன் கையில் கொண்டு வந்து கொடுத்த குழந்தையை ஆவலுடன் உற்று நோக்கினாள் சாவித்திரி. 'கொழு கொழு' வென்று அழகாக இருந்த தன் பிள்ளையைத் திருப்பித் தர அவள் மனம் இசையவில்லை. ஆயினும் முடிவில் குழந்தையின் அழகான கன்னங்களில் முத்தமிட்டு விட்டு நீலாவிடம் கொடுத்தாள்.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. சாவித்திரி ஆஸ்பத்திரியி லிருந்து வீட்டுக்கு வந்து விட்டாள். நாகராஜன் உடல் நிலையில் நல்ல மாறுதல் ஏற்பட்டிருந்தது. அந்தப் பெண் குழந்தையைத் தம் உயிரைக் காப்பாற்ற வந்த தெய்வம் என்று கருதினார் நாகராஜன். செல்லம் என்ற பெயரிட்டு அதைச் செல்லமாகவும் வளர்த்து வந்தார். சாவித்திரியும் அந்தக் குழந்தை மீது மிக்க அன்பும் ஆசையும் கொண்டிருந்தாள்.



சோதிடர் குறிப்பிட்ட ஐந்தாவது ஆண்டு நெருங்கிக் கொண்டிருந்தது. சாவித்திரியின் உள்ளத்தில் அணைந்து போயிருந்த நெருப்பு மீண்டும் சுடர் விட்டெரிய ஆரம்பித்தது. சோதிடர் கூறியபடி எங்கே தன் கணவருக்கு ஆபத்து நேர்ந்து விடப் போகிறதோ என்று வினாடிக்கு வினாடி அஞ்சிக் கொண்டிருந்தாள் சாவித்திரி. நாகராஜனோ தனக்குப் பிறந்திருப்பது உண்மையில் பெண் என்றே நம்பிச் சோதிடர் கூறியிருந்ததை அடியோடு மறந்து விட்டிருந்தார். நடுங்கும் நெஞ்சத்துடன் நாட்களை எண்ணி வந்தாள் சாவித்திரி. அவள் அருமை மைந்தன் பிறந்து ஐந்து ஆண்டுகள் ஆகி விட்டன. நாகராஜன் என்றும் போல் ஆரோக்கியத்துடன்தான் இருந்தார். மேலும் ஒரு ஆண்டு உருண்டது. நாகராஜனுக்குச் சோதிடர் கூறியபடி எந்த வித ஆபத்தும் சம்பவிக்க வில்லை.

சாவித்திரி தான் செய்து விட்ட மகத்தான தவறை நினைத்து மனத்துள் மிகவும் புலம்பித் தவித்தாள். மூட நம்பிக்கையால் தம் வயிற்றில் உதித்த முத்தைப் பறி கொடுத்து விட்டோமே என்று எண்ணி அவள் மனம் ஏங்கியது. இதே ஏக்கத்தில் மருகிக் கொண்டிருந்த அவளுக்குத் திடீரென்று ஒரு எண்ணம் தோன்றியது. உண்மையைத் தன் கணவரிடம் கூறி, பிள்ளை இருக்கு மிடத்தை அறிந்து, அவனை மீட்டு வரச் செய்தால் என்ன என்பதுதான் அந்த எண்ணம்.

எனவே, ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நாகராஜனின் பொருட்டு, தான் பெற்ற ஆண் குழந்தையைத் தியாகம் செய்த வரலாற்றைக் கண் கலங்கக் கூறினாள் சாவித்திரி. நாகராஜன் தம் மனைவி கூறியவற்றைக் கேட்டுப் பிரமித்து விட்டார். தமக்கு ஆண் குழந்தை பிறந்திருந்தும் தம் உயிருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்பட வில்லையே என்று வியந்தார். அந்த வியப்பு மறுகணம் சோதிடரின்மீது சினமாக மாறியது. அவர் கூறிய வார்த்தைகளை நம்பி நடுக்கம் கொண்ட தம் அறியாமையை நினைந்து வருந்தினார். தம் அருமை மகனைப் பார்க்க வேண்டும் என்று அவர் உள்ளமும் துடித்தது. நர்ஸ் நீலாவின் உதவியினால் அந்த ஏழை மாதின் விலாசத்தைக் கண்டு பிடித்து அங்கே சென்றார் நாகராஜன். ஆனால் அந்த வீட்டில் வேறு யாரோ வசித்துக் கொண்டிருந்தார்கள். அண்டை வீட்டுக்காரர்களிடம் விசாரித்ததில், ஏழைமையால் வாடிக் கொண்டிருந்த அவள் குடும்பத்துடன் வேலை தேடும் பொருட்டு, இரண்டு வருடங்களுக்கு முன் வெளியூருக்குச் சென்று விட்டதாகத் தகவல் கிடைத்தது.

ஏமாற்றத்துடன் வீடு திரும்பினார் நாகராஜன். அவர்களைக் கண்டு பிடிக்க அவர் செய்த முயற்சிகள் யாவும் தோல்வி அடைந்தன. மனச் சோர்வடைந்த அவ்விரு பெற்ற உள்ளங்களும் என்றைக்கு நாம் நம் குழந்தையைக் காணப் போகிறோமோ என்று மருகி உருகின. ராஜ போகத்துடன் வாழவேண்டிய தம் குழந்தை ஏழை வீட்டில் எத்தகைய துன்பத்தை அனுபவிக்கிறானோ என்று எண்ணித் தவித்தனர்.

ஆனால் செல்வத்தை அவர்கள் வெறுக்க வில்லை. "அம்மா! அப்பா!" என்று அவள்




தில் இனம் தெரியாத ஒருவன் உரிமை பாராட்டி அதிகாரம் செய்து அனுபவிப்பதைக் கண்டு அவர் உள்ளம் துடித்தது.

அன்று இரவு சாப்பிட்டான பின் அந்த விசாலமான கூடத்தில் அமர்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார் நாகராஜன். வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் சேகர் அவரிடம் வந்து, "மாமா! உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டும் என்று காலையிலேயே நினைத்தேன்......" என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்தான்.

வெற்றிலைச் சாறை விழுங்கி விட்டு அவன் முகத்தை வியப்புடன் நோக்கிய நாகராஜன், "என்ன விஷயமப்பா?" என்று கேட்டார்.

அன்பொழுக அழைப்பதைக் கேட்டு அவர்கள் மனம் சற்று நிம்மதியடைந்தன. 'மள மள' வென்று வளர்ந்து மங்கைப் பருவம் எய்தினாள் செல்லம். அவளுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்று நினைத்துப் பெரிய இடத்துப் பையன் ஒருவனை நிச்சயம் செய்தார் நாகராஜன். ஆனால் தன் கல்லூரியில் உபாத்தியாயராக இருந்த சேகர் என்ற வாலிபனையே மணக்கப் போவதாகப் பிடிவாதம் செய்தாள் செல்லம். அந்த வாலிபன் தாய் தந்தையற்ற அனாதை என்றும், தான் சம்பாதிக்கும் பணத்தைக் கொண்டு தனியாக வாழ்பவன் என்றும் நாகராஜன் தெரிந்து கொண்டு செல்லத்தின் விருப்பத்துக்கு இணங்க முதலில் மறுத்தார். அவள் கண்ணீர் பெருக்கிக் கதறினாள். "யாரோ பெற்ற குழந்தை. அவளை நாம் ஏன் கண் கலங்க வைக்க வேண்டும்?" என்று நினைத்து அவள் இஷ்டப் படியே திருமணத்தை நடத்தி முடித்தார். மாப்பிள்ளை நல்ல அழகனாகவும் புத்திசாலியாகவுமிருந்தான். உபாத்தியாயர் வேலையை உதறித் தள்ளி விட்டுத் தம் வியாபாரத்தைக் கவனிக்கும்படி சேகரிடம் சொன்னார் நாகராஜன்.

இரண்டு ஆண்டுகள் உருண்டோடின. சேகரிடம் தம் வியாபார நிர்வாகம் முழுவதையும் விட்டு விட்டு வீட்டிலிருந்தார் நாகராஜன். நாளடைவில் சேகரின் போக்கே மாறி விட்டது. பணத்தைக் கண்டபடி செலவழிக்க ஆரம்பித்தான். விலையுயர்ந்த ஆடைகள் ஒரு பீரோ நிறைய இருந்தன. வித விதமான மேஜை, நாற்காலிகள் எல்லாம் அவன் அறையை அலங்கரித்தன. இருபத்தையாயிரம் ரூபாயில் ஒரு புது மோட்டார் கார் வாங்கினான். ஆடம்பரத்தின் சிகரமாகி விட்டான் எளிமையின் சின்னமாக இருந்த சேகர். இவற்றைக் காணக் காண நாகராஜனின் நெஞ்சம் குமுறியது. தம் அருமை மகள் இருந்து ஆட்சி செய்ய வேண்டிய இடத்

"மாமா! கோடைக் கானலில் ஒரு பங்களா விலைக்கு வந்திருக்கிறது. நாற்பத்தையாயிரம் ரூபாய் என்று சொல்கிறார்கள். போன வாரம் நான் போய்ப் பார்த்து விட்டு வந்தேன். அருமையான இடம். வசதி நிறைந்த கட்டிடம். அதை வாங்கலாம் என்று நினைக்கிறேன். உங்கள் சம்மதத்தைக் கேட்க..." என்று இழுத்தான்.

அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டே வந்த நாகராஜனுக்குப் பொறுமை எல்லையை மீறி விட்டது. "என்ன! நாற்பத்தையாயிரம் ரூபாய் கொட்டிப் பங்களா வாங்கவா?" என்று சினத்துடன் கேட்டார்.

"ஆமாம், மாமா! அந்த இடத்தில் இந்த விலைக்குக் கிடைப்பது நம் அதிர்ஷ்டம். ஐம்பதாயிரம் ரூபாய்க்கு ஒருவர் கேட்கிறாராம். அந்தப் பங்களாவின் சொந்தக்காரர் எனக்குத் தெரிந்தவர். எனக்காக நாற்பத்தையாயிரத்துக்குத் தருகிறேன் என்கிறார். நான் சரியென்று சொல்லி விட்டேன்" என்றான் சேகர்.

"என்ன! முடிவு செய்து விட்டாயா?"— நாகராஜனின் நெஞ்சத்திலிருந்து எரிமலையைப்போலக் கோபத் தீ கொதித்தெழுந்தது.

"ஆமாம், மாமா! முடிவு செய்து விட்டேன்!" என்றான் சேகர்.

"ஹூம், இன்னொருவன் சம்பாதித்த பணத்தைக் கொண்டு பங்களா வாங்கி அதில் சுகமாக இருப்பாயோ?" என்று ஏளனமாகக் கூறிய நாகராஜன், "யாரிடம் கேட்டு முடிவு செய்தாய்? என்னுடைய பணம், நான் பாடுபட்டுச் சம்பாதித்த பணம். நீ அதைப் பாழ்படுத்துவதை நான் ஒருகாலும் அனுமதிக்க முடியாது!" என்று அடிபட்ட வேங்கையைப் போல் உறுமினார்.

அதுவரை பொறுமையுடன் உட்கார்ந்திருந்த சேகர் இவ் வார்த்தைகளைக் கேட்டதும் துணுக்குற்றான்.

"மாமா! நீங்கள் சம்பாதித்த பணம் தான். அதில் எனக்கு உரிமை இல்லையா? நான் உங்கள் மருமகனல்லவா? உங்களுக்குப்பிறகு

இந்தச் செல்வத்தை எனக்குத்தானே கொடுக்கப் போகிறீர்கள்? அதை இப்பொழுது நான் என் விருப்பப்படி செலவு செய்வதில் என்ன தவறிருக்கிறது?'' என்று கேட்டான்.

"ஹூம், மருமகன்! நீயா என் மருமகன்? இல்லை, இல்லவே இல்லை, உனக்கு என் சொத்தில் ஒரு தம்பிடி கூடத் தொட உரிமை இல்லை. செல்லம் என் சொந்த மகன் அல்ல!''

அவரையும் அறியாமல் வார்த்தைகள் கடும் வேகத்தில் வெளி வந்தன. உணர்ச்சி வேகத்தில் அவர் உடல் நடுங்கியது.

சேகர் திகைத்து விட்டான். தன் காதுகளையே அவனால் நம்ப முடியவில்லை.

"என்ன? செல்லம் உங்கள் மகன் இல்லையா?''-சேகர் பிரமிப்புடன் வினவினான்.

"சத்தியமாகச் சொல்கிறேன். செல்லம் என் மகன் அல்ல'' என்று ஆரம்பித்து ஆதியோடந்தமாக உண்மையைக் கூறி முடித்தார் நாகராஜன்.

சில நிமிஷங்கள் மௌனமாக இருந்த சேகர் ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாய், "மாமா! சில நிமிஷங்களுக்கு முன்வரை இந்த வீட்டு மருமகன் என்ற உரிமையுடன் நான் என் விருப்பப்படி காரியங்கள் செய்து வந்தேன். ஆனால் இப்பொழுதுதான் என் உண்மை நிலையை அறிந்தேன். செல்லத்தையும் என்னையும் இத்தனை காலம் அன்போடு நடத்தியதற்கு நன்றி. நான் நாளைக்கே இந்த வீட்டை விட்டு வெளியேறி விடுகிறேன்'' என்று அமைதியான குரலில் கூறிவிட்டு வேகமாக அவ்விடத்தை விட்டகன்றான்.

அன்று இரவு பன்னிரண்டு மணி இருக்கும். எல்லோரும் ஆழ்ந்த நித்திரையில் லயித்திருந்தனர். திடீரென்று, "ஐயோ! அம்மா!'' என்ற அலறல் சேகர் படுத்திருந்த அறையிலிருந்து வந்தது. அலறிப் புடைத்துக் கொண்டு நாகராஜனும் சாவித்திரியும் அங்கே பாய்ந்தோடினர்.

முதுகின் நடுவில் இடது கையை வைத்து அழுத்திய வண்ணம் வேதனையால் துடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் சேகர். தரையின் மீது வேகமாக ஓடிய தேளை எதனால் அடித்துக் கொல்வது என்று பிடிபடாமல் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தான் செல்லம். வேகமாக அந்த அறையில் நுழைந்த நாகராஜன் மேஜையின் மீதிருந்த ஒரு பெரிய புஸ்தகத்தை எடுத்துத் தப்பி ஓட முயன்று கொண்டிருந்த அந்தத் தேளின் மீது ஓங்கி அடித்தார். ஸ்தலத்திலேயே அது மரணமடைந்தது.

சாவித்திரி அவசர அவசரமாகச் சமையலறைக்கு ஓடிச் சென்று ஒரு வெங்காயத்தை அறுத்துக் கொண்டு வந்தாள். சேகரின் முதுகில், தேள் கொட்டிய இடத்தில் வெங்காயத்தை வேகமாகத் தேய்த்துக் கொண்டிருந்த அவள் திடீரென்று, "இதோ இருக்கிறான் என் மகன்! இங்கே ஓடி வாருங்கள்! என் மகனைக் கண்டுபிடித்து விட்டேன்!'' என்று சந்தோஷ ஆரவாரம் செய்து சேகரை அணைத்துக் கொண்டாள், தாய்மை உணர்ச்சி பெருக்கெடுத்து ஓட. அங்கிருந்த மற்றவர்களுக்கு அவள் செய்கை வியப்பை அளித்தது.

நம் மனைவிக்கு ஏதாவது மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்று நினைத்தார் நாகராஜன். செல்லம் வியப்புடன் சாவித்திரியை நோக்கினான். வலியினால் துடித்துக் கொண்டிருந்த சேகர், அந்த வேதனையையும் மறந்து திகைப்புடன் உட்கார்ந்திருந்தான்.

"அங்கேயே நிற்கிறீர்களே! இங்கே வந்து இதைப் பாருங்களேன்!'' என்று முகம் மலரத் தன் கணவனை அழைத்தாள் சாவித்திரி.

நாகராஜன் அவள் காட்டிய இடத்தைப் பார்த்தார். சேகரின் முதுகில் காலணா அகலத்துக்கு ஒரு சிவப்பு மச்சம் இருந்தது.

"எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. நம் குழந்தைக்கு இதே இடத்தில் ஒரு சிவப்பு மச்சம் இருந்தது. அதனால் சந்தேகமில்லாமல் இவன்தான் நம் குழந்தை! சேகர்தான் நம் மகன்!'' என்று ஆனந்த உணர்ச்சியை அடக்கமாட்டாமல் கூவினாள் சாவித்திரி.

"நிஜமாகவா, சாவித்திரி! சேகர்தானா நம் குழந்தை?'' என்று வியப்பும் மகிழ்ச்சியும் மேலிடக் கூறிய நாகராஜன் மகிழ்ச்சிக் கடலில் தத்தளித்துக் கொண்டிருந்த தம் மனைவியையும், உன்மத்தனைப் போல உட்கார்ந்திருந்த சேகரையும் மாறி மாறிப் பார்த்தார். பறிபோன தன் பெரும் செல்வம் மீண்டுவிட்டதைப் போன்ற உணர்ச்சி நிலையில் சாவித்திரி இருந்தாள். தான் காண்பது கனவா, நனவா என்பதை அறியாமல் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தான் சேகர்.

நம்மை வளர்த்துப் பெரியவனாக்கி, சிங்கப்பூரில் குண்டுகளுக்கு இரையாகிய அந்தத் தம்பதிகள் நம் பெற்றோர் அல்ல. இதோ நம் எதிரே நிற்கும் நாகராஜனும் சாவித்திரியும் தான் நமது உண்மைத் தந்தையும் தாயும் என்பதை அறிந்ததும் அவன் உள்ளத்தில் பலவித உணர்ச்சிகள் அலைபாய்ந்தன.

"சேகர்!'' என்று இதயத்திலிருந்து பெருக்கெடுத்த அன்புடன் அழைத்தார் நாகராஜன். அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்தான் சேகர்.

"சேகர்! நீ என் மருமகன் அல்ல என்று சில மணி நேரங்களுக்கு முன் சொல்லி உன் மனத்தைப் புண்படுத்தினேன். ஆனால் இப்பொழுது உன்னை என் மகன் என்று அழைக்கிறேன். கடவுள் நம்மை ஒன்று சேர்த்து விட்டார். இந்த வீடு, என் செல்வம் எல்லாவற்றிற்கும் உரியவன் நீ. அதை உன் விருப்பப்படி உபயோகிக்க இதோ அனுமதி தந்து விட்டேன்!'' என்றார் பாசமும் பரிவும் கலந்து கம்பீரத்துடன் ஒலித்த குரலில்.

"அப்பா!'' வென்று அலறிய வண்ணம் பாய்ந்து சென்று தன் தந்தையை அணைத்துக் கொண்டான் சேகர். பிள்ளையைப் பெற்றதன் பலனை அப்பொழுது தான் அனுபவித்து மகிழ்ந்தார் நாகராஜன்.

# டயர்களில் லாபம் பெற

—ஒவ்வொரு டயர் ஸோல்ஸ் டிரட் மூலமும் உங்கள் டயருக்கு புத்துயிர் அளியுங்கள்

—ஆகும் செலவு டயர் விலையில் பாதிதான்

—ஒரு டயருக்கு இரண்டு, மூன்று முறை "சிகிச்சை" யளிக்கலாம்

—'டிரட்' பரப்பு முழுவதும் தேய்ந்து மறையாமல், மங்கலாக இருக்கும்பொழுதே டயர்களை அகற்றி 'சிகிச்சை'க்கு அனுப்புங்கள்



## டயர்ஸோல்ஸ்

குறைந்த செலவில் மீண்டும் புது டயர் மைலேஜ் பெற

**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (வைத் இந்தியா) லிமிடெட்,**

"டயர்ஸோல்ஸ் டிபார்ட்மெண்ட்"

பாக்டரிகள் :
கோயமுத்தூர், மதராஸ், கோட்டயம், பெங்களூர், கல்கத்தா ஆகிய இடங்களில்.

EP

ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு "டயர்ஸோல்ஸ்" டீலர் உண்டு.

# யோகாசனச் சிகிச்சை

✦ வி. என். குமாரசாமி

## 19. ஆஸ்துமா வரக் காரணம்

ஆஸ்துமா வரப் பல காரணங்கள் உண்டு. ஆஸ்துமா மற்ற நோயினாலும் வருவதுண்டு. இருதய ஆஸ்துமா என்பது இருதயக் கோளாறினால் வருவது. குண்டிக்காய் ஆஸ்துமா என்பது குண்டிக்காய் கெடுவதால் வருவது. இவர்களுக்கு இருதயத்தைச் சுகமாக்கி விட்டால் ஆஸ்துமா நின்றுவிடும். குண்டிக்காயைச் சுகமாக்கி விட்டால் ஆஸ்துமா நின்றுவிடும். சிலருக்கு உடம்பு நமைச்சல் சொறி போல இருக்கும். அதைப் போக்கி விட்டால் ஆஸ்துமா நின்றுவிடும். ஆனால் நுரைசரல் சம்பந்தப்பட்ட ஆஸ்துமா நுரைசரலிலிருக்கும் காற்றுக் குழாயின் தசை நார்கள் சுகப்பட்டால்தான் ஆஸ்துமா விலகும்.

இந்தத் தசை நார்களின் இறுக்கம் பலருக்குப் பல காரணங்களால் உண்டாவதுண்டு. சிலருக்குச் சில வாசனை பிடிக்காது. அந்த வாசனை யடித்தால் காற்றுக் குழாய்களின் தசை இறுகி ஆஸ்துமா வந்து விடும். சிலருக்குப் பூனை வாசனை ஆகாது. சிலருக்கு நாய் வாசனை பிடிக்காது. சிலருக்குக் குதிரை வாசனை வந்தால் மூச்சு முட்டத் துவங்கி விடும். சிலருக்குப் பூக்களின் வாசனை பிடிக்காது. சிலருக்குப் பூக்களின் மகரந்தப் பொடி வாசனை பிடிக்காது. சிலருக்கு ஒரு பருவத்தில் சில பூக்கள் பூக்கத் தொடங்கினதும் ஆஸ்துமா தொடங்கி விடும். சிலருக்குத் தாளிப்பு வாசனை பிடிக்காது. மிளகாய் கருகல் வாசனை வந்ததும் ஆஸ்துமா வந்துவிடும். சிலருக்கு வீடுகளில் சுவருக்குச் சுண்ணாம்பு பூசினால் ஆகாது. சிலருக்கு வர்ணம் பூசினால் ஆஸ்துமா வந்து விடும்.

சிலருக்கு எண்ணெயினால் சுட்ட ஆகாரம் சாப்பிட்டால் ஆகாது. சிலருக்குக் கடினமான ஆகாரங்களைச் சாப்பிட்டால், சரியாய் ஜீரணமாகாமல் ஆஸ்துமா வந்துவிடும். வயிற்றில் ஆகாரம் ஜீரணமானதும் ஆஸ்துமா குறைந்துவிடும். சிலருக்கு வாயுப் பண்டங்களைச் சாப்பிட்டால் பிடிக்காது. சிலருக்கு இனிப்பு கூடாது. சிலருக்கு மாமிசம் சாப்பிட்டால் ஆஸ்துமா ஆரம்பித்து விடும். சிலருக்குப் பால் பிடிக்காது. சிலருக்குத் தயிர் மோர் பிடிக்காது. இம்மாதிரி பல ஆஸ்துமா வரக் காரணமாய் இருக்கும்.

மலச் சிக்கல் ஏற்பட்டாலும் ஆஸ்துமா வரும். சிலருக்கு மிளகாய், மிளகு, கடுகு, மசாலை போன்ற கார வஸ்துக்கள் சாப்பிட்டால் ஆஸ்துமா வந்து விடும். சிலருக்குப் பழங்கள் பிடிக்காது. சிலருக்கு, உடலுக்கு எது நல்லதோ அதெல்லாம் பிடிக்காது என்று சொல்லுவார்கள்.

வீட்டுச் சூழ்நிலையும் ஆஸ்துமாவை உண்டாக்கி விடும். வேறு இடங்களுக்குப் போனால் மறைந்து விடும். சிலருக்கு ஊர் மாற்றினால் மறைந்து விடும். சிலருக்குக் கோபம் வந்தால் உடனே ஆஸ்துமாவும் புகைந்து கொண்டு வந்து விடும். கவலையும் ஆஸ்துமாவை உண்டாக்கும். அதிக சிந்தனை சங்கடமான நிலை ஏற்பட்டாலும் ஆஸ்துமா வரும். அருவருப்பு, பகை இவைகளும் ஆஸ்துமாவுக்குக் காரணமாகும்.

சிலருக்குக் குளிர் காலம், பனிக் காலம் துவங்கினதும் ஆஸ்துமாவும் துவங்கி விடும். வெளியில் செல்லப் பயப்படுவார்கள். வீட்டில் எல்லா ஜன்னல்களையும் மூடி அடைத்து கிடப்பர். சிலருக்கு வெய்யில் காலத்திலும் வருவதுண்டு. சிறிது வேர்த்தாலும் வந்து விடும். சிலருக்கு மழை வரும் போல் இருந்தாலும் ஆஸ்துமா வந்து விடும். இவர்களுக்கு ஆஸ்துமா வந்ததை அறிந்து, சரி மழை வரப் போகிறதுபோல் இருக்கிறது என்று காலமானியைக் கண்டு கணிப்பதுபோல் கணிக்கலாம். சிலருக்கு எண்ணெய் ஸ்நானமே ஆகாது. வருடக் கணக்காய் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் பண்ணாமல் இருப்பார்கள். எண்ணெய் ஸ்நானம் செய்தால் உடனே ஆஸ்துமா வந்து விடும். சிலருக்குக் குளிர்ந்த ஜலம் குடித்தால் ஆஸ்துமா வந்து விடும். ஆகையால் வெந்நீரையே குடிப்பார்கள். உடம்பில் ஜலம் விட்டால் ஆஸ்துமா வரும் என்று உடம்பு கூடக் கழுவாமல் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். இவர்கள் அவ்வப்போது ஈரத் துணியைப் போட்டு உடம்பைத் துடைத்துக் கொள்ளுவார்கள்.

ஆஸ்துமா வர ஒரு காரணமல்ல; இரண்டு காரணமல்ல. தொட்ட தொட்ட காரியங்கள் பொருள்கள் எல்லாம் காரணமாக இருக்கும். இவ்வளவும் வழக்கமாய் ஆஸ்துமா நோய் வந்தவர்களுக்கே யாகும்.

இவர்களைக் குணப்படுத்த வேண்டுமானால் ஆஸ்துமாவுக்கு எது காரணம் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டியது சிகிச்சை அளிப்போரின் கடமை என்று வைத்திய சாஸ்திரம் சொல்லுகிறது. அப்படிக் கண்டு பிடித்து அதை நீக்கி விட்டால் ஆஸ்துமா வராது என்று சொல்லுகிறது.

ஆம் உண்மைதான். எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? ஆஸ்துமாக்காரர்களின் வரலாற்றை அறிய வேண்டும். அப்பொழுது சிலர் தாங்களாகவே சொல்லுவார்கள், எனக்கு எண்ணெய் ஸ்நானம் பிடிக்காது; பால் பிடிக்காது; வாழைக்காய் பிடிக்காது; நாய் வாசனை பிடிக்காது என்று. சாப்பிடும் வஸ்துக்களானால் அதைச் சாப்பிட வேண்டாமென்று சொல்லி விடலாம். சரி, எண்ணெய் ஸ்நானத்தைக்கூட வேண்டாம் என்று சொல்லலாம். நாய், பூனை, குதிரை, பசு போன்ற வாசனைகளை எப்படித் தடுக்க முடியும்? தெருவில் போகும்போது இம்மாதிரி வாசனைகள் வந்தால் தடை செய்ய முடியுமா? அல்லது வெளியில் போனால்தானே இம்மாதிரி சங்கடங்கள் ஏற்படுகிறது என்று வீட்டிலேயே ஆயுள் பரியந்தம் அடைபட்டிருக்க முடியுமா?

மலச்சிக்கல், அஜீரணம், மந்தம் முதலியவைகளால் ஆஸ்துமா வருவதாய் இருந்தால் இதை வராமல் பார்த்துக் கொள்ளலாம். சீதோஷ்ண

நிலையை மாறுபடாமல் தடை செய்ய முடியுமா? குளிர் காலத்தில் வீட்டில் அடைந்து கிடக்க வேண்டியதுதான். சரி, குளிர் காலத்தில் கம்பளி, பனியன் போட்டு வீட்டில் அடைந்து கிடக்கலாமென்றால் வெய்யில் காலத்தில் என்ன செய்வது? வியர்க்கத்தானே செய்யும்! ஒருகால் நவீன வசதிகள் படைத்த குளிர்க் காற்று அறையாக இருந்தால் நல்லதுதான். எல்லாருக்கும் முடியுமா?

சரி. இவ்வளவுக்கும் பாதுகாப்பு அளிக்கலாமென்றாலும், வாழ்க்கையில் எழும் கோப தாப உணர்ச்சிகளை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்? ஒருவருக்கு மனக் கவலையால் ஆஸ்துமா வந்து விட்டது. அந்த மனக் கவலை வியாபாரத்தில் பெரும் நஷ்டத்தால் வந்ததாய் இருக்கலாம். நெருங்கிய பந்து இறந்ததால் வந்ததாய் இருக்கலாம். குடும்பம் பெருகித் தன்னால் சமாளிக்க முடியாத நிலைமையால் இருக்கலாம். வேலையில்லாத திண்டாட்டத்தினால் இருக்கலாம். பிள்ளைப் பேறு இல்லையே என்று இருக்கலாம். தனக்குத் தகுந்த மனைவியோ புருஷனோ வாய்க்கவில்லையே என்று இருக்கலாம். இம்மாதிரி சொந்த விஷயங்கள் பல இருக்கலாம். இந்தக் கவலைகளைப் போக்கினால்தான் ஆஸ்துமாவும் போகும். இதற்கு மருந்தும் வைத்தியர்களும் என்ன செய்வார்கள்!

கவலையைப் போக்க, மனக் குறையைப் போக்க மருந்து இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் யோக மார்க்கத்தில் மருந்து உண்டு. அதிலும் யோகாசனங்கள், பிராணயாமம், தியானத்தில் கட்டாயம் மருந்துண்டு. இவைகளைப் பயில்பவர் கவலை மனக் குறையிலிருந்து விடுபடுவார்கள். அவ்வாறு விடுதலை அளிக்கும் மனோ திடம் வலிமை உண்டாக்கி விடும். இது சிலருக்கு விளையாட்டாகவும் தோன்றும். ஆனால் உண்மை என்னமோ யோக வழிதான். அப்படிச் சந்தேகப் படுபவர்கள் யோகாசனங்களைச் செய்து பார்க்கட்டும்; சிந்தை தெளிவார்கள்.

ஆனால் நஷ்டமடைந்தவருக்கு லாபத்தையோ, வேலை இல்லாதவர்களுக்கு வேலையையோ தகுந்த துணையையோ யாரும், எதுவும் தேடித் தர முடியாது. ஆனால் யோக சாதகர்களினால், இம்மாதிரி நஷ்டங்களைத் தாங்கும் மனோபலத்தை உண்டாக்கிக் கொள்ள முடியும். ஆஸ்துமாவைப் போக்க அதுவே போதுமே!

சிலர் ஆஸ்பத்திரிக்குப் போனால் ஆஸ்துமா நின்று விடுகிறது. மருந்தென்று வெறும் ஜலத்தை ஊசிமூலம் குத்தினாலும் ஆஸ்துமா நின்று விடுகிறது. எனவே, இது மனத்தைப் பொருத்த ஆஸ்துமா நோய் ஆகிறது.

சிலருக்கு எந்தக் காரணத்தினால் ஆஸ்துமா வருகிறதென்று கண்டு பிடிக்க முடியாது. எந்த ஆகாரம் ஒத்துக் கொள்ளவில்லை என்று தெரியாது. அவர்கள் ஒவ்வொரு வஸ்துவாய் நாள் கணக்கில் சாப்பிட்டுப் பார்த்தால்தான் தெரியும். தயிர் பிடிக்கவில்லை என்று அறிய, நிறைய பல தடவை தயிரைப்ப உபயோகித்துப் பார்க்க வேண்டும். பிடித்தால் அது காரணமல்லவென்று அறிய வேண்டும். பால் கொடுத்துப் பார்க்க வேண்டும். இப்படியே பல ஆகாரங்களைக் கொடுத்து, எது கொடுத்தால் ஆஸ்துமா உண்டாகிறதோ அதை நிறுத்த வேண்டும்.

எனவே, ஆஸ்துமா உண்டாகக் காரணம், வெளிக் காரணங்களோ, உள் காரணமோ என்று நிர்மானமாகிறது. இக் காரணங்கள் உடலைத் தாக்க வெகு சூட்சமமாய் அமைந்திருக்கும் சுவாசக் குழாயின் தசைகள் அதிர்ச்சி யுறுகின்றன;

உறுத்தப்படுகின்றன. அதனால் அத் தசைகள் சுருங்குகின்றன. அதனால் மூச்சு விடவும், வாங்கவும் ஆஸ்துமாக்காரர்கள் கஷ்டப்படுகிறார்கள். இந்த அதிர்ச்சியும் உறுத்தலும் சளியைக்கூட உற்பத்தி செய்து விடுகின்றன. இதைத்தான் ஆஸ்துமா என்கிறோம்.

இந்த ஆஸ்துமா எல்லோருக்கும் வருவதில்லை. இந்த நோயைப் பரப்பக் கிருமிகள் கிடையாது. எனவே இது தொத்து நோயுமல்ல. ஒருவருக்கு வந்தால் அதனால் பலருக்குத் தொற்றி விடும் என்று சொல்ல முடியாது. பரம்பரை நோய் என்றும் சொல்லுவதற்கில்லை. தாய் வழியோ தகப்பன் வழியோ ஆஸ்துமா யாருக்கும் இல்லாமல் இருக்கும் பிள்ளைகளுக்கு வருகிறது. தாய்க்கு இருக்கிறது; ஆனால் பிள்ளைகளுக்கு வருவதில்லை. தகப்பனுக்குப் பயங்கர ஆஸ்துமா இருக்கிறது; பிள்ளைகளுக்கு வருவதில்லை. மனைவிக்கு இருக்கிறது; கணவனுக்கு வருவதில்லை.

எனவே இந்த ஆஸ்துமா நோய் வர அடிப்படைக் காரணம் என்னவென்று மிகக் கஷ்டப்பட்டுக் கண்டு பிடித்தார்கள். சுவாசக் குழாய்களின் தசைகளை ஆளும் 'வேகஸ்' என்னும் சக்தியின் குறைபாடே ஆஸ்துமாவுக்குக் காரணம் என்பதை அறிந்தார்கள். ஆனால் வேகஸ் சக்தி நம் இஷ்டத்துக்குக் கட்டுப்படுத்தக் கூடியதல்ல என்பது மேல்நாட்டு விஞ்ஞானிகளின் முடிவு. எப்படி இருதயம் போன்ற உறுப்புகளை நம் இஷ்டத்துக்குக் கட்டுப் படுத்த முடியாதோ, அதைப் போல வேகஸ் எனும் சக்தியையும் கட்டுப்படுத்த முடியாது என்று முடிவு கட்டி விட்டார்கள். அதனால்தான் ஆஸ்துமா நோய்க்கு மருந்து கிடையாது என்று சொல்கிறார்கள்.

அப்படியானால், கணக்கற்ற மருந்து வகைகள் இருக்கின்றனவே, அவை உபயோகித்தால் சாந்தி ஏற்படுகிறதே எனலாம். தற்கால சாந்தி ஏற்படுமே தவிர, நிரந்தர குணம் ஏற்படும் என்று சொல்லுவதற்கில்லை யல்லவா! இதற்கு எத்தனையோ வித வைத்தியங்கள். அலோபதி என்ன, அதில் மாத்திரைகள், ஊசி மருந்துகள், ஹோமியோபதி, ஆயுர்வேதம், சித்த யூனானி முதல் எத்தனையோ மருந்துகள் இருக்கின்றன. எல்லாம் நுரை ஈரலைச் சூடுண்டாக்கி அதிலிருந்து கபத்தைக் கலைத்துத் தாற்றிச் சாந்தியளிக்கும். நீண்ட நாள் உபயோகித்தால் சில மாதங்கள் ஆஸ்துமா வராமல் இருக்கும்.

வேகஸின் சக்தி எந்த மருந்துக்கும் கட்டுப்படாதது தான். ஆனால் யோக சக்திக்குக் கட்டுப்படும். கட்டுப்பட்டுத்தான் தீரவேண்டும். இருதயத்தை நம் இஷ்டமாய் நிறுத்த முடியாது என்று சொல்லுகிறார்கள். ஆனால் நமது யோகிகள் இருதயத்தைப் பல மணி நேரம் நிறுத்திக் காட்டுகிறார்கள். பல மணி என்ன, பல நாள்கூட பூமியில் மண் அடியில் புதைந்திருந்து வெளி வருகிறார்களல்லவா! இவைகளெல்லாம் பெரிய சாதனைகள். இன்றைக்கு நம் பாரத நாட்டில் இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அப்படியிருக்க வேகஸின் சக்தியை ஆட்சி கொள்வது யோகக் கலைக்குப் பெரிய காரியமில்லை. ஒரு சிறு பிள்ளை விளையாட்டைப் போன்றது. சில நாள், ஒரு சில மணி நேரம் இதற்காகச் செலவு செய்தால் இந்த வேகஸ் நமக்குக் கட்டுப்பட்டு வருவதை அறியலாம். சில மாதங்கள் செய்தால், இந்த நோயை முற்றிலும் வென்று விடலாம். யோகக் கலையை அறியாத வைத்தியத்துக்கு இது ஒரு புதுமை. ஆனால் நமக்கு மிகப் பழமையானது. (தொடரும்)

## காதலும் மோதலும்!





# கல்யாணி

யசோதரன்

அன்று காலையிலேயே பல் துலக்கி, உடை மாற்றி, மனைவி பரிவுடன் கொடுத்த சூடான காப்பி அருந்தி, காரியாலய வேலைக்குக் கிளம்பி விட்டேன். ஒரு மைல் தூரம் போக வேண்டும்.

மணியோசை கேட்டது. கோயில் மணிதான்.

நான் நடந்தேன்; நடந்து கொண்டே இருந்தேன். மணியோசை தொடர்ந்து காதில் விழுந்தது; விழுந்து கொண்டேயிருந்தது.

கோயிலை நெருங்கி வந்து விட்டேன். சிவன் கோயில். இதைத் தாண்டித்தான் என் காரியாலயத்துக்குப் போக வேண்டும்.

அன்றைக்கு முதல் நாள் வரை எனக்கு இந்த வழியில்லை. வேறு தெருவில் குடியிருந்தேன்.

கோயிலின் வாயிலை அணுகினேன். தீபங்கள் பொருத்திக் கோயில் ஜோதிப் பிழம்பாய்த் திகழ்ந்தது. உடலிலும் உள்ளத்திலும் ஒரே பக்திப் பரவசம். ஒரு நிமிஷம் அங்கே நின்றேன்.

அது என்ன! வெள்ளை உருவம்! நாய்! அது ஏன் அங்கு வந்து நிற்கிறது! கோயிலின் மூல பீடத்தைப் பார்த்தவண்ணம் நிற்கிறதே. சுவாமி தரிசனத்துக்குக் காத்துக் கொண்டு நிற்கிறதா!

அந்த நாயைக் கவனிக்க ஆர்வம் என்னுள்ளே துளிர்த்து எழுந்தது. வந்த காரியம் மறந்து சற்று நேரம் அங்கு நின்று விட்டேன். அதன்மீது விழுந்த கண் பார்வை அகலவில்லை.

அதன் குழி விழுந்த கண்களிலே ஏதோ ஒரு ஆவல் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது. அதனுள்ளே வேரோடிப் போயிருந்த ஏதோ ஒரு நம்பிக்கை அதை அங்கே கொண்டு வந்து நிறுத்தியிருக்க வேண்டும். எனக்கு எதுவும் விளங்கவில்லை. இந்தப் புதிர் விடுபடும் வரையில் அங்கேயே நின்று நாயின் செய்கைகளைக் கவனிக்கவும் என்னால் முடியாது. காரியாலய வேலையும், அது போதித்த கடமை யுணர்ச்சியும் அங்கிருந்து என்னை விரட்டி அடித்தன.

நின்ற நேரத்தைச் சரிக்கட்ட காரியாலயத்தை நோக்கி ஓடினேன்; ஓட வேண்டியதாயிற்று.

மணி பத்து; என்னைப் பொறுத்த வரையில் காலை வேலை முடிந்தது. அடுத்தது மத்தியானம் இரண்டரை மணிக்குத்தான். கொஞ்சம் அவகாச முண்டு. வீட்டை நோக்கி நடந்தேன்.

சிவன் கோயிலின் வாயிலில் நாய் இல்லை. அந்த நாயை மறுபடியும் காண முடியவில்லையே என்ற ஏக்கம்; நடந்தேன்.

என்ன ஆச்சரியம்! அதே வெள்ளை நாய்! என் வீட்டின் முன்பு நின்று கொண்டிருந்தது.

காலையில் அதனிடத்து நான் காட்டிய அக்கறையை அது புரிந்து கொண்டு விட்டதா! என் வீடு எப்படித் தெரிந்தது!

இதுவும் விளங்கவில்லை. மற்றொரு புதிரா!

திண்ணையில் உட்கார்ந்தேன். நாய் என்னுடைய வீட்டு வாசலில் ஏக்கத்துடன் நின்றது.

இனம் காண முடியாத ஒரு ஏமாற்றத்தின் உருவாய் அந்த நாய் இருந்தது. அதன் அழகு எங்கோ ஓடி ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். இளமையுமில்லை. நல்ல கிழம் அது. ஆனால் ஏதோ ஒரு ஆர்வம் அதன் முகத்தில் பளிச்சிட்டது.

அதன் ஏமாற்றப் பார்வையை நன்கு உணர்ந்தேன். கோயில் வாயிலில் பார்த்த அதே தோற்றம்தான் இங்கும். துளியும் வேறுபாடில்லை. அந்த நாய் இங்கேயும் வந்து தேடுகிறதா! அப்படி யாரைத் தான் தேடுகிறது!

"கல்யாணி! கல்யாணி!" என்று யாரோ ஐந்தாறு வீடுகளுக்கு அப்பாலிருந்து கூப்பிட்டார்கள். நாய் வாலைக் குழைத்தது. அதே சமயம் அதன் முகத்தில் மகிழ்ச்சியின் தாண்டவம். என் வீட்டை ஒரு கணம் கூர்ந்து நோக்கியது. என்னதான் நினைத்ததோ! குரல் வந்த திசையில் ஓடிற்று; துள்ளிக் குதித்துப் பாய்ந்து ஓடியது.

"கல்யாணி!" இந்த அழகான பெயர் அதனுடையதுதானா! இப்படி அருமையாகச் செல்லப் பெயரிட்டு அதை வளர்ப்பவர் யாரோ! இதை அறிய மனம் துடித்தது. ஆவல் அதிகரித்தது.

அன்றுதான் எனக்கு அந்தத் தெருவில் முதல் வாசம். அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் யாருமே

எனக்கு அறிமுகமாகவில்லை. இதற்கு முன்பே எனக்குக் கல்யாணி அறிமுகமாகி விட்டாள். என்ன ஆச்சரியம்!

* * *

அன்று மாலை மணி ஏழு. காரியாலயம் விட்டு வீட்டுக்குத் திரும்பி வருகிறேன். கோயில் மணியோசை இன்னிசையின் காதத்தை எழுப்பிய வண்ண மிருக்கிறது.

சிவன் கோயில் சன்னதி தெரிகிறது. வாயிலில் அந்த நாய் — கல்யாணிதான் — ஏக்கப் பார்வை யுடன் நிற்கிறது. கோயில் மணியோசை கேட்கும்போதெல்லாம் இது கோயிலுக்கு வந்து விடும் போலும்.

மணியோசை ஓய்ந்தது. கல்யாணி அங் கிருந்து ஓடினாள். எங்கு ஓடுகிறாளோ! யாரைத் தேடி ஓடுகிறாளோ!

நானும் அங்கே இருந்து நகர்ந்தேன்: வீட்டை நோக்கி நடையைப் போட்டேன்.

மறுபடியும் கல்யாணி என் வீட்டு வாச லில் தன் வாலை ஆட்டியவாறு ஏக்கத் துடன் நின்று கொண்டிருந்தது.

அதனிடம் அன்பு துளிர்த்தெழுந்தது. "கல்யாணி! கல்யாணி!" வாய் நிறையச் சொல்லியழைத்தேன். அது வாலையாட்டிக் கொண்டே என்னருகில் ஓடி வந்தது. அதன் உடலை அன்பாகத் தடவிக் கொடுத்தேன். கல்யாணி என் காலடியில் குழைந்து கொண்டு படுத்து விட்டது.

மனைவியை அழைத்தேன். கல்யாணியை அவளுக்கு அறிமுகப்படுத்தினேன். அவள் கல்யாணியைப் பார்த்தாள். அதனிடம் அன்பு சுரந்தது; பரிவு ஏற்பட்டது.

மோரும் சோறும் கலந்து பிசைந்து, ஒரு இலையில் கொண்டு வந்து வைத்தாள்.



கல்யாணி பிரியத்தோடு உண்டது. பசியடங் கிற்றோ என்னவோ! இலை காலியாகிவிட்டது.

அதற்குள், "கல்யாணி! கல்யாணி!" என்று யாரோ அதைக் கூப்பிட்டார்கள். அது தெருவில் இறங்கித் துள்ளிக் குதித்து ஓடியது.

* * *

இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு என்னுடைய அறையில் வந்து உட்கார்ந்தேன்.

மனைவி வேலையை முடித்து விட்டு வெளியே வந்திருக்கிறாள். அவளுக்காகக் காத்திருந்தது போல், பக்கத்து வீட்டு அம்மாள், அவளிடம் வந்து விட்டாள். புதியவளிடம் பேச்சுக் கொடுத்து. சிநேகிதம் பிடிக்க வந்திருக்க வேண் டும். அந்த அம்மாளுக்கு வயசு ஐம்பதிருக்கும்.

எதை எதையோ பற்றி இருவருடைய பேச்சும் போயிற்று. 'கல கல' வென்று வாய் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"கல்யாணி!" அந்த அம்மாளின் குரல்தான். நாய் வந்திருக்க வேண்டும். எட்டிப் பார்த்தேன். அது வாயிற்படி யேறி அந்த அம்மாள் அருகில் வந்து நின்று கொண்டிருந்தது.

"இந்த நாயைப் பார்த்தீர்களா! இது உங்கள் வீட்டண்டை வந்து பழியாய்க் கிடக்கும். இப் போது கூட இங்கே வந்து நிற்கிறது, பாருங்கள். கல்யாணி! இந்தப் பெயர் அவர்கள் வைத்தது தான். அவர்கள் இந்த வீட்டில் குடியிருந்தார்கள்.

"இது இங்கே எவ்வளவு அருமை பெருமை யாக வளர்ந்தது தெரியுமா! பாலும் சாதமும், கறியுமாகத் தின்று வளர்ந்தது. இது அவர்களுக் குச் செல்லப் பிள்ளைமாதிரி. 'கல்யாணி, கல்யாணி' என்று இதை அரை நிமிஷமும் விட்டுப் பிரிய மாட்டார்கள். அவர் போகுமிடமெல்லாம் கல் யாணியும் கூடவே போகும். அவருக்கு முன்னே சில சமயம் ஓடும்; பின்னே சில சமயம் போகும்; அவரோடு சேர்ந்தும் போகும்.

"கடைசியில் இதன் விதியைப் பாருங்கள். இது அநாதையாக, மற்றத் தெரு நாய்களைப் போல ஆகி விட்டது. ஆதரவை இழந்து நிற்கிறது. இதற்குத் தெருவில் இருப்பவர்கள் வேளா வேளைக்குக் கூப்பிட்டுச் சாதம் போடுகிறார்கள். என்னதான் பசி வேளைக்குச் சோறு கிடைத்தா லும், இதற்குக் கிடைத்து வந்த அந்த 'அன்பு' இல்லை பாருங்கள். அவர்களைப் பற்றிய ஏக்கம் இதன் உருவைக் குலைத்துக் கொண்டே வருகிறது.

"அதோ அவர் வந்து விட்டார். சாப்பாடு போட வேண்டும். நாளைக்குச் சாவகாசமாக வந்து விவரமாகச் சொல்லுகிறேன்."

பேச்சு நின்று விட்டது. வெளியில் போய்த் திரும்பி வந்த கணவருக்கு உபசாரணை செய்ய அந்த அம்மாள் எழுந்து போய் விட்டாள்.

கல்யாணியைப் பற்றிய மீதி வரலாற்றை அறிய முடியவில்லை. என்ன ஏமாற்றம்!

அன்று இரவு வெகு நேரம் எனக்கு உறக்கம் கொள்ளவில்லை. கல்யாணி என் வீட்டின் முன்

நிற்பதின் காரணம் கொஞ்சம் புரிந்தது. கோயில் வாயிலில் ஏன் போய் ஏக்கத்துடன் நிற்கிறது! அந்த அவர்கள் யார்! அவர்தான் யார்!

மறு நாள் அதிகாலையில், சிவன் கோயிலில் கல்யாணியைப் பார்த்தேன். பத்து மணிக்கு வீடு திரும்பியபோதும் அதைப் பார்த்தேன்.

"கல்யாணி!" என்று அழைத்தேன். நாய் என்னை நோக்கி வேகமாக ஓடி வந்தது.

அதே சமயம் இன்னொரு பக்கத்து வீட்டுக்காரர் வெளியில் வந்தார். அவராகவே பேச்சை ஆரம்பித்தார். இல்லாவிடில் நான் அவருடன் பேசியிருப்பேனா என்பது சந்தேகம்தான்.

"நல்ல நாய், ஸார்! இந்தக் கல்யாணி! இது இந்த வீட்டுக்கு வருவது போல், வேறு எங்கும் அவ்வளவு உரிமையோடு போகாது. நீங்களாக இருப்பதினால் அழைத்து அன்போடு பழகுகிறீர்கள். உங்களுக்கு முன்பு ஒருத்தர் இங்கு குடியிருந்தார். ஒரே முசுடு. பேய்க் குணம், இரக்கமற்ற நெஞ்சம் என்றுதான் சொல்ல வேண்டும். கல்யாணியைக் கழி கொண்டு அடித்துத் துரத்தி விடுவார். இந்த வீட்டுப் பக்கம் வராமல் சதா விரட்டிக் கொண்டே இருப்பார்.



"அவர் என்னதான் விரட்டினாலும் இந்த நாய் மட்டும் இங்கே வராமல் இருப்பதில்லை; வந்து நிற்காமல் இருப்பதில்லை; திண்ணையில் போய்ப் படுத்துக் கொள்ளாமல் இருப்பதில்லை" என்றார்.

"இது யார் வளர்த்த நாய்! அவர்கள் இப்போது எங்கே!" என்று ஆவலுடன் கேட்டேன்.

பக்கத்து வீட்டுக்காரரும் சிறிதும் அலுத்துக் கொள்ளாமல் பதில் சொன்னார்.

"இந்த வீட்டில் ஒருத்தர் இருந்தார். அவருக்கு வயசு அறுபது இருக்கும். நல்ல மனிதர்; தங்கமான சுபாவம்; வெள்ளை மனசு; இரங்கும் தன்மை; அன்புப் பார்வை. இப்படி அவரைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம்.

"இத்தனைக்கும் அவர் வெளியூர் ஆசாமி. சொத்து நிறைய உடையவர் என்றார்கள். ஓய்வு ஊதியம் நிறைய வந்தது. பெரிய பதவியில் இருந்தவர் போல் தோன்றியது. தன் ஒரே மகனிடம் தோன்றிய அபிப்பிராய பேதம் காரணமாகத் தன் சொத்து எல்லாவற்றையும் அவனிடம் ஒப்படைத்து, ஓய்வு ஊதியத்தை மட்டும் நம்பி, அஞ்ஞாத வாசத்தை மேற்கொண்டவர் போன்று இங்கு வந்து விட்டார். அவர் வரும்போது இந்த நாயைக் கொண்டு வந்தார். அப்போது குட்டிதான். ஆனால் நல்ல அழகு. கண்ணைப் பறிக்கும் கவர்ச்சி. வனப்பு மிக்க உடற் கட்டு. 'கல்யாணி' என்று அன்போடு அழைப்பார்.

"ஐந்தே ஐந்து வருஷங்கள்தாம் அவர் இங்கு இருந்தார். ஒரு நாள் கூடச் சொந்த ஊர் என்று போகவில்லை. வேறு எங்கும் போகவில்லை. மகன் அடிக்கடி வந்து கூப்பிட்டுப் பார்த்தான். கடிதத்துக்கு மேல் கடிதங்களாக எழுதினான். கிழவர் ஒன்றுக்கும் மசிந்து கொடுக்கவில்லை.

"மனைவியும் அவருமாக இருந்த இந்தத் தனித்த அந்நிய வாழ்வில் அவருக்கு இணை பிரியாத தோழன் இந்த நாய் கல்யாணிதான். இதுவே உறவுக்கு உறவு; துணைக்குத் துணை; மகனுக்கு மகன். எல்லாமே இதுதான். இதனிடம் அவர் இன்பம் கண்டார். எங்கு சென்றாலும் இதை அழைத்துச் செல்ல அவர் தவறுவதில்லை.

"அவர் நல்ல பக்திமான். காலையிலும் மாலையிலும் சிவன் கோயிலுக்குப் போகாமல் இருக்க மாட்டார். அப்பொழுது கூடக் கல்யாணி அவரோடு போகாமல் இருக்காது. ஆனால் கோயிலுக்கு வெளியே வாயிலில் தங்கி நின்று, அவர் திரும்பும் வரை காத்திருக்கும். இதுவே ஒரு அதிசயம். இதைவிட இன்னொரு அதிசயம், தன் எசமானரைத் தேடி, இங்கு வந்து நிற்பதும், கோயிலுக்கு அந்தந்த வேளைகளில் போய்ப் பார்த்து, ஏமாற்றத்தோடு திரும்புகிறதுமாக ஒரு வழக்கத்தைக் கொண்டாடுகிறதுதான். ஏதோ ஒரு நம்பிக்கை அதை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது. என்றாகிலும் ஒரு காலைக்கு, எங்காகிலும் ஓர் இடத்தில் அவர் தென்படமாட்டாரா என்று அலைந்து, திரிந்து கொண்டிருக்கிறது. பாவம்! இதன் நம்பிக்கை வீண்போகிறது."

"அவர் இப்போது எங்கு போனார்! இனிமேல் வரவே மாட்டாரா!"

"வர மாட்டார்! வர முடியாது. அவர் இந்த உலகிலேயே இல்லை. ஒரு நாள் உடம்பு மிகவும் பலஹீனமாக இருக்கிறது என்று படுத்தார். பிறகு எழுந்திருக்கவில்லை. இதயத் துடிப்பு பட்டென்று நின்று விட்டது. மகனுக்குத் தந்தி போயிற்று. ஓடி வந்தான். கருமம் செய்தான். எல்லாம் முடிந்து, இருந்த எல்லாவற்றையும் மூட்டை கட்டிக்கொண்டு, தாயையும் ஊருக்கு அழைத்துக் கொண்டு போனான். ஆனால் கல்யாணியை அவன் அழைத்துக் கொள்ளவில்லை.

"கல்யாணி அவர்கள் கூடவே ஓடிற்று; ரயில் நிலையம் வரையில்தான் அதுவும் முடிந்தது. அவர்களை ஏற்றிச் சென்ற ரயில் வண்டி, இதை அவர்களிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்து விட்டது. இரண்டு வருஷங்கள் ஆகின்றன. இங்குமங்குமாக இப்படி அலைகிறது, இந்த நாய்."

பக்கத்து வீட்டுப் புது நண்பர் சொல்வதை எல்லாம் சொல்லி முடித்தார். கல்யாணியைப் பற்றி நான் எதை எதை அறிய வேண்டுமென்று விழைந்தேனோ, அதை அவர் சொல்லி விட்டார்.

புதிர் நீங்கியதில் எனக்கு ஒரு திருப்தி.

எனக்கு முன்னிருந்த யாரோ ஒருவர் தெரியாத்தனமாய் விரட்டியடித்ததைப் போல் நான் ஏன் செய்யப் போகிறேன்! கல்யாணிக்கு எல்லா உரிமைகளையும் நான் வழங்கினேன். வேளா வேளைக்குச் சோறு போட்டேன். ஆனால் என்ன செய்தும் அதன் உள்ளக் குறை நீங்கினதாகத் தெரியவில்லை. கல்யாணி தன் எசமானரைத் தேடிக் கொண்டுதான் வருகிறது.

** ** **

ஒரு மாதத்துக்குப் பின்னால் நடந்த நிகழ்ச்சி கல்யாணியை என்னிடமிருந்தே பிரித்து விட்டது.

காலை வேலை முடிந்து அன்று வழக்கம்போலவே வீடு திரும்பினேன். வந்ததும் வீட்டருகில் காத்திருந்த கல்யாணியுடன் சிறிது நேரம் விளையாடி மகிழ்ந்தேன். பிறகு அதைத் திண்ணையில் படுக்க விட்டு, என் அலுவல்களைக் கவனிக்க உள்ளே சென்றேன். ஒரு மணி வரையில் நான் வெளியில் வரவில்லை; வர முடியவில்லை.

தெருவில் சந்தடி கேட்டு ஓடி வந்தேன். அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் அதட்டினார்கள். சத்தம் கொஞ்சம் அதிகமாகவே இருந்தது.

கல்யாணி ஒரு சிறு நாய்க்குட்டியைக் கடித்துக் குதறித் தள்ளி விட்டிருந்தது. அதனிடம் அப்பொழுது ஏதோ ஒரு அசாத்திய வெறிக்குணம் தான் மிகுந்து காணப்பட்டிருந்தது. பார்த்தவர்கள் அஞ்சி ஒதுங்கி அப்பாலேயே நின்று கொண்டிருந்தார்கள். அந்தப் பச்சிளம் குட்டியை அந்த முரட்டு நாயிடமிருந்து மீட்பதற்கு அப்பொழுது எவருமே துணியவில்லை.

நான் கல்யாணி அருகில் ஓடினேன். அப்போது கல்யாணி உறுமிய உறுமலையும், பார்த்த பார்வையையும் இப்பொழுது நினைத்தாலும் அச்சம் தட்டுகிறது. அவ்வளவு கொடூரம் அதன் முகத்தில் இருந்தது. எங்கே என்மீது பாய்ந்துவிடுமோ என்ற உள்ளூறப் பயம்தான். கோபம் தணிந்து வரட்டும் என்று அதை விரட்டி விட்டேன்.

கல்யாணியின் உள்ளத்தின் உள்ளே குமுறி, கொந்தளித்து, குழம்பிக் கிடந்த ஏமாற்ற எரிமலை வெடித்து வெளியில் கிளம்பி, இப்படி ஒரு உருவெடுத்து விட்டதா! தன் எசமானரைக் காண வேண்டுமென்ற பொறுமையை இழந்ததினால் ஏற்பட்ட விளைவுதானா இது! கால நிலை மாறுபாட்டினால் தோன்றிய மூளைக் கோளாறுதானோ!

** ** **

அன்று சாயந்திரம் வீடு திரும்பும்போது, கோயிலருகில் நின்று கொண்டிருக்கும் கல்யாணியைக் காண முடியவில்லை. வீட்டுக்கு வந்தேன்.

என் மனைவி கல்யாணியைப் பற்றிச் சொன்னாள்: "கல்யாணிக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. எல்லாரும் பயந்து கொண்டிருந்தார்கள். நல்லவேளையாக அப்போது நாய் பிடிக்கும் வண்டி வந்தது. கல்யாணியைக் கட்டிப் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள்" என்றாள்.

"அடடா! அந்த நாய்க்குத்தான் எத்தனை நன்றி உணர்ச்சி. அதைப் போல மனிதர்கள் இருக்க மாட்டார்களா!" என்று எண்ணினேன்.

# செம்பியன்மாதேவி

பொன்னி எனப்படும் காவிரி நதியின் புனலால் செந்நெல் வளம் கொழிக்கும் பாக்கியம் பெற்றது சோழ நாடு. அவ்வள நாட்டிலே "கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தில் முன் தோன்றி மூத்த குடி" யாகவும், படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வரும் பழங் குடியினராகவும் போற்றப்படும் சோழ அரசர்களால் கட்டுவிக்கப் பட்ட பெருங் கோயில்கள் பற்பல.

சிவ பக்தியிற் சிறந்த செம்பியன்மாதேவியார் தன் பக்தியின் சின்னமாக நாகையை அடுத்த ஓர் சிற்றூரை விலைக்கு வாங்கி ஸ்ரீ கைலாச நாதருக்கு ஒரு கோயில் எடுப்பித்து அவ்வூருக்கும், கோயிலுக்கும் செம்பியன்மாதேவி என்ற பெயரைச் சூட்டினர் என்பது தென் இந்திய அரசாங்கக் கல்வெட்டு ஆராய்ச்சி இலாகாவினரின் 1925–26 ஆம் ஆண்டு அறிக்கையில் இருந்து தெரிய வருகிறது.

இத் தலம் நாகைக்குத் தென் மேற்கில் சுமார் எட்டு கல் தொலைவில் அமைந்துள்ளது. கீழ்வேளூர் புகைவண்டி நிலையத்திலிருந்து சுமார் ஆறு கல் தொலைவிலும், தேவூர் என்ற பதியிலிருந்து தென் கிழக்கு திசையில் சுமார் மூன்று கல் தொலைவிலும் உள்ளது.

இத் திருக்கோயில் மிக மிகத் தொன்மையான முறையில் காட்சி யளிக்கிறது. கோயிலின் இராச கோபுரம் ஓர் அடுக்கு மட்டும் கட்டப்பட்டுப் பூர்த்தி செய்யப்படாத நிலையில் விடுபட்டுள்ளது. முதல் பிரகாரத்தில் சுப்பிரமணியர், அம்பிகை கோயில்கள் கிழக்கு முகமாக அமைந்துள்ளன.

இரண்டாவது கோபுரம் மூன்று அடுக்குக் கொண்டதாய்ப் பூர்த்தி செய்யப் பட்டுள்ளது. கர்ப்பகிரகத்துக்குப் பின்புறமாக கோஷ்டத்தில் மகாவிஷ்ணு உருவம் அமைக்கப் பெற்றுள்ளது. இத்தலத்திற்கருகில் சோழ வித்தியாபுரம் என்ற புகழ் பெற்ற ஊர் அமைந்துள்ளது.

இந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற கோயிலுக்குப் பற்பல நிவந்தங்களும் ஏற்படுத்தப் பட்டுள்ளன. குந்தவையும் முதலாம் இராச ராசனுடைய மனைவியும், செம்பியன்மாதேவியின் திரு நட்சத்திரமாகிய சித்திரை — கேட்டையில் ஸ்ரீ கைலாச நாதருக்கு நிவேதனம் செய்யப் பல நிவந்தங்களை ஏற்படுத்தி யுள்ளனர். உத்தம சோழர் ஆட்சியில் அன்னாரது மனைவியாராகிய திரிபுவன மாதேவியாரால், தன் மாமியார் செம்பியன் மாதேவியின் திரு நட்சத்திரத்தில் ஸ்ரீ கைலாச நாதருக்கு நிவேதனம் செய்யப் பல நிவந்தங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

மேலும், ஜடாவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி பாண்டியர் காலம் வரையில் இக்கோயிலுக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கிற பல நிவந்தங்கள் பற்றித் தென் இந்தியக் கல்வெட்டு ஆராய்ச்சி இலாக்காவினரின் 1925–26ஆம் ஆண்டு அறிக்கையில் 479–501 வரை உள்ள 22 கல்வெட்டுக்களைப் படி எடுத்துள்ளார்கள். இக் கோயில் செம்பியன் மாதேவியார் காலத்தில் கட்டப்பட்டதாகத் தெரிகிற படியால் இது கி. பி. 985ஆம் ஆண்டுக்கு முன் ஆரம்பிக்கப்பட்டு இராஜ ராஜன், இராஜேந்திரன் முதலியவர்களால் தொடர்ந்து கட்டப் பட்டிருத்தல் வேண்டும். இராஜேந்திரன் காலத்திய கல்வெட்டு ஒன்றில் இடபவாகன தேவருக்கும், செம்பியன்மாதேவி உள்ளிட்ட வேறு சில விக்கிரகங்களுக்கும் நிவேதனத்துக்கு விடப்பட்ட நிலங்களின் வரியை, கிராமப் பெருமக்கள் சபை தள்ளுபடி செய்து விட்டதாகத் தெரிய வருகிறது.

இதைப் பார்க்க, செம்பியன்மாதேவியாருக்கு உருவச்சிலை இருப்பதாகத் தெரிகிறது. அது இப்பொழுது கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் பக்த முறையில் காட்சியளிக்கும் நல்லம்மை என்ற உருவமாக இருத்தல் வேண்டும்.

கோயிலுக்குச் சொந்தமாகச் சுமார் 250 ஏக்கர் நிலங்கள் உள்ளன. அரசர்களால் இனாமாக அளிக்கப்பட்ட இனாம் நிலங்களில் சுமார் நாற்பது ஏக்கர் இனாம் ஒழிப்புச் சட்டத்தால் பாதிக்கப் பட்டிருப்பது மிகவும் வருந்தத் தக்கது.

செம்பியன்மாதேவி
27—3—54 என். கோவிந்




அஜீரணம் வாழ்க்கையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மிஞ்சிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்; சைன்டிபிகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean ''அலெக்ஸ் ஸி. மக்ளீன்'' என்ற உண்மைக் கையெழுத்தும் தக்கபடி அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்.




# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.

**ஒரு டோஸ்**

அஜீரணத்தாலேற்படும் வயிற்று வலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றை சடுதியில் குணப்படுத்தும்.

MBT. 9-TAM



# என்றும் உங்கள் கூட்டாளி

நீங்கள் வெளியே செல்லும் போதும், வீட்டிலே தங்கும்போதும் ஐடியால் உங்களுக்கு க்ஷேமத்தை யளிக்கும் கூட்டாளியாக விளங்கும். நீங்கள் அதை பூர்ண நம்பிக்கையுடன் உபயோகிக்கலாம்.

நோய் நிவாரணி, கிருமி நாசினி, நறுமணத்துடன் கூடியது. விஷக் கலப்பற்றது.




தயாரிப்பாளர் :

தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லேபரட்டரி லிமிடெட்
மல்லேஸ்வரம், பெங்களூர்

ஸேல்ஸ் டிப்போ :

**35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1**

35 TM.




---

"என் தொண்டை ரணத்தினல்
என்னல் விழுங்கவே முடியவில்லை"

ஆனல்

# பெப்ஸ்

அதை சமனமாக்கி குணப்படுத்தியது.



பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும் போதே இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் ஸ்வாஸத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்ப ஸ்தானத்திற்கே நேராகச் சென்று வேலை செய்கின்றன. இதனுல்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும், உலகப் பிரசித்திப் பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன், இன்ப்ளுயன்ஸா மற்றும் ப்ராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.



**PEPS**

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்




எங்கும் கரிய இருள் மண்டிக் கிடந்தது. வானத்தில் நட்சத்திரக் கூட்டத்தையும் காண முடிய வில்லை. ஏதோ மின்சாரக் கோளாறு காரணமாகத் தெரு விளக்குகள் கூடத் தூங்கிக் கொண்டிருந்தன. இரவு பன்னிரண்டு மணிக்கு மேலாகி விட்டதால் அந்தத் தெரு துயிலில் ஆழ்ந்து கிடந்தது.

நல்லசாமி எப்படியோ அந்தப் பங்களாவின் பின் பக்கம் வந்து விட்டான். கொல்லைப் புறத்தின் வீட்டை ஒட்டி வளர்க்கப்பட்டிருந்த இரண்டு வேப்ப மரங்கள் நன்றாக அடர்ந்து தழைத்திருந்தன. மரத்தடியில் அடர்த்தியாகப் பூச்செடிகள் வைக்கப்பட்டு இருந்தன. இதெல்லாம் நல்லசாமி தன்னுடைய வேலையை வெற்றிகரமாகச் செய்வதற்காகவே இறைவனால் படைக்கப் பட்டு இருந்ததோ என்று எண்ணுமாறு அவ்வளவு சௌகரியமாக இருந்தது சூழ்நிலை. அருகில் வந்து பார்த்தால்கூட அவன் இருப்பதை யாரும் கண்டு பிடித்துவிட முடியாது.

முகத்தில் அடர்ந்திருந்த தாடியைத் தடவி விட்டுக் கொண்டு தீட்சண்யம் நிறைந்த கண்களால் அந்த அழகான புது மாடி வீட்டை மேலும்கீழும் நோக்கினான் நல்லசாமி. அவன் கண்களில் ஒளிவிட்ட அந்தக் கோபத் தணலை இருளால் கூட மூடி மறைக்க முடிய வில்லை. இடுப்பில் செருகி யிருந்த நீண்ட கத்தியை ஒரு தடவை தடவிப் பார்த்துக் கொண்டான். பிறகு மீண்டும் ஒரு தடவை வீட்டைக் கண்களால் மேலும் கீழும் பார்த்தான். பக்கத்தில் நின்ற வேப்ப மரத்தையும் பார்த்தான். வேப்ப மரத்தின் கிளை யொன்று மாடியின் கைப் பிடிச் சுவரண்டை ஒதுங்கி நெருங்கி நின்றது. அவனுக்கு நல்ல நம்பிக்கையை அளித்தது. இடுப்பு வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டான். இடுப்பிலிருந்த கத்தியை மறுபடியும் தடவிப் பார்த்து விட்டுக் கொண்டான். அடுத்த கணம் சரசர வென மரத்தின் மீது ஏறத் தொடங்கினான்.

நல்லசாமியை அப்படியே கொஞ்ச நேரம் விட்டு விட்டு அவனுடைய பழைய வரலாற்றைக் கொஞ்சம் கவனித்து விடலாம்.

* * *

ஏழு வருடங்களுக்கு முன்னால் நல்லசாமியும் கண்ணுச்சாமியும் வியாபார முறையில் நெருங்கிய நண்பர்கள். இருவரும் இளைஞர்கள். உயிரும் உடலும் போல அவ்வளவு நெருக்கமாகப் பழகியவர்கள். அவர்கள் இருவருக்கும் இடையே எந்தவித ரகசியமோ நம்பிக்கைக் குறைவோ ஏற்பட வில்லை; ஏற்பட்டதே கிடையாது.

இருவரும் மனிதர்கள்தானே. ஏதாவது குறுக்கு வழியில் பெருத்த அளவில் குறுகிய காலத்தில் பணத்தைப் பார்க்க வேண்டும் என்ற சபலம் இருவர் மனத்திலும் தலை காட்டியது. யோசனை செய்தார்கள். சட்டத்துக்கு விரோதமான சில கருப்புச் சந்தைத் தொழில்களை ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மட்டும் செய்து லட்சக் கணக்கில் பொருளைச் சேர்த்துக் கொண்டு அப்புறம் அந்த வழியை அறவே விட்டு விடுவது என்று தீர்மானித்தார்கள். அதன் படியே தொழில் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருந்தது. பணமும் கணக்கின்றிக் குவியத் தொடங்கிற்று.

பணம் ஏற ஏற மனத்தாலும் நினைக்க இயலாத சில படுபாதகச் செயல்களையும் அவர்கள் செய்யத் தயங்க வில்லை. அரசாங்க அதிகாரிகள் கண்களில் எல்லாம் மண்ணைத் தூவி விட்டு வெகு சாமர்த்தியமாகத் தொழில் நடத்தியும் திடீரென்று ஒரு நாள் மாட்டிக் கொண்டார்கள்.

இவ்வளவு நாட்களாக இருவருக்குள்ளே யிருந்து வந்த ஒற்றுமை மனப் பான்மை ஒரு வினாடியில் பிரிந்து துண்டாகி விட்டது. விஷயம் பிடிபட்டதற்குக் காரணம் நல்லசாமிதான் என்று கண்ணுச்சாமி கருதினான். கண்ணுச்சாமியைப் பற்றி நல்லசாமி சந்தேகப்பட்டான். ஒருவர் மீது குற்றத்தைச் சுமத்தி விட்டு மற்றவர் தப்பித்துக் கொள்ள இருவரும் சதி செய்தனர்.

கண்ணுச்சாமி தந்திரமாக அதிகாரிகளைச் சரிக்கட்டித் தன் சூழ்ச்சியில் வெற்றி கண்டு விட்டான். நல்லசாமி பிடிபட்டுக் கைது செய்யப்பட்டான். கண்ணுச்சாமி ஜாக்கிரதையாக முன்னேற்பாடுகள் செய்து தன் மீது ஒருவித சந்தேகமும் ஏற்படாத வண்ணம் நடந்து கொண்டான். நல்லசாமி மீது நாலைந்து குற்றங்கள் சுமத்தப் பட்டு எல்லாவற்றுக்குமாகச் சேர்ந்து ஏழு வருடங்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டது.



நல்லசாமி தன் தண்டனைக் காலம் முடிவடைந்து இரண்டு நாட்களுக்கு முன்தான் சேலம் சிறையி லிருந்து விடுதலை பெற்றான். அவன் சிறைப்படுவதற்குச் சில மாதங்களுக்கு முன்னதாகத்தான் அவனும் கண்ணுச்சாமியும் கலியாணம் செய்து கொண்டனர். நல்லசாமி சிறை புகும்போது அவன் மனைவி கற்பகம் கர்ப்பிணியாக இருந்தாள்.

ஆதரிப்பாரற்ற கற்பகம் இப்பொழுது உயிருடன் இருப்பாள் என்ற நம்பிக்கை நல்லசாமிக்குத் துளியும் இல்லை. அதைப் பற்றி அவன் கவலையும் படவில்லை. அவனுக்கு இருந்த ஒரே எண்ணம் கண்ணுச்சாமியைப் பழி வாங்க வேண்டும் என்பதுதான். கண்ணுச்சாமியைத் தொலைத்த பின்னர் தனக்குத் தூக்குத் தண்டனை கிடைத்தாலும் பரவாயில்லை. மனைவியை-பெருஞ்செல்வத்தை-நல்ல பெயரை இழந்த பின்னர் இனி உயிர் வாழ்வதால் யாருக்கு என்ன அனுகூலம் என்று அவன் மனம் எண்ண மிட்டது.

ஊருக்கு வந்து சேர்ந்த உடனேயே நல்லசாமி தன் பழி வாங்கும் செயலை ஆரம்பித்தான். அவனைப் பற்றிய நினைவே ஊர் மக்களுக்கு அற்று விட்டிருந்தது. அவன் விடுதலையான செய்தியும் யாருக்கும் தெரியாது. சிறை வாழ்வு அவனை வாட்டி வதக்கி அவன் உருவத்தையே மாற்றி விட்டிருந்தது. முகத்தில் தாடியும் மீசையும் வளர்ந்து பயங்கரமாக இருந்தது.

இந்த இயற்கையான உருவமாற்றம் அவனுக்குப் பெரிதும் துணை புரிந்தது. ஊரில் சர்வ சாதாரணமாக நடமாடியும்கூட யாரும் அவனைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

ஊர் வந்த இரண்டாவது நாள் இரவுதான் நல்லசாமி கண்ணுச்சாமியின் பிரம்மாண்டமான பங்களாவின் பின்புறம் நின்றான். அவனை வஞ்சித்து அவன் வாழும் உயர் வாழ்வின் சின்னமாக நிற்கும் கண்ணுச்சாமியின் அந்த மாளிகையைப் பார்க்கப் பார்க்க அவன் இதயத்தில் ஊறிக் கிடந்த பகைமையுணர்ச்சி



முழு வேகத்தில் கொப்பளித்துப் பாய்ந்தது. அன்றிரவே தன் ஜென்ம வைரி தொலைந்து விடுவான் என்ற நினைவு நல்லசாமிக்கு ஒரு குதூகலத்தையும் எழுச்சியையும் தந்தது.

இனி நல்லசாமியைத் தொடரலாம்.

நல்லசாமி வேப்பமரக் கிளை வழியாக வெகு சுலபமாக அந்த மாடியை அடைந்து விட்டான். அவன் இறங்கிய இடம் சிறு ஆளோடி. அதற்கு அப்பால் பெரிய கூடம் ஒன்று இருப்பது தெரிந்தது. இருள் அதிக மாக இருந்ததால் தெளிவாக ஒன்றும் புரியவில்லை. நிதானித்துப் பார்த்து ஒவ்வொரு இடத்தையும் மெல்லப் புரிந்து கொண்டான். தடவிக் கொண்டே கூடத்தின் பக்கம் வந்து சேர்ந்தான். சற்று நிதானமாக நின்று இருளை ஊடுருவி நன்றாகக் கவனித்தான்.

கூடத்தின் நடுவே கட்டில் ஒன்று இடப் பதை, அதன்மேல் தொங்கிய வெளுப்பான கொசுவலையின் மூலம் புரிந்து கொண்டான். அதில்தான் கண்ணுச்சாமி படுத்திருப்பான் என்று ஊகிக்க அவனுக்கு அதிக நேரமாக வில்லை. விஷயம் சுலபத்தில் முடிந்துவிடும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

நல்லசாமி சிறை புகுந்தபோது கண்ணுச் சாமியின் மனைவியும் கர்ப்பமடைந்திருந்தாள். அந்த நினைவு இப்பொழுது நல்லசாமிக்கு உண்டாயிற்று. அந்த ஒரே கட்டிலில் கண்ணுச்சாமி, அவன் மனைவி, குழந்தை ஆகிய மூவரும் உறங்கிக் கொண்டிருப்பார்கள் என்பதில் அவனுக்குச் சந்தேக மிருக்கவில்லை. அருகே வேறு படுக்கையே இல்லாததால் அவன் எண்ணம் உறுதிப்பட்டது. அவனுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்பட்டது.

அடிமேலடி வைத்துக் கட்டிலை நெருங்கிச் சென்றான். திடீரெனக் கட்டில் அசைவு கண்டது. தூக்கத்தில் யாராவது புரண்டு படுத்திருக்கலாம் என்று நினைத்தான். ஆனால் "யாரது?" என்று மெல்லிய குரல் ஒன்று கேட்கவே அவனுக்குத் 'திகீர்' என்றது. திகைத்துப் போய் அசைவற்று நின்றான்.

அடுத்த விநாடி கட்டிலில் கொசு வலைக்குள் யாரோ எழுந்து உட்காருவது தெரிந்தது. ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து குத்திவிடலாமா என்று அவன் நினைத்தான். ஆனால் கால்கள் ஏனோ நகர மறுத்து விட்டன.

'டக்'கென்று மின்சார விளக்கின் பித்தானை அழுத்தும் ஓசை. உடனே அந்தக் கூடம் எங்கும் ஒளி பரவி நின்றது.

கட்டிலிலிருந்து தொப்பென ஓர் உருவம் கீழே குதித்தது. உடனே நல்லசாமி அந்த உருவத்தை நோக்கிப் பாய்ந்தான். ஆனால் திடீரெனச் செயலிழந்து கல்லாகச் சபிக்கப் பட்டது போல நின்று எதிரே நின்ற உரு வத்தை விளக்கொளியில் பார்த்தான்.

சுமார் ஏழு வயதுகூட நிரம்பாத சின்னஞ் சிறு பெண் குழந்தை ஒன்று சித்திரப்பாவை போல நின்று நல்லசாமியைப் பார்த்தது.

நல்ல சிவந்த மேனி. இடுப்பில் நீல நிறப் பட்டுப் பாவாடையும், மேலே அதே நிறச் சட்டையும் அணிந்திருந்தாள். கண்களில் தூக்க மயக்கம் இன்னும் கலையவில்லை. கண் களைக் கசக்கிவிட்டுக் கொண்டு இரண்டடி முன்னால் எடுத்து வைத்து நல்லசாமியின் முன்னால் வந்து நின்று அவனை உற்றுக் கவனித்தாள். பிறகு எதையோ புரிந்து கொண்டதுபோலத் தலையை ஒரு தடவை உலுக்கிவிட்டுக் கொண்டு "நீ வந்தாச்சா!" என்று தெளிவான குரலில் கேட்டாள்.

நல்லசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒன்றும் புரியாமல் விழித்தான்.

"நீ வருவாயென்று எனக்குத் தெரியுமே" என்று புன்னகையுடன் மெதுவாகத் தலையை ஆட்டினாள் அந்தக் குழந்தை.

"எப்படித் தெரியும்......?" என்று விதிர் விதிர்த்துப் போய்க் கேட்டான் நல்லசாமி.

"நான்தான் இப்போ கனவிலே பார்த் தேனே! ஆகாசத்திலே இருந்து ஒரு நட்சத்

நிரம் மெதுவாகக் கீழே இறங்கி வந்தது. அதிலே நீ இருந்தாய். நீ மேலே நட்சத்திரத்திலே இருக்கிறப்போ என்னுட்டம் சின்னப் பிள்ளையா இருந்தே. கீழே வர வரப் பெரிய ஆளா மாறிப் போய் விட்டாய். எனக்குத் தெரியாதா என்ன?'' என்று கூறிவிட்டு வெள்ளி மணி ஒலிப்பது போலக் கலகலவென்று அவள் நகைத்தாள்.

வந்த காரியத்தைக் கூட மறந்து சிரித்தான் நல்லசாமி. பிறகு "உன் பெயர் என்னம்மா?'' என்று கேட்டான்.

"நல்லகண்ணு என்று எனக்குப் பெயர். இந்தப் பெயர் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. எனக்கும் அப்பாவுக்கும் ரொம்பவும் பிடித்திருக்கு...'' என்றுன் சிறுமி.

"உன் அப்பா-அம்மா எங்கே?''

"கீழே படுத்திருக்காங்க. இன்றைக்கு எனக்குக் கோபம். அதனாலே நான் மட்டும் தனியாக வந்து படுத்துக் கிட்டேன்...''

"உனக்குப் பயமாக இல்லையா?''

"பயமா? பக்கத்து வீட்டு ஜிம்மி கிட்டே கூட எனக்குப் பயம் கிடையாதே!''

"என்னைப் பார்த்தால் கூட உனக்குப் பயமாக இல்லையா?''

"இல்லையே!'' என்று உதட்டைப் பிதுக்கி விட்டுத் திரும்பியவள் பக்கத்தில் மேஜை மீது மூடி வைக்கப்பட்டிருந்த சிற்றுண்டித் தட்டைப் பார்த்து விட்டு, "நீ சாப்பிட்டாச்சா?'' என்று கேட்டாள்.

"நீ இன்னும் சாப்பிடவில்லையா?'' என்று வியப்புடன் கேட்டான் நல்லசாமி.

"அதுதான் கோபம் என்று சொன்னேனே. ஐஸ்கிரீம் வேணும்னு கேட்டேன். ராத்திரியிலே சாப்பிடக் கூடாதென்று அம்மா சொல்லி விட்டாங்க. அப்பா சாப்பிடலாம் என்று சொல்லிக்கூட அம்மா ஐஸ்கிரீம் கொடுக்கவில்லை. அதுதான் கோபம். சாப்பிட முடியாதுன்னு மேலே வந்துட்டேன். எனக்குக் கோபம் வந்தா இங்கேதான் தனியாகப் படுத்துக்குவேன். அப்போதான் நிறைய கனவெல்லாம் வரும். ஒரு நாள் கனவிலே ஆகாயத்திலே இருக்கிற நிலா என்னைப் பார்த்துக் கலகலவென்று சிரித்ததே!''

பால் வடியும் அந்த முகத்தின் சிவந்த உதடுகள் அவள் பேச்சுக்கு ஏற்பக் குவிந்தும் சுருங்கியும் இயங்கிய அற்புதக் காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்றான் நல்லசாமி.

குழந்தை, நல்லசாமிக்கும் தனக்கும் இரண்டு தட்டுகளில் பரிமாறினள். நல்லசாமியைத் தரையில் உட்கார வைத்து அவனுக்கு எதிரில் ஒருதட்டை நகர்த்தி வைத்துவிட்டு இன்னொரு தட்டுடன் உட்கார்ந்தாள். இருவரும் சாப்பிட ஆரம்பித்தனர்.

"நட்சத்திர லோகத்திலே எல்லாரும் என்ன சாப்பிடுவாங்க...?'' என்றுள்.

"இதே மாதிரி சாப்பாடுதான்.''

"இல்லே. பொய். மேகம் இருக்கே, அதைப் பிடித்துச் சமைத்துச் சாப்பிடுவாங்க. உம், எனக்குத் தெரியாதா? என்னை ஏமாற்றப் பார்க்கிறயே...''

நல்லசாமி சிரித்தான். குழந்தை அவன் இடுப்பில் செருகியிருந்த கத்தியைப் பார்த்து விட்டது. "அது என்ன? எடு பார்க்கலாம்.''

"அது கத்தி.''

"இவ்வளவு பெரிசாயிருக்கே, இது ஏன்? மேகத்தைப் பிடித்து அறுக்கவா!''

"இல்லே, கொலை செய்ய.''

வாய் தவறி இதைச் சொல்லிவிட்ட நல்லசாமி நாக்கைக் கடித்துக் கொண்டு திருதிருவென்று விழித்தான்.

"கொலையா? கொலை செய்கிறவன் கொலைபாதகன் என்று படித்திருக்கிறேனே!''

"நான் கொலை பாதகன் தான்!'' என்று நடுங்கும் குரலில் கூறிவிட்டுத் தலை கவிழ்ந்து கொண்டான் நல்லசாமி.

"அப்போ, நீ கொலைகாரனு? உன்னை எனக்குப் பிடிக்கவில்லை. நீ நட்சத்திரத்துக்கே போய்விடு'' என்று கோபத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டு கட்டிலில் ஏறி உட்கார்ந்து கொண்டாள் நல்லகண்ணு.

அந்தச் சின்னஞ்சிறு ஆத்மாவின் கோபம் அவன் மனத்தில் என்னவோ ஒரு வேதனை உணர்ச்சியை உண்டாக்கியது. "இனிமேல் அப்படியெல்லாம் செய்யவே மாட்டேன்''

என்று அவனுக்கு முன்னால் சென்று நின்று கொண்டு கெஞ்சினான் நல்லசாமி.

"அப்போ இங்கே வா. நான் சொல்லுகிற மாதிரி என் கையில் அடித்துச் சத்தியம் செய்யணும். சத்தியம் செய்துவிட்டு ஏமாத்தினியோ, கடவுள் கண்ணைக் குத்திவிடுவார்."

நல்லசாமி சத்தியத்துக்குத் தயாரானான். குழந்தை ஆரம்பித்தாள் :

"சாமி சத்தியமா, சரஸ்வதி சத்தியமா, பூமாதேவி சத்தியமா நான் கொலை செய்ய மாட்டேன் என்று சொல்லு."

நல்லசாமி அக் குழந்தை சொன்னபடியே சொல்லிக் கையடித்துக் கொடுத்தான்.

"அப்போ, எனக்குத் தூக்கம் வருகிறது. நீ நட்சத்திரத்துக்கே போகப் போறியா?"

"ஆமாம்......"

"எப்படிப் போவே. பறப்பியா? எங்கே கொஞ்சம் பறந்து காட்டு. பறப்பதற்கு இறக்கை இல்லியே உனக்கு?"

"இப்படியே என்னால் பறக்க முடியாது. மேலே போய்த்தான் பறக்கணும். நீ இங்கேயே இருந்து பாரேன்......"

"இன்னொரு தரம் எப்பவாவது வருகிறயா? வருவதற்கு முன்னாலே கனவிலே சொல்லிவிடு. நான் அம்மாவிடம் கோவிச்சுக்கிட்டு இங்கே வந்து படுத்துக்குவேன்."

"ஆகட்டும்" என்று கூறிவிட்டுத் திரும்பினான் நல்லசாமி. வரும்போது மனத்தில் அழுத்திக் கொண்டிருந்த பெரும்பளு எங்கோ மறைந்து மனமே இலேசாகவும் உல்லாசமாகவும் இருப்பது போல அவனுக்குப் பட்டது. வாழ்க்கையில் பயங்கரமான ஒரு திருப்பத்தில் தவறிப்போய்க் காலடி வைக்க இருந்த அவனைத் திருப்பிச் சரியான பாதையில் விட்ட அந்தச் சின்னஞ்சிறு உருவத்தின் சக்தியை எண்ணி வியக்காமல் இருக்க அவனால் முடியவில்லை. குழந்தையின் கனவும் அதனால் அவனுக்கு ஏற்பட்ட கனிவும் அவன் மனத்தில் நிறைந்திருந்தன.

கைப்பிடிச் சுவருக்குப் பக்கத்தில் இருந்த வேப்பமரக் கிளையில் பாய்ந்து ஏற அவன் முயன்றபோது "நல்லசாமி..." என்று தெளிவாக அழைத்த ஒரு குரல் அவனைத் திகைக்க வைத்தது. நிச்சயம் அக்குரல் சிறுமியினுடையதல்ல! மெல்லத் திரும்பினான்.

நடுத்தர வயதுடைய ஒருவன் கம்பீரமாக நின்று கொண்டிருந்தான். நல்லசாமி அவனை ஒரு முறை தலையிலிருந்து கால்வரை கவனித்துப் பார்த்தான்.

கண்ணுச்சாமி வியப்புக்குறி முகத்தில் தோன்ற நல்லசாமியைப் பார்த்தான்.

"உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். வா. என்னைக் கொலை செய்து விடுவதனால் உனக்கு ஆத்ம திருப்தி ஏற்படுமாயின் நான் தயாராக இருக்கிறேன்."

தழதழத்த குரலில் கூறினான் கண்ணுச்சாமி. அவன் கண்களில் நிரம்பிய நீர்



மின்சார விளக்கொளியில் முத்துக்கள் மாதிரி பிரகாசித்தன. ஒன்றும் புரியாமல் அசைவற்று நின்றான் நல்லசாமி. சிறுமி அவர்கள் இருவரையும் தன் அகன்ற விழிகளால் மாறி மாறிப் பார்த்தாள்.

"ஏழு வருடங்களுக்கு முன் நடந்த அந்த துர்ப்பாக்கிய நிகழ்ச்சி மன்னிக்க முடியாத அவ்வளவு பயங்கரமானதுதான் என்பதை உடனே நான் உணர்ந்து கொண்டேன். ஆனால் நான் மனிதன்தானே? சுயநலபுத்தி என் மனத்தில் திடீரென மேலெழுந்து நின்றதை என்னால் அடக்க முடியவில்லை. என்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமாயின் உன்னைக் காட்டிக் கொடுத்துதான் ஆகவேண்டும் என்ற நிலை ஏற்பட்டபோது என்னால் தவிர்க்க முடியவில்லை. நானே குற்றத்தை ஒப்புக்கொண்டு விடலாமா என்று சில சமயம் எண்ணினேன். அதனால் ஒருவித பயனும் விளைய முடியாது. இரண்டு பேரும் சேர்ந்துதான் சிறையில் வாட நேரிடும். மேல் கோர்ட்டில் உனக்காக அப்பீல் செய்யலாமென்றால் உன்னைக் காட்டிக் கொடுத்தவன் நான். அதனால் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. என் பாவச் செயலை எண்ணி மனத்துக்குள் புழுங்குவதைத் தவிர என்னால் வேறொன்றும் இயலவில்லை. உன்னுடைய நினைவாகத்தான் என் அருமைக் குழந்தைக்குக் கூட 'நல்ல கண்ணு' என்று பெயர் வைத்திருக்கிறேன்......"

கண்ணுச்சாமியின் பேச்சை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த நல்லசாமி ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டான். "என் வாழ்க்கை பாழாகி விட்டது. இனி உன்மீது கோபித்துக் கொள்வதில்தான் என்ன லாபம்..." என்று ஏக்கக் குரலில் கூறினான்.

"ஏன் பாழாக வேண்டும்? எனக்குள்ள திரண்ட செல்வத்தில் சரி பாதி உனக்குச் சொந்தமானது தானே."

"அதனால் என்ன பயன்? என்னுடைய அன்பு மனைவி போய்விட்ட பிறகு......"

கண்ணுச்சாமி பர பரப்புடன் "உன் மனைவியும், குழந்தையும் என்னுடைய ஆதரவிலேயே சுகமாக இருக்கின்றனர். அவர்களுக்குத் தனி வீடுகட்டிக் கொடுத்து, தகுந்த வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறேன். உன் வரவைத்தான் அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். உன்னுடைய நன்னடத்தையால், நீ சிறையில் நடந்து கொண்ட பெருந்தன்மையால் உன்னுடைய தண்டனைக் காலம் முடியு முன்பே உன்னை அனுப்பி விட்டார்கள் என்ற செய்தி இன்று காலையில்தான் எனக்கே தெரிந்தது. உன் மனைவியும் குழந்தையும் உன்னை அடுத்த மாதம்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றான்.

நல்லசாமி மகிழ்ச்சிப் பெருக்கால் கண்ணுச்சாமியைக் கட்டிக் கொண்டு "ஆய்ந்து யோசியாமல் கொலை பாதகம் செய்ய இருந்தேனே!" என்று மெய்மறந்து கூவினான்.

"அப்போ, நீ நட்சத்திர லோகத்துக்குப் போகப் போறதில்லை, இல்லையா?" என்று அந்த நிகழ்ச்சியின் உண்மை புரியாமல் அகன்ற விழிகளால் அவர்களை வியப்புடன் நோக்கியவாறு கூறினான் நல்லகண்ணு.

# படித்துப் பாருங்கள்!

## குறுந்தொகை விருந்து

சங்க காலத்துச் சான்றோர்களாற் பெரிதும் பாராட்டப் பட்ட பெருமை வாய்ந்த பழம் பெரு நூல் குறுந்தொகை. அது வாழ்க்கையின் இன்பப் பகுதியைச் சுவையுடன் கூறும் நானூறு அகவற் பாக்களைக் கொண்ட அரிய நூல்.

குறுந்தொகையிலிருந்து இருபத்து நாலு பாடல்களை ஆதாரமாகக் கொண்ட கட்டுரைகள் சித்திரங்களுடன் இந் நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன. சுவை மிகு தமிழில் எழுதப்பட்டிருக்கும் இக் கட்டுரைகள் பாராட்டுக் குரியவை என்பதில் ஐயமில்லை. ஆக்கியோன்: அ. கருணையாண்டிப் பாவலர், முருக நிலையம், கோம்பை போஸ்டு, (மதுரை மாவட்டம்) விலை ரூ. 1.

## பாரதி

சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பத்திரிகை, தற்காலத் தமிழ் வசன நடையின் தந்தையான பாரதியாரின் பெயரைத் தாங்கிக் கொண்டு, வெளியாகியிருப்பது சாலப் பொருத்தமான தல்லவா! இப்பத்திரிகையின் இரண்டு இதழ்கள் சிறப்பாக வெளிவந்திருக்கின்றன. இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வெளியாகும் இந்தப் பத்திரிகையின் ஆசிரியர், திரு வெ. சாமிநாத சர்மா. (இவ்வாண்டு சிறப்பாக நடந்த தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில் எழுத்தாளர்களால் கேடயம் அளித்துக் கௌரவிக்கப்பட்டவர்.) இவரை ஆசிரியராகக் கொண்ட பத்திரிகை அறிவியல் வளர்ச்சிக்கு உகந்த முறையில் சிறப்பாக நடைபெறுமென்று எதிர்பார்க்கலாம்.

முதல் இதழின் முதல் கட்டுரை சங்கத்தின் பிறப்பையும் வளர்ச்சியையும் பற்றி விளக்குகிறது. சங்கத்தின் கௌரவத் தலைவர்கள், தலைவர், துணைத் தலைவர், உப தலைவர்கள், கமிட்டி அங்கத்தினர்கள், பொது அங்கத்தினர்கள் முதலியவர்களின் பெயர்கள் யாவும் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் எழுத்தாளர்களுக்குப் பயன்படும் பல ருசிகரமான செய்திகளும் கட்டுரைகளும் காணப்படுகின்றன. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு இப் பத்திரிகை இலவசமாக அனுப்பப்படுகிறது. எழுத்தாளர்கள் மட்டுமின்றி எழுத்துக் கலையில் ஆர்வமுள்ளவர்களும் வாங்கிப் படித்துப் பயன் பெறலாம். வருட சந்தா ரூ. 1. கிடைக்குமிடம்: காரியதரிசி, சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மவுண்ட் ரோடு, சென்னை - 2.

## கிராமவாசி

இந்தப் பத்திரிகை, "உழவர் நலனுக்கும் உற்பத்திப் பெருக்கிற்கும் உழைக்கும் மாத மிரு முறை இதழ்" என்று பறை யறைந்துகொண்டு வெளியாகி யிருக்கிறது. இப் பத்திரிகையின் முதல் இதழின் தலையங்கத்தில், "கிராம மக்களின் முன்னேற்றமே தேசத்தின் முன்னேற்றம்" என்று சந்தேகத்துக் கிடமின்றி ஆணித்தரமாகக் கூறப்பட்டிருக்கிறது. உழவர் நலனுக்காக உழைத்து வரும் திரு ஜி. நாராயணசாமி நாயுடு எம். எல். ஏ. இப் பத்திரிகையின் ஆசிரியராக விளங்குகிறார் என்றால் கிராம மக்களுக்குப் பயன்படும் பத்திரிகையாகவே இருந்து விளங்கும் என்பதில் என்ன சந்தேகம்! கிடைக்குமிடம்: 2, புதுத்தெரு, மாயூரம்; வருட சந்தா. ரூ. 3; தனிப்பிரதி: அணா 4.

## குஹாஞ்சலி

பக்திப் பெருக்கில் உலகத்தை மறந்து, உற்றாரை மறந்து, தம்மை மறந்து, தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானைத் தமிழ்ப் பாடல்களினால் வழிபட்டிருக்கிறார், பித்துக்குளி முருகதாஸ். பல ராகங்களில், பல வர்ண மெட்டுகளில் ஆண்டவனை மனமுருகித் துதித்திருக்கிறார். இடையிடையே இறைவனின் அருட் பெருக்கினையும் அவனது வித்தை வடிவங்களையும் பற்றி உரை நடையிலும் ஆங்காங்கே எழுதியிருக்கிறார். உதாரணத்துக்கு ஒரு பாட்டு:

"கொஞ்சு தமிழ் மொழித் தேவன்—அவன்
கோல மயிலினைப் பாடு

வஞ்சனைப் பாடித் தமிழின்—நல்ல
வாசகத்தைக் கெடுக்காதே"

கிடைக்குமிடம்: ஸாதனா சமாஜ், 31/10, ரங்கநாதம் தெரு, தியாகராய நகர், சென்னை—17 விலை: ரூ. 1—8—0.

Edited. Printed and Published by R. Krishnamurthy at the "Kalki Press,
No. 20. Dr. Guruswamy Mudaliar Road. Kilpauk. Madras 10.

# நாள் முழுவதும்



காலை வேளையில்



# புத்துணர்ச்சி



பிற்பகலில்



# அளிக்க . . .



இரவில்






குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கெ பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு நேர்த்தியான [illegible] தயாரிப்புகள்

ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.



HBP. 10-50 TM

[illegible] இந்தியாவில் தயாரித்தவை

**Regd. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*



# நாளுக்கு நாள் அதிக தெளிவான, எழிலோங்கும் சருமம்




கலந்த ரெக்ஸோனு இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்.



ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும், தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள். அதனால் புதுப்பொலிவுடன் விளங்குவீர்கள்.



## ரெக்ஸோனு

### கேடில்* கலந்த சோப் இதுவொன்றே




* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP. 118-50 TM